# SEEING IS BELIEVING?










**BRING THIS ADVERTISEMENT AND GET 10% EXTRA DISCOUNT**

**DEALERS IN:** HYDERABAD PEARLS (BLACK, PINK, WHITE, ROUND, MIKIMOTO, OVEL, BUTTON, RICE) REAL ITALIAN CORELS (ROUND, OVEL, PINK, THALI, FLOWERS, TUBE) CHINA JADE MALAS, REAL RUBY, EMERALD, SAFFIRE, CUT AND ROUND MALAS, NAVARATNA STONES AND MALAS, LUCKY BIRTH STONES, AMERICAN DIAMOND SILVER JEWELLERY (BANGLES, TOPS, RINGS, NECKLACE SETS, PENDANT SETS, CHOKER, BRACE LETS, RANIHAR SETS, SHAJAHAW SETS, LONG HARAMS), GOLD RUBY, EMERALD NECKLACE SETS, ONE GRAM AND TWO GRAMS GOLD BANGLES, ANTIQUE IMPORTED 40 COLOUR BEEDS, PEARLS AND GEM WATCHES, SEMI-PRECIOUS STONE MALAS (GARNET, JADE)

**CHUDDIHAR, DRESSMATERIAL, SALWAR KHAMEEZ, GAGAR, MIDI, TOPS, NIGHTIES.**

**EACH PURCHASER WILL GET FREE ASTROLOGICAL ADVICE.**

ALL MASTER, VISA, DINERS CARDS ACCEPTED.
SPECIAL DISCOUNT FOR ALL CREDIT CARD HOLDERS

SPECIAL OFFER AVAILABLE FROM
1.12.2000 TO 31.12.2000

| PURCHASE AMOUNT | SPECIAL GIFT |
|---|---|
| Rs.250/- | ONE CORAL(P) GANESH |
| Rs.500/- | GUN METAL DRISTI RING |
| Rs.1000/- | ONE THALI CORAL |
| Rs.1500/- | AMERICAN DIAMOND SILVER RING |
| Rs.2500/- | NAVARATNAN STONE SET WITH AD |
| Rs.5000/- AND ABOVE | REAL CHINA JADE MALA PAIR OF CHINA JADES FOR STUD |

**ADDITIONAL OFFER : 10% FREE MEMBERSHIP DISCOUNT (5 YEARS VALID) CARD FOR EACH AND EVERY PURCHASER.**

## LAXMI MUTHU MAALIGAI

SHOP No.8, KASI ARCADE,
GROUND FLOOR,
THYAGARAYA ROAD, T. NAGAR,
CHENNAI -17 Ph: 8220856

## SRI SARAVANA MUTTHU MAALIGAI

157/203, RK MUTT ROAD,
MANDEIVELI, CHENNAI.

# கேட்கக் கிடைக்கும கே.க



சென்னையில் இசை விழா சூடு பிடிக்கிற சமயம் சித்ரவீணை ரவிகிரண் 'ஜில்'லென்று லண்டனில் பரிசு வாங்கப் போய்விடுவார்!

மில்லெனிய கொண்டாட்டமாக பி.பி.ஸி.யின் ஃபில்ஹார்மோனிக் இசைக்குழு (ஆர்க்கெஸ்ட்ரா) இந்த ஆண்டு முழுதும் இசை நிகழ்ச்சிகள் நடத்தியதாம். பிரிட்டனின் நான்கு முக்கியமான நகரங்களில் நடத்தப்பட்ட இந்த நிகழ்ச்சிகளுள் ஒன்று ரவிகிரணின் தயாரிப்பு.



ஆண்டு முழுதும் நடந்த நிகழ்ச்சிகளுள் ஐந்து மட்டும் மறுமுறை மேடையேற தேர்வாகியுள்ளன. அந்த 'ஒன்ஸ்மோர்' கோரிக்கையை ஏற்றுத்தான் லண்டன் செல்கிறார் ரவிகிரண்.

'மில்லெனியம் ஃபெஸ்டிவல் 2000' என்ற இந்த இசை விழாவில் மிகச் சிறந்த இசையமைப்புக்கான பரிசையும் பெறப் போகிறார்.

இந்தப் பரிசு ஒலிம்பிக்ஸில் தங்கப்பதக்கம் போல் மிகப் பெரிய தர முத்திரை. காரணம், மில்லெனியம் ஃபெஸ்டிவலுக்கு அழைக்கப்பட்டவர்கள் உலகின் தலைசிறந்த கலைஞர்கள் மட்டுமே.

"பைட் பைபர், ட்ரம்மார்ஸ் அஃப் அயர்லன்ட், ராக்பேன்ட் போன்ற குழுக்களுடன் எங்கள் குழுவையும் 'ஒன்ஸ்மோர்' கேட்டிருக்கிறார்களே!" என்கிறார் ரவிகிரண். குழுவினர்: ஜூலியன் கிரகேரி, மாத்யூ காம்ப்டன், ஃப்ரான்ஸிஸ்பை, பீட்டர் வில்மோட், சுக்விந்தர் சிங், சுபாஷ் சந்திரன்.

ஃபில்ஹார்மோனிக் இசைக் குழுவினர் ஓர் இந்திய இசை அமைப்பாளருடன் இணைந்து செயல்பட்டது இதுவே முதல் முறையாம்.

ஆரம்ப பயத்தைப் போக்க முதலில் அரை மணி நேரம் ஸோலோவாக வாசித்துக் காட்டி 'டானிக்' அளித்திருக்கிறார் ரவிகிரண். அதன் பிறகு பயிற்சி - மிகக் கடுமையான பயிற்சி! மார்ச், ஜூலை, அக்டோபர்

என்று மும்முறை ரிஹர்சல் பார்க்க லண்டன் போய் வந்திருக்கிறார். அக்டோபரில் அவருடைய மெல்-ஹார்மனி நிகழ்ச்சி நான்கு நகரங்களில் நடந்திருக்கிறது.

மெல்-ஹார்மனி...? மேலை நாட்டு சாஸ்த்ரீய இசையின் முக்கிய குணாம்சம் ஹார்மனி எனப்படும் பல குரல்கள் அல்லது வாத்தியங்களின் இணைந்த பொழிவு. இந்திய இசையில் இதற்கு மாறாக, ஒரு நபரின் குரல் அல்லது வாசிப்புதான் பிரதானம். பக்கவாத்தியங்கள் அவரை அடியொற்றும். நேர்மாறான இரு முறைகளையும் பின்னிப் பிணைக்க முயற்சி செய்து அபாரமான வெற்றி கண்டிருக்கிறார் ரவிகிரண். 'ஃப்யூஷன்' என்று பொதுவாக நம்மவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகளில் இந்திய இசையின் ஜீவனான கமகம் காவு கொடுக்கப்பட்டு விடும்.

ஒரு ராகத்துக்கு ஜீவன் அளிக்கும் குழைவு, நெளிவு, களிவு என்று கமகத்தைச் சொல்லலாம். அது பாதிக்கப்படும்போது இந்திய இசை தனித்தன்மையை இழந்துவிடும்.

இதற்காக ரவிகிரண் பெரிதும் முயன்று ஃபில்ஹார்மோனிக் குழுவினருக்கு கமகங்கள், சங்கதிகள் என்று இந்திய இசையின் அடிப்படைகளைக் கற்றுத் தந்து வாசிக்க வைத்திருக்கிறார். அவர்களும் புரிந்துகொண்டு வாசித்து விட்டு மகிழ்ந்திருக்கிறார்கள்.



அது மட்டுமல்ல, பி.பி.ஸி கலைஞர்கள் தாங்களே ஒரு கர்னாடக இசை ராகமாலிகை இயற்றி வாசித்துக் காட்டியிருக்கிறார்கள்! அதையும் நிகழ்ச்சியில் ஓர் இட்டமாகச் சேர்த்துக் கொண்டுவிட்டார் 'தலைவர்' ரவிகிரண்!

"மெல்ஹார்மனி முயற்சியில் பிரதான இட்டம் – 'கே.கே. ஸ்வீட் (K.K.Suite) அதாவது கரஹரப்ரியா பிளஸ் கல்யாணி" என்கிறார் ரவிகிரண்.

இந்தியாவில் கேட்கக் கிடைக்குமா கே.கே.ஸ்வீட்...?

- சாருகேசி



''அரசியல் கட்சித் தலைவரை இசை விழாவைத் துவக்கி வைக்கச் சொன்னது தப்பாப் போச்சு!''

''என்னாச்சு?''

''பாடகர் பார்த்தசாரதி அவர்களே... மிருதங்கம் மூர்த்தி அவர்களே... வயலின் வனஜா அவர்களே... மோர்சிங் மோகன் அவர்களே... கடம் கண்ணன் அவர்களே... கஞ்சிரா கணேசன் அவர்களே மற்றும் தம்புரா தாமோதரன் அவர்களே...ன்னு இழுத்துட்டார்!''

- புளியரை கணேசன்

''இப்பல்லாம் எதிர் வீட்டு ஏகாம்பரம் நம்ம வீட்டுக்கு ஓசி டெலிபோன் பண்ண வர்றதில்லையே!''

''அவர் ஓசி டெலிபோன் பண்ண வர்றப்போ, நாம் அவருக்கு காப்பி கொடுத்து உபசரிக்கலேங்கிற கோபமாம்!''

கு. அருணாசலம்





''எதுக்கு தலைவர் அவசரமா ஒரு கார்பெண்டரை அழைச்சி வரச் சொல்றார்?''

''அவர் நாற்காலி ஆட்டம் காணுதுனு எதிர்க்கட்சிக்காரங்க சொன்னாங்களாம்.''

- எஸ். தமிழ்மணி

# நீங்கள் கேட்டவை - தராசு



• யுத்த நிறுத்தம்



• நூலைத் தேடி



• பின்னணி பிணைப்பு

• வாழ்க்கை விளக்கம்





• வியட்நாம் விஜயம்

● சியாமளா சுவாமிநாதன், வல்லக்கடவு ★

*? பத்திரிகைத் துறையில் வெளி நாட்டு முதலீடு மற்றும் பங்குகள் மறுக்கப்பட்டது பற்றி உங்கள் கருத்து என்ன?*

! சரியான முடிவுதான். உள்நாட்டுப் பத்திரிகை அதிபர்கள் பலரே வாசகர் கூட்டத்தை வியாபாரக் கேந்திரமாகப் பார்க்கும்போது வெளிநாட்டுப் பத்திரிகை முதலாளிகள் அதை முழுக்க முழுக்க பணம் பண்ணும் வழியாகத்தான் காண்பார்கள். வளரும் நாட்டின் சமுதாய அமைப்புக்குப் பெருங்கேடு உண்டாகும்.

● கே. பட்டு, கும்பகோணம்

*? சமையல் காஸ், மண்ணெண்ணெய் விலை குறைப்பு குறித்து...?*

! பம்மாத்து வேலை. ஐம்பது ரூபாய் ஏற்றி பத்து ரூபாயைக் குறைத்து மம்தாவைத் திருப்திப்படுத்தலாம். ஆனால் குடும்பத் தலைவிக்குத் தலைவலி தீராது.

● மல்லிகை மன்னன், மதுரை - 17

*? வியட்நாம் மீது விஷ குண்டுமழை பொழிந்து நாசமாக்கிய அமெரிக்காவை மன்னித்து, அமெரிக்க ஜனாதிபதி கிளின்டனுக்குச் சிவப்புக் கம்பளம் விரித்து வரவேற்பு கொடுத்திருக்கும் வியட்நாம் நாட்டின் பெருந்தன்மை நம்மைப் புல்லரிக்க வைக்கிறதே தலைவா?*

! நடந்தவற்றுக்கு வருந்தி கிளின்டன் அமெரிக்கா சார்பாக மன்னிப்பு கோரியிருந்தால் அந்தத் தேசத்தின் பெருந்தன்மையும் வெளிப்பட்டிருக்கும். போகட்டும், இனி நடப்பது அந்நாட்டுக்கு நல்லதாகவே அமையட்டும்.

● வி.என். குமாரவேல், வேலூர்-6 ❑

*? ஐந்நூறு நக்சலைட்டுகள் த.மா.கா.வில் சேர்ந்திருக்கிறார்களே? கட்சி உருப்படுமா?*

! மனம் மாறுவதற்கு வாய்ப்பு தருவதுதான் மனிதம். எனவே, எச்சரிக்கையுடன் தொண்டர்களாக ஏற்கலாம். கட்சிப் பதவி என்பது அவர்களின் செயல்பாட்டைக் கண்காணித்த பிறகு முடிவு செய்ய வேண்டிய விஷயம்.

## த.மா.காவில்

● எஸ். அப்துல்லா அஹ்மது, நாகூர்

*? இந்தியாவுக்கு இன்று பெருமை சேர்ப்பது எது?*

! காஷ்மீர் எல்லைப் பகுதியில் வாஜ்பாய் அறிவித்துள்ள தன்னிச்சையான யுத்த நிறுத்தம். முஜாஹிதீனின் ஒரு பிரிவும், லஷ்கரும் மட்டம் தட்டினாலும் உலக அரங்கில் இந்தியாவின் மதிப்பை உயர்த்துகிறது இந்த அறிவிப்பு. ஆனால், நம் ராணுவம் அசந்து விடக் கூடாது. பாகிஸ்தான் கூலிப்படைகள் எந்தப் பக்கமும் சாயும், எந்தப் பக்கமும் பாயும்!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.

*? முன்னாள் அமைச்சர் பரமசிவத்துக்கு வருமானத்துக்கு அதிகமாக சொத்து சேர்த்த வழக்கில் இரண்டாண்டு கடுங்காவல் தண்டனை கிடைத்திருப்பது பற்றி?*

! அ.தி.மு.க.வின் ஊழல் ஊர்வலத்தில் மற்றொரு அவமானக் காட்சி, வீரப்பன் விவகாரம் காரணமாக பின்னணிக்குப் போய் விட்டது. இதில் முன்னாள் அமைச்சரைக்



• மகேசனாலும் முடியாது!



• சவுக்கடி தீர்ப்பு

காட்டிலும் முன்னாள் முதல்வர்தான் அதிக மாக வெட்கப்பட வேண்டும். ஆனால், துடைத் துப் போட்டுவிட்டு, பதிலுக்குத் தி.மு.க. அமைச் சர்கள் பேரில் வழக்குப் போடுவதில்தான் கவனமாக இருக்கிறார் அவர்.

● **எம். சிவகுருநாதன், சென்னை - 42**

***? ஹிந்து மதத்துக்கு அதிகாரபூர்வமாக (பைபிள், குரான், கிரந்தம் போல்) ஒரே நூல் கிடையாது என்கிற கி.வீரமணியின் கருத் துக்கு உங்கள் விளக்கம் என்ன?***

! பட்டியலுக்குள் அடக்க முடியாத நமது பக்தி இலக்கிய, நீதி நூல்களின் உள்ளடக்கத்தைக் கண்டு பிரமித்து இப்படிச் சொல்கிறார் போலும்.

# 500 நக்சல்கள் சேர்ந்திருக்கிறார்களே?

● **ப. இராம் முருகன், சென்னை - 68**

***? சீர்மிகு காவல் நிலையங்கள் பற்றி...?***

! வேலிக்கு நடப்பட்ட சில சவுக்குக் கட்டைகள் மட்டும் சீராக உள்ளன. மற்றவைதான் உளுத்துப் போயிருக்கின்றன என்பது போன்ற அபத்தமான அறிவிப்பு. எல்லா காவல் நிலை யங்களுமே சீராக செயல்பட வேண்டியது ரொம்ப ரொம்ப ரொம்ப முக்கியம்.

● **கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு**

***? ஒரு வாதத்துக்காக, ஊழல் நடந்ததாக வைத்துக் கொண்டால்கூட, நாட்டில் பணப் புழக்கம் இருந்ததே. அதைத்தான் மக்கள் பெரிதாகப் பேசுகிறார்கள். அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட் டும். நமக்குத் தொந்தரவு இல்லாமல் ஆட்சி நடத்தினார்களே என்றுதான் மக்கள் சொல் கிறார்கள் - இவ்வாறு தமிழரசி நடராஜன் பேசி யுள்ளது குறித்து தராசுவின் கருத்து என்ன...?***

! பொது வாழ்க்கைக்கு வந்துவிட்டதாகச் சொல்லும் ஒருவரின் பொறுப்பற்ற பேச்சு. இத் தகையவர்களிடம் ஆட்சி ஒப்படைக்கப்படு மானால் மக்களை மகேசனால்கூட காப்பாற்ற முடியாது. உஷார்!

● **ஆ. அழகேஷ், பூதப்பாண்டி**

***? நல்லவன்தான் பெரும்பாலும், ரெளடியாக மாற்றப்படுகிறான் என்று கூறுவது சரிதானே?***

! எல்லோர் மனத்திலும் ஒரு மிருகம் இருக்கிறது. சிலரிடம் அது உறங்குகிறது. சிலரிடம் ஓடி விளை யாடுகிறது. உறங்குவதும் ஓடி விளையாடுவதும் சந்தர்ப்ப சூழ்நிலையைப் பொறுத்துதான்.

● **இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு**

***? உங்கள் அபிமான பாடகர்?***

! பலர் இருக்கிறார்கள். அவர்கள் இணைந்து பாடிய ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர் பாடல்கள் அடங்கிய முதல்தர நிகழ்ச்சி சமீபத்தில் வானொலியில் மறு ஒலிபரப்பாகக் கேட்டு மகிழ்ந்தேன். பின்னணி இசை இயற்றிப் பிணைத்தவர் ஜி.எஸ்.மணி. இணைப்பு உரை மூலம் பாகவதரைப் புரிய வைத்தவர் ஹரிகேச நல்லூர் வெங்கட்ராமன்.

● **தி.சு. பாலசுப்பிரமணியன், பாளையங்கோட்டை**

***? நேர்மையான அதிகாரிகளுக்கு இது கஷ்டகாலம் என்கிறாரே எம்.எஸ்.கில்!***

! இல்லை என்று நிரூபித்திருக்கிறாரே ஜோன் அல்ப் ஆர்க்! - பெயரைப் பாருங்க!

● **கே. ராஜேந்திரன், மருதாடு**

***? மனிதன் எதற்காக உயிர் வாழ்கிறான்?***

! பிறர் வாழ்வை மலர்விக்க தன்னால் இயன்ற அனைத்தையும் செய்வதற்காக என்கிறார் காண்டேகர்.

● **கே. நாராயண பாலகிருஷ்ணன், சென்னை**

***? முதுமை சுமையா? சுகமா?***

! பெரும்பாலான கவிகள் முதுமையைச் சுமை யாகத்தான் குறிப்பிடுகிறார்கள், ஒரே ஒரு விதிவிலக்கு வாக்கியம் : grow old gracefully; for the best is yet to come.

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
**வி.என். குமாரவேல்,**
4, கிழக்கு பிரதான சாலை,
காந்தி நகர், வேலூர்-6

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
**சியாமளா சுவாமிநாதன்,**
42/902 (5), செப்பில் தெரு,
ஸ்ரீவராஹம், திருவனந்தபுரம் - 8.



# "இன்ஃபோசியன்ஸ்!"

பெங்களூருக்கு 'பூங்கா நகரம்' என்ற பெயர் போய் 'மென்பொருள் பூங்கா நகரம்' என்ற பெயர் வந்து ஒரு யுகமாகிவிட்டது. இன்று அதிலும் ஒரு புரட்சி. ஹொஸூர் ரோடில் 'இன்ஃபோசிஸ் சிட்டி' என்ற ஒரு மென் பொருள் நகரம் புதிதாக உருவாகியிருக்கிறது.

நாற்பத்து நான்கு ஏக்கர் பரப்பில் ஏழரை லட்சம் சதுர அடி பரப்பில் கட்டடங்களைக் கட்டி இருக்கிறது இன்ஃபோசிஸ் நிறுவனம். செலவு 320 கோடி ரூபாய். தனித் தனியாய் பன்னிரண்டு கட்டடங்கள். உலகின் மிகப் பெரிய சாஃப்ட்வேர் சர்வீஸ் வளாகம் என கின்னஸ் சாதனைப் புத்தகத்தில் இடம் பெறப் போகிறது இந்த சிட்டி.

ஒரே நேரத்தில் ஆயிரம் பேருக்குப் பயிற்சியளிக்க வசதிகள் கொண்ட டிரெயினிங் சென்டர். ஒரே சமயத்தில் இருபத்து நாலு மையங்களிலிருந்து வீடியோ கான்பிரன்ஸ் நடத்த சௌகரியமான தொழில்நுட்ப வசதி. பத்தாயிரம் புத்தகங்கள் கொண்ட முப்பதாயிரம் ச.அடி நூலகம் மற்றும் ஈகாமர்ஸ் வளாகம் என்று ஏகப்பட்ட விசேஷங்கள். இந்தப் புது நகரத்தில் சாப்பாட்டுக்கென்று நாலு உணவு விடுதிகள்.

வளாகத்துக்கு நகரின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பணியாளர்களை அழைத்து வர பஸ் என்பது போய், வளாகத்துக்குள்ளேயே பிரத்யேக பஸ், தவிர சைக்கிள்கள், இதர வாகனங்களும் உள்ளன. மழையில் நனையாமல் தப்பிக்க ஆங்காங்கே நிறைய குடைகள்! இப்படிப் பலவித சௌகரியங்களுடன் தனியுலகில் வசிக்கும் இன்ஃபோசிஸ் ஊழியர்கள் தங்களைப் பெருமையாக 'இன்ஃபோசியன்ஸ்' என்று அழைத்துக் கொள்ளுகிறார்கள்.

உடல் நலம், பொழுதுபோக்கு அம்சங்களுக்கும் ஜிம், விளையாட்டுத் தளங்கள், (ஐம்பதாயிரம் சதுர அடி) நீச்சல்குளம் என்று வசதிகள் உண்டு.

இன்போசிஸ் சிட்டி துவக்கவிழாவில், கர்நாடக முதல்வர் எஸ்.எம்.கிருஷ்ணா உட்பட கூடியிருந்த நாலாயிரம் பேரும் எழுந்து நின்று கைதட்டி இன்ஃபோசிஸ் தலைவர் நாராயணமூர்த்தியைக் கௌரவித்தபோது அவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர்.

கிருஷ்ணா சாஃப்ட்வேர் சிங்கங்களைக் கண்போல் காக்கிறார். சமீபத்தில் நாராயணமூர்த்தியின் வீட்டில் தடபுடலான செக்யூரிட்டி டரில் நடத்தியது மாநில அரசு.

- லட்சுமி

# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

**உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்**

| திருவனந்தபுரம் | நாகர்கோவில் |
|---|---|
| நாள் : 4, 5 டிசம்பர், 2000.<br>ஹோட்டல் ஹைலேண்ட்,<br>கான்ஃபரன்ஸ் ஹால் (முதல் தளம்),<br>மஞ்சகுளம் ரோடு, தம்பனூர்,<br>திருவனந்தபுரம் - 695 001.<br>தொலைபேசி :<br>333200, 333416. | நாள் : 6 டிசம்பர், 2000.<br>ஹோட்டல் ப்ளு ரெஸிடென்ஸி,<br>கான்ஃபரன்ஸ் ஹால் (முதல் தளம்),<br>தளவாய் தெரு,<br>(T.T.C. பஸ் நிலையம் அருகில்),<br>மீனாட்சிபுரம், நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 29694, 29695. |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

## எங்களின் அடுத்த டெபாசிட் திரட்டும் முகாம்கள்

| | |
|---|---|
| விழுப்புரம் | குரு திருமண நிலையம்<br>நாள் : 15 டிசம்பர், 2000. |
| நெய்வேலி | ஹோட்டல் ராதா<br>நாள் : 16 & 17 டிசம்பர், 2000. |

## 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,
காலாண்டிற்கு வட்டி 12.12%.

## 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்
அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648, ஃபேக்ஸ் : 044-4982894.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com /




# கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

## குவிஸ் போட்டி—4

**நா**லாவது போட்டியில் கேள்விகள் சினிமா தொடர்பானவை. ஜமாய்ச்சுடுவீங்கன்னு தெரியும். எல்லா கூப்பன்களும் பத்திரமாய் இருக்கட்டும். இருபத்தாறு வார இறுதியில் கடைசித் தேதி அறிவிக்கப்படும். அது முடியும் முன்னர் எல்லா கூப்பன்களிலும் விடைகளை எழுதி அனுப்பி வைக்க வேண்டும்.

மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியாக விடை எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம்** பரிசு!

**ஐரோப்பா பயணம்** – இரண்டாவது பரிசு

**மலேஷியா–சிங்கப்பூர் பயணம்** – மூன்றாவது பரிசு.

மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கலில்தான் பரிசு முடிவாகும். பயணப் பரிசு பெறாதோருக்கு அமரர் கல்கியின் புத்தகங்கள் பரிசாக வரும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

### குவிஸ் கூப்பன்—4

1) 'காந்தி' திரைப்படத்தில் யாருடைய வேடத்தை ரோகிணி ஹட்டங்காடி ஏற்று நடித்தார்?

2) 'வீரபாண்டிய கட்டபொம்மனில்' வி.கே. ராமசாமி எந்த பாத்திரமாக நடித்தார்?

3) 'ஹே ராம்' படத்தில் நசிருதீன் ஷா ஏற்ற வேடம் யாருடையது?

4) 'கப்பலோட்டிய தமிழன்' திரைப்படத்தில் எஸ்.வி. சுப்பையா யாராகத் தோன்றினார்?

5) 'தியாக பூமி' திரைப்படத்தை இயக்கியவர் யார்?

6) 'பாரதியார்' படத்தில் தேவயானி ஏற்ற வேடம் எது?

**விடைகள்:**

1)............................................

2)............................................

3)............................................

4)............................................

5)............................................

6)............................................



# சாதனைகளை மிஞ்சும் வேதனைகள்!

பிரசார மேடை

**கா**ங்கிரஸ் கட்சியில் 1996ல் இருந்த தொண்டர்களும், தலைவர்களும், அப்போது பிரதமராகவும், காங்கிரஸ் தலைவராகவும் தமிழகத்தில் இருந்த நரஸிம்மராவிடம் காங்கிரஸ் தனித்து நிற்க வேண்டியுதன் அவசியத்தை வலியுறுத்தினார்கள். ஆனால் ராவ் அதை ஏற்க மறுத்ததால் மூப்பனார் தலைமையில் சில தலைவர்கள் காங்கிரஸை விட்டு விலகினார்கள். காங்கிரஸுக்குத் தேர்தலில் படுதோல்வி! 1998 பாராளுமன்றத் தேர்தலில், நாங்கள் ஐக்கிய கம்யூனிஸ்ட் கட்சியோடும், எம்.ஜி.ஆர். அ.தி.மு.கவோடும், தமிழ்நாட்டில் மட்டும், கூட்டணி வைத்துப் போட்டியிட்டோம். ஆனால் கட்சியின் மத்திய தலைமையும், மாநிலத் தலைமையும் மக்களிடையே செல்வாக்கு பெற முடியாதவையா இருந்தன. காங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட வேட்பாளர்களும் ''போட்டியிடத் தகுதியுள்ளவர்கள்தானா?'' என்ற கேள்வியும் எழுந்தது. கட்சியும் போதிய பணத்தைச் செலவு செய்ய முடியவில்லை. போட்டியிட்ட வேட்பாளர்களில் ஆறு பேர் மட்டுமே ஐம்பதாயிரத்துக்கும் அதிகமாக வோட்டு வாங்க முடிந்தது. அந்த சாதகமற்ற சூழலிலும், மொத்தத்தில் ஏழு சதவீத வாக்குகளை காங்கிரஸ் பெற்றது.

1999ல் அ.இ.அ.தி.மு.க.வோடு கூட்டு சேர்ந்து பாராளுமன்றத் தேர்தலைச் சந்தித்தோம். காங்கிரஸ் இரண்டு இடங்களில்தான் வெற்றி பெற முடிந்தது. இதற்குக் காரணம் காங்கிரஸ் - அ.இ.அ.தி.மு.க கூட்டணி ஒருங்கிணைந்து உற்சாகத்தோடு



**ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்,**
**தலைவர்,**
**தமிழ்நாடு காங்கிரஸ்.**



''முனியம்மா, சாயங்காலம் ஒரு ஆறு மணிக்குக் கொஞ்சம் வீட்டுக்கு வந்து வேலை செஞ்சு குடுக்கிறியா?''

''எனக்கு நெறைய 'அப்பாயிண்ட்மெண்ட்' இருக்குமா. நாலு மணிக்கு என் மொபைல் நம்பர்ல டெலிபோன் செய்... அப்போ சொல்றேன் வர முடியுமா, முடியாதன்னு...''

— அகமதாபாத் பாண்டு

வேலை செய்யவில்லை என்பதுதான்.

வர இருக்கின்ற தமிழக சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் - அ.இ.அ.தி.மு.க கூட்டணி கடந்த தேர்தல்களில் நடைபெற்ற தவறுகளைத் திருத்தி உளப்பூர்வமாக ஒன்றாக இணைந்து செயல்பட்டால் நல்ல பலன் கிடைக்குமென்பது என் நம்பிக்கை. பா.ஜ.க என்கிற மதவாத இயக்கத்தால் நாட்டில் ஆங்காங்கே ஏற்படும் கலவரச் சூழலையும் ஒருமைப்பாட்டுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தையும் தேர்தலின்போது மக்கள் முன் வைப்போம். காமராஜ் ஆட்சிக் காலத்தில் போடப்பட்ட மக்கள் நலத் திட்டங்கள்தான் இன்றைய வளர்ச்சிக்கு அடிப்படை என்பதையும் எடுத்துச் சொல்வோம். விலைவாசி விஷம் போல் ஏறியிருக்கிறது. மக்கள் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைக்குக் காரணம் மத்திய, மாநில அரசுகள்தான். குறிப்பாக சமையல் வாயு, பெட்ரோல், டீசல், கெரஸின் போன்றவற்றின் விலையை, கடந்த ஓராண்டில் மூன்று முறை உயர்த்தியுள்ளனர். இதனால் ஏழை எளிய மக்கள் மட்டுமல்ல; நடுத்தர மக்களும் பாதிக்கப்பட்டுள்ளனர். தமிழகத்தில் சட்டம் - ஒழுங்கு பிரச்னையும் கேலிக்குரியதாகி இருக்கிறது. சிறுபான்மை மக்களின் வழிபாட்டுத் தலங்கள் தாக்குதலுக்கு உள்ளாகி இருக்கின்றன. பிரதமர் வாஜ்பாய் ஒரு ஸ்வயம் சேவக் என்று சொல்லிக்கொண்டது அரசியல் சட்டத்துக்கு விரோதமானது. பெரியாரின் வாரிசுகள் என்று சொல்லிக் கொள்ளும் திராவிட இயக்கங்கள், மதச் சார்புடைய மத்திய அரசுக்கு வெண் சாமரம் வீசுவது அவமானம். இவர்களின் முகமூடியைக் கிழிக்கும் விதத்தில் எங்கள் பிரசாரம் அமையும்.

தி.மு.க ஆட்சியில் சாதனைகளை விட வேதனைகள்தான் அதிகம். மற்றவர்களை நோக்கி ஊழல் என்று கைநீட்டும் இவர்கள் ஆட்சியில், மேல் மட்டம் துவங்கிக் கீழ் மட்டம் வரை நாள்தோறும் நடைபெறும் ஊழலை மக்கள் நன்கு அறிவார்கள். தன்னுடைய அமைச்சரவையில் பங்கு வகிக்கும் அமைச்சர் மீதே ஊழல் தடுப்பு வழக்குப் பதிவு செய்தாக வேண்டிய நிலையில் அரசு இருக்கிறது என்ற நிலையே, இந்த ஆட்சியில் எவ்வளவு பெரிய ஊழல்கள் நடந்துகொண்டிருக்கின்றன என்பதற்கு எடுத்துக்காட்டு. இந்த அரசுக்குப் பதவிக்காலம் முடிகின்ற நிலையில் விவசாயிகள், நெசவாளர்கள் பிரச்னை தீர்க்கப்படாமல் உள்ளது. பெரிய இடத்தில் உள்ளோரின் சூழ்ச்சி காரணமாக சிமெண்ட் விலை உச்சாணிக் கொம்பில் இருக்கிறது. இதன் காரணமாக ஆயிரக்கணக்கான கட்டுமானத் தொழிலாளர்கள் வேலை வாய்ப்பை இழந்துள்ளனர். ஒரு சாதாரண வார்டு தேர்தலில்கூட வெற்றி பெற வேண்டும் என்ற வெறித்தனத்துடன் கள்ள வோட்டுகளைப் போட்டு ஜனநாயகத்தைப் படுகுழியில் தள்ளியது ஆளும்கட்சி.

தேசிய அளவில் இன்று வடக்கே காஷ்மீர் - டாக்கிலிருந்து தெற்கே குமரி வரை இருக்கும் ஒரே கட்சி காங்கிரஸ்தான். நேரு குடும்பத்தின் மேல் தமிழக மக்களுக்கு என்றும் பாசம் உண்டு. அந்தவகையில், தமிழகத்தைப் பொறுத்தவரை மக்கள் செல்வாக்கு பெற்ற ஒரே தலைவராக இருப்பார் சோனியா காந்தி. இதற்கு எடுத்துக்காட்டு சோனியா காந்தி தலைமையில் கோவையில் நடந்த காமராஜர் பிறந்தநாள் கூட்டம்.

இத்தகைய மக்கள் ஆதரவை, வரும் தேர்தலில் முறைப்படுத்தி, இழந்த பெருமையை மீட்க கடுமையாக உழைக்க வேண்டுமென்பதுதான் எங்கள் ஆசை!

இப்போது நாங்கள் அ.இ.அ.தி.மு.க கூட்டணியில் இருக்கிறோம். இன்னும் தமிழக சட்டமன்றத் தேர்தல் அறிவிப்பு வெளிவரவில்லை. தேர்தல் அறிவிப்பு வெளி வந்தவுடன், காங்கிரஸ் தலைமை தமிழகத்தில் கூட்டணி அமைப்பது பற்றி முடிவு செய்யும். அதன் முடிவுக்கு ஏற்ப நாங்கள் செயல்படுவோம். எப்படியிருந்தாலும் வரும் சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க ஆட்சியின் மீது சமூகத்தின் அனைத்துப் பிரிவினரும் கொண்டுள்ள அதிருப்தியையும், அதன் ஜனநாயக விரோதப் போக்கையும், ஊழல் மலிந்துள்ள நிலையையும், மேடைகள் தோறும் எடுத்துக்காட்டுவதே எங்கள் பிரசாரத்தின் அடிநாதமாக இருக்கும்.

படம்: ராஜன்

**பக்திநூல்களில் பண்டைக்காலத்து நீதி காணீர்!**

**தெய்வப்புலவர் சேக்கிழார்** அருளிய.

# பெரியபுராணம்

முழுவதும் 2390 பக்கங்கள் 6 தொகுதிகளில் - மூலமும் தெளிவுரையும் ரூ. 600.00

## சலுகை விலை ரூ. 300.00*

**தபாலில் பெற** கடிதம் எழுதுக நூல்களை உடனே V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகைவிலை ரூ.300, தபால் + கட்டுச்செலவு ரூ.40 சேர்த்து ரூ.340 தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக. **முகவரி :** வர்த்தமானன் பதிப்பகம், ஏ. ஆர். ஆர். வளாகம், 141,வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை 17. [ பனகல் பார்க் அருகில்]

**நேரில் பெற** விரும்புவோர் ரூ.300 செலுத்தி நூலினை உடனே பெறலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. (உணவு இடைவேளையின்றி). ஞாயிறு விடுமுறை.

## பண்டைக்காலத்து நீதி

இந்தியத் திருநாட்டில் தற்போது பல துறைகளில் சீர்கேட்டைப் பார்க்கிறோம். ஆனால் ஒரே ஒரு துறை மட்டும் தடம் புரளாமல் அசைக்க முடியாத தூணாக நின்று ஜனநாயகம் என்னும் மாபெரும் மாளிகையைத் தாங்கி நிற்கிறது. அந்தத் துறைதான் நீதித்துறை! இந்த நீதி திடீரென இன்று நேற்றுத் தோன்றியதன்று. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இந்த நீதி எந்த அளவுக்குச் சிறந்திருந்தது என்பதனை இப் பக்தி நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

**சோழர் காலத்து நீதி :** தடுத்தாட்கொண்ட புராணம் அனைவருக்கும் தெரியும். பண்டை நியதிப்படி மண்ணில் மானிடனாய்ப் பிறந்த நம்பியாரூரரைச் சிவபெருமான் தடுத்து ஆட்கொண்ட நிகழ்ச்சி ஏதோ புராணக் கதை அல்ல. ஆழ்ந்து நோக்கினால் பண்டைக் காலத்தில், ஒரு வழக்கில் எப்படிச் சிறப்பாக ஆராய்ந்து தீர்ப்பு வழங்கப்பட்டது என்பது புலனாகும்.

திருமண மேடையில் மாப்பிள்ளையாக ஆரூரர் அமர்ந்திருந்த போது, சிவபெருமான் தொண்டு கிழவனார் வேடம் தாங்கி வந்து, 'உனக்கும் எனக்கும் முன் காலத்திலிருந்து வரும் வழக்கைத் தீர்த்த பின்தான் நீ திருமணம் செய்து கொள்ள முடியும்' என்று கூறினார். 'இந்த மாநிலத்தில் இதற்கு முன் இப்படி ஒரு வழக்கு இல்லையே' என்று அனைவரும் திகைத்தனர்.

அவையோர் அனைவரும் ஆரூரர்க்கே ஆதரவாகப் பேசினர். வந்த கிழவனாரோ வழக்குக்குச் சான்றாக அடிமை ஓலையைக் காட்டினார். ஆத்திரம் அடைந்த ஆரூரர் அதனைப் பற்றி இழுத்துக் கிழித்து வீசி எறிந்தார்.

வழக்குத் தொடுத்த கிழவனார், ஆரூரர் விருப்பப்படி வழக்கைப் புத்தூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்கு மாற்ற ஒப்புக் கொள்கிறார். (இப்போது கூட ஒரு நீதி மன்றத்திலிருந்து வழக்கை வேறொரு நீதி மன்றத்திற்கு மாற்றுவதைக் காண்கிறோம்)

ஆட்சி (அனுபவ உரிமை) ஆவணம் (எழுத்து மூலமான ஆதாரம்) அயலார் காட்சி (கண்ணால் கண்டவர் சாட்சி). 'ஆட்சியில் ஆவணத்தில் அயலார் காட்சி என மூன்றில் ஒன்று காட்டுவாய்' என, இந்த மூன்றில் வேதியர் காட்டியது ஆவணம். (DOCUMENTARY EVIDENCE). 'இவன் புத்தூரில் ஆத்திரத்தில் கிழித்தெறிந்தது நகல் ஓலை; மூல ஓலை இதோ இருக்கிறது' என்றார், அவையோர் முன் அந்தணர். (இதிலிருந்து என்ன தெரிகிறது? எதற்கும் நகலைத் தான் அனுப்ப வேண்டும்; மூலத்தை உரிய நேரத்தில்தான் தர வேண்டும் என்பது தெரிகிறதல்லவா?)

வெண்ணெய் நல்லூரில் வேதபாரகர் முன்னிலையில் வழக்கு வருகிறது. அடிமை ஓலையாகிய ஆவணம் (ஆரூரரின் பாட்டனார் எழுதிக் கொடுத்த அடிமை ஓலை) வேதியர் அவைமுன் வைக்கப் பட்டது. அதிலுள்ள கையெழுத்து நம்பி ஆரூரரின் பாட்டனாருடையது தானா எனச் சரி பார்க்கப்பட்டது. இப்போதும் COMPARISON OF HAND WRITING AND SIGNATURE என்னும் முறை உள்ளதை நாம் அறிவோம். பண்டைக் காலத்தில் சாட்சிக் கையெழுத்தும் ஆய்வு செய்யப் பட்டுத் தீர்ப்புக் கூறப்பட்டது. தற்போதும் இந்த முறை பின்பற்றப்படுகிறது கவனிக்கத்தக்கது.

இத்தகைய நீதி முறைகளைப் புராணம் என்ற பெயரில் அமைந்த பெரிய புராணத்தில் கண்டு மகிழலாம். அனைத்திற்கும் மேலாக அடியார்களின் சிறப்பினையும் இந்நூலில் கண்டு இன்புறலாம்.

*ஸ்டாக் உள்ளவரை மட்டுமே !

# கஸ்டம்ஸைக்

தடய அறிவியல் நிபுணர்
டாக்டர்
பி. சந்திரசேகரன்



'கல்கி' ராமகிருஷ்ணன் சிங்கப்பூரில் தாம் ஏமாற்றப்பட்ட விஷயத்தில் இன்னும் என்ன செய்ய முடியும்?" என்று பலரிடத்தில் விசாரித்திருக்கிறார். சிங்கப்பூர் வழக்கறிஞர்கள் வட்டாரத்தில் என் பெயர் பிரபலமாதலால் "இதில் ஏதோ கோல்மால் நடந்திருப்பதாக நீங்கள் கருதுகிறீர்கள். அப்படியென்றால் விஞ்ஞானபூர்வமாக அதை நிரூபிக்க வேண்டுமென்றால் டாக்டர் சந்திரசேகரை அணுகுங்கள்" என்று சொல்லியிருக்கிறார்கள். உடனே சென்னைக்கு வந்த ராமகிருஷ்ணன் என்னைச் சந்தித்து ஃபாக்ஸ் பிரதிகளிலிருந்து எடுக்கப்பட்டதாகச் சொல்லப்பட்ட மூன்று ஜெராக்ஸ் இன்வாய்ஸ்களை என்னிடத்தில் கொடுத்து, உதவுமாறு கேட்டுக்கொண்டார். நான் அவற்றை ஆராய்ந்தேன். மூன்று ரசீதுகளில் இருந்த ராமகிருஷ்ணன் கையெழுத்தும் புள்ளிக்குப் புள்ளி ஒரே மாதிரியாக இருந்தது. ஒருவர், மூன்று கையெழுத்துக்களைத் தொடர்ச்சியாகவே போட்டால்கூட அவற்றை ஒப்பிட்டுப் பார்த்தால் அவை புள்ளிக்குப் புள்ளி ஒன்றைப் போல் இருக்காது. இயற்கையான மாறுபாடு என்பது கட்டாயம் இருக்கும்! கையெழுத்து என்பது mind(மனது), muscle (தசைகள்), nerve (நரம்புகளின்) ஒருங்கிணைப்பில் மூளைக்கு ஆர்டர் கொடுக்கப்பட்டு கைகளால் போடப்படுவது. கையெழுத்து என்பது அச்சடிப்பது அல்ல.

ராமகிருஷ்ணன் கொடுத்த ஜெராக்ஸ் காப்பி ரசீதுகளில் புள்ளிக்குப் புள்ளி கையெழுத்து ஒரே மாதிரி இருந்ததால் வேறு ஏதோ டாக்குமென்டிலிருந்து trace செய்து மோசடி செய்திருக்கிறார்கள் என்பதை முதலில் கண்டுபிடித்தேன். அடுத்ததாக ரசீதுகளை ஃபாக்ஸில் அனுப்பியதாக சிங்கப்பூர்காரர் சொன்னாரல்லவா? ஃபாக்ஸில் ஓர் ஆவணத்தை அனுப்பினால் அதன் மேலும், கீழும் மின்சாரத்தின் மாறுபாடான ஓட்டம் காரணமாக, சற்று மேடு பள்ளமான கோடுகள் இருப்பதற்கான வாய்ப்புகள் உண்டு. ஃபாக்ஸில் அனுப்பப்படும் ஆவணங்களைப் பார்த்தால் அதில் தெரியும் கோடுகள் நேர்க்கோடுகளாகவே இருக்காது. ஆங்காங்கே விட்டுவிட்டும், சற்று மேலும் கீழுமாக இருக்கும். ஆங்கில 'S' எழுத்து ஃபாக்ஸில் அதன் இயல்பான வளைவுகளுடன் வராது. வளைவுகள் சதுரமாகக் காட்சி தரும். ஒரு ஒரிஜினல் ஆவணத்திலிருந்து எடுக்கப்பட்ட ஜெராக்ஸ் பிரதிக்கும் ஃபாக்ஸ் பிரதியிலிருந்து எடுக்கப்பட்ட ஜெராக்ஸ் பிரதிக்கும் இதுபோன்ற காரணங்களால் மிகச் சுலபமாகவே வித்தியாசங்களைக் கண்டுபிடிக்க முடியும்.

எனவே நான் ஒரு முடிவுக்கு வந்தேன். ஃபாக்ஸில் நகை பெற்றுக் கொண்டதற்கான ரசீதை திருச்சியிலிருந்த ராமகிருஷ்ணன் அனுப்பியதாக சிங்கப்பூர்க்காரர் சொல்வது அப்பட்டமான பொய். அவர் என்ன செய்திருக்கிறார் என்றால், ராமகிருஷ்ணனின் ஒரிஜினல் கையெழுத்தை வேறு ஏதோ ஆவணத்திலிருந்து வெட்டி எடுத்து அதை மூன்று ரசீதுகளிலும் ஒட்டி ஜெராக்ஸ் எடுத்துவிட்டார். ராமகிருஷ்ணன் வெவ்வேறு இடங்களில் போட்ட ஒரிஜினல் கையெழுத்தை மோசடி செய்ய உபயோகித்திருந்தால்கூட கண்டுபிடிப்பது சிரமமாக இருந்திருக்கக் கூடும். ஆனால் ஒரே கையெழுத்தை மூன்று இடங்களில் பயன்படுத்தியதால், இயற்கையான மாறுபாடுகள் இல்லாத காரணத்தால், மாட்டிக்கொண்டார்.

சிவில் கேஸில் தோற்றுப்போன ராமகிருஷ்ணனிடம் என்னுடைய அறிக்கையைக் கொடுத்து



• டயானா

இளவரசர் சார்லஸை மணந்ததன் மூலம் உலகத்துக்கு அறிமுகமானவர் டயானா. இங்கிலாந்து அரசு குடும்பத்தினரின் சிறு அசைவுகூட பத்திரிகைகளில் பெரிதுபடுத்தப்படும். அப்படியிருக்க சார்லஸுடன் கருத்து வேறுபாடு கொண்டு பிரிந்து வாழ்ந்த டயானாவைப் பத்திரிகைகாரர்கள் பின் தொடர்ந்ததில் ஆச்சர்யம் இல்லை. அவர் யாருடன் சுற்றுகிறார் என்பதை அவ்வப்போது பத்திரிகைகள் வெளிச் சம்போட்டுக் காட்டி வந்தன. இந்த நிலையில் திடீரென்று ஒருநாள் பாரீஸ் நகர சுரங்கப்பாதையொன்றில் நடந்த விபத்தில் டயானா பலியானார் என்ற செய்தி எல்லோ ரையும் அதிர வைத்தது.

பாரீஸ் ஓட்டல் ஒன்றில் தனது ஆண் நண்பருடன் விருந்து சாப்பிட்ட டயானாவை பப்பராஸிகள் எனப்படும் ஃப்ரீலான்ஸ் போட்டோகிராபர்கள் படமெடுக்க எத்தனிக்கவே அவர்களிடமிருந்து தப்பிப்பதற்காக ரிட்ஜ்

# கலக்கிய 'கம, கம' கடத்தல்!

கோர்ட்டில் தாக்கல் செய்து கிரிமினல் கேஸ் போடுமாறு ஆலோசனை சொன்னேன். அவரும் சிங்கப்பூர் போலீஸில் புகார் கொடுத்து மோசடி வழக்கு போட்டார். சிங்கப்பூர் போலீஸ் என்னிடம் நேரடியாக ரிப்போர்ட் கேட்டது. அவர்களுக்கு என் அறிக்கையைக் கொடுத்தேன். உடனே அவர்கள் சிங்கப்பூர் அரசு செலவில் என்னை அழைத்து கோர்ட்டில் சாட்சி சொல்லச் சொன்னார்கள். நான் சிங்கப்பூர்க்காரர் ஃபாக்ஸ் மிஷின் பெயரைச் சொல்லி எப்படி மோசடி செய்திருக்கிறார் என்பதை விவரமாகச் சொன்னேன். கோர்ட் ஏற்றுக்கொண்டது. கல்கி ராமகிருஷ்ணனுக்கு ஒரு கோடி பணத்தை உடனே கொடுக்குமாறு சிங்கப்பூர்க்காரருக்குக் கோர்ட் உத்தரவிட்டது.

ஓட்டலிலிருந்து வெளியேறி காரில் வேகமாகச் சென்றபோது சுரங்கப்பாதையில் உள்ள தூண் ஒன்றில் கார் மோதி, அவரும், அவரது ஆண் நண்பரும் இறந்து போனார்கள் என்பது செய்தி.

டயானாவின் மரணம் உலகமெங்கும் அனுதாபத்தைத் தோற்றுவித்தது. ஒரு தடய அறிவியல் நிபுணர் என்ற முறையில் அவரது




கார் விபத்துக்குள்ளான காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு ஏற்பட்டது. இது தவிர பல பத்திரிகை நண்பர்கள் போன் செய்து 'எப்படி நடந்திருக்கும்' என்று என்னைக் கேட்டார்கள். இந்த விஷயத்தை ஆராய எனக்குக் கூடுதல் ஆர்வம் வந்ததற்குக் காரணம், எந்தச் சுரங்கப்பாதையில் டயானாவின் கார் மோதி விபத்து ஏற்பட்டதோ அதே சுரங்கப்பாதையில் நூற்றுக்கணக்கான முறை நான் பயணித்திருக்கிறேன். சீன் (Seine) ஆற்றின் அடியில் இருக்கும் அந்த சுரங்கப்பாதையின் அமைப்பு எனக்கு நன்கு தெரியும். 1970களில் பிரெஞ்சுப் பேராசிரியர் செகால்டியின் கீழ் பாரிஸில் சில மாதங்கள் தடய அறிவியல் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தபோது அந்தச் சுரங்கப்பாதை வழியாகத்தான் தங்கியிருந்த இடத்துக்குச் செல்வேன்.

டயானா மரணம் சம்பந்தப்பட்ட செய்திகளைப் பத்திரிகைகளிலிருந்து சேகரித்தேன். செய்தி நிறுவனங்களிலிருந்து வீடியோ கிளிப்பிங்குகளை வாங்கினேன். பிரெஞ்சு ஓட்டல்களின் நடைமுறைகள் எனக்கு நன்றாகத் தெரியும். ஓட்டலுக்கு வருபவர்கள் ரெஸ்டாரெண்டில் அமர்ந்து மது அருந்திக் கொண்டிருப்பதை ரெஸ்டாரெண்ட் மானேஜர் பார்த்துக்கொண்டே இருப்பார். ரத்தத்தில் குறிப்பிட்ட அளவுக்கு மேல் ஆல்கஹால் இருக்கும் நிலையில் கார் ஓட்டுவது ஆபத்து. எந்த அளவுக்கு மேல் ஒரு நபர் குடித்தால் கார் ஓட்ட முடியாது என்பது ரெஸ்டாரெண்ட் மானேஜருக்குத் தெரியும். எனவே ஒரு நபர் எல்லை தாண்டும்போது அவர் உடனடியாக அந்த நபரிடம் சென்று கார் சாவியை வாங்கிக் கொள்ளுவார். ஓட்டலில் spare டிரைவர்கள் இருப்பார்கள். எல்லை மீறி குடித்த அந்த நபரை, spare டிரைவர் வீட்டில் விட்டு விடுவார். இதுதான் அங்கு நடைமுறை.

டயானா கார் விபத்து நடந்த இடம், சாலையிலிருந்து இடதுபுறம் சுரங்கப் பாதையின் உள்ளே செல்லும் இடம். அது மிக அபாயகரமான வளைவு. அங்கு 40 கி.மீ வேகம் தாண்டக்கூடாது என்பது விதி. வீடியோ கிளிப்பிங்குகளைப் பார்த்தபோது, டயானா கார் நூறு கி.மீ வேகத்துக்கும் குறைவாகச் சென்றிருக்காது என்பதை என்னால் அறிய முடிந்தது. பப்பராஸிகள் டயானா காரை வேகமாகத் துரத்திக்கொண்டு வந்திருக்கலாம். அதில் தொழில் தர்மம் இருக்கிறதா இல்லையா என்ற விவகாரத்திற்குள் நான் போக விரும்பவில்லை. ஆனால் டயானா காரை ஓட்டிக் கொண்டு போன டிரைவருக்கு ஒரு பொறுப்பு இருக்கிறது. அவர் குடித்துவிட்டு ஓட்டியது மட்டுமல்ல, வேகக் கட்டுப்பாட்டையும் மீறியதால்தான் அந்த அபாயகரமான வளைவில் திரும்ப முடியாமல், தூணில் மோதி விட்டார். என் கருத்து அப்போது பத்திரிகைகளில் முக்கியச் செய்தியாக வந்தது.

சம்பவம் நடந்தவுடன் அந்த இடத்துக்கு விரைந்த தடய அறிவியல் நிபுணர்கள் காருக்கு ஏற்பட்ட சேதத்தை வைத்து 100 கி.மீ வேகத்தில் சென்றதால் ஏற்பட்ட விபத்து என்று பின்னர் முடிவுக்கு வந்தார்கள். அது போலவே டிரைவரின் குடல் பகுதியைச் சோதனை செய்து பார்த்தபோது நிதானம் தவறுமளவுக்கு ஆல்கஹால் இருந்ததும் தெரிந்தது.

**நா**ன் தடய அறிவியல் துறையில் இயக்குனராக இருந்தபோது சில முக்கிய வழக்குகளில் நானே நேரிடையாக சோதனைச்சாலைகளில் மணிக்கணிக்கில் ஆராய்ச்சி செய்து கண்டுபிடிப்பேன். அந்த வகையில், ஒரு வழக்கு என் நினைவுக்கு வருகிறது. இதனை 'கம கம கடத்தல் வழக்கு' என்று கூடச் சொல்லாம்.

வாசனைப் பொருளான கிராம்பு இந்தியாவில் கேரளாவிலும் தமிழகத்தில் குற்றாலம் பகுதிகளிலும் அதிக அளவில் பயிரிடப்படுகிறது. விலை அதிகம். ஆனால் வெளிநாடுகளான சான்ஸிபாரிலும், மடகாஸ்கரிலும்

விளையும் கிராம்பு மிகவும் மலிவு. சொல்லப் போனால் இந்தியாவில் கிராம்பு விற்கும் விலையில் மூன்றில் ஒரு பங்கு விலைக்கு அந்த வெளிநாட்டுக் கிராம்பு விற்கப்பட்டு வந்தது. இந்த விலை வித்தியாசத்தைப் பயன் படுத்தி, கொள்ளை லாபம் சம்பாதிக்க ஆசைப்பட்டார்கள் கடத்தல்காரர்கள். வெளி நாடுகளிலிருந்து கள்ளத்தனமாக கிராம்பை இறக்குமதி செய்து கொள்ளை லாபத்துக்கு இந்தியாவில் விற்றார்கள். எங்கே இறக்குமதி ஆகிறது என்று தெரியாமல் திணறியது கஸ்டம்ஸ். லாரியில் வரும் கடத்தல் கிராம்பை கஸ்டம்ஸ்காரர்கள் பிடித்தாலும் குற்றாலத்தில் இருந்து வருகிறது என்று போலி தஸ்தாவேஜுகளைக் காட்டினார்கள் லாரிக்காரர்கள்.

பிடிபட்ட கிராம்பு 'இந்தியாவில் விளைந்தது அல்ல' என்று நிரூபிக்க முடியாமல் தடுமாறியது கஸ்டம்ஸ். 'இந்த விஷயத்தில் ஏதேனும் செய்ய முடியுமா?' என்று தடய அறிவியல் துறையின் உதவியை நாடியது .

கிட்டத்தட்ட ஆறு மாத காலம் கிராம்பைப் பற்றி தனி ஆராய்ச்சியே நடத்தினோம். கடத்தலின்போது பிடிபட்ட கிராம்பு, சான்ஸிபார் நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட கிராம்பு, குற்றாலம் எஸ்டேட் கிராம்பு ஆகியவற்றைச் சேகரித்து சோதனை செய்தோம். தட்ப வெப்ப நிலையை ஒட்டி, கிராம்பின் வெளித்தோலின் நிறம் மாறுவது, கிராம்பிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்யில் உள்ள மாறுபாடுகள்; ஆகியவை குறித்து தீவிர ஆராய்ச்சி நடத்தியதில், குற்றாலம் கிராம்புக்கும், சான்ஸிபார் நாட்டுக் கிராம்புக்கும் நிறைய வேறுபாடுகள் இருப்பதைக் கண்டு பிடிக்க முடிந்தது. இப்படி நாங்கள் கண்டு பிடித்ததை அறிக்கையாக கஸ்டம்ஸுக்குக் கொடுத்தோம்.

அடுத்தமுறை கிராம்பு கடத்தல் லாரி பிடிபட்டவுடன் வழக்கம் போல லாரிக்காரன் 'குற்றாலத்துக் கிராம்பு' என்றான். 'அதை நாங்க சொல்றோம்' என்று லாரியை பறிமுதல் செய்து வழக்கு போட்டது கஸ்டம்ஸ். எங்களின் சோதனை அறிக்கையையும் கூடவே தாக்கல் செய்தோம். அது குற்றால கிராம்பு அல்ல. கள்ளத்தனமாக இறக்குமதி செய்யப்பட்ட சான்ஸிபார் கிராம்பு என்று கோர்ட்டில் விஞ்ஞானபூர்வமாக நிரூபித்தோம். அத்துடன் கிராம்பு கடத்தல் நின்றது. அப்புறம் கொஞ்சம் துருவிப் பார்த்ததில் உடந்தையாக இருந்த சில அதிகாரிகளும் மாட்டிக் கொண்டனர்.

(தொடரும்)






2000 டிசம்பர் 3
விக்ரம கார்த்திகை 18
மலர் : 59
இதழ் : 18

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தோற்றால் தலைவலி; வென்றால் திருகுவலி!

**வீ**ரப்பன் விவகாரம் குறித்து வெள்ளை அறிக்கை வெளியிட வேண்டும் என்று பல தரப்புகளிலிருந்து கோரிக்கை வந்திருக்கிறது. ஆனால் ராஜ்குமாரின் விடுதலையைப் பெறுவதற்கு இரு மாநில அரசுகளும் எந்த அளவுக்கு வளைந்து கொடுத்தன அல்லது என்ன விலை கொடுத்தன என்பதெல்லாம் சர்வநிச்சயமாக வெளிவரப் போவதில்லை. எந்தவித பேரமும் நடக்கவில்லை என்று கூறப்பட்டால் அதை நம்புவதற்கும் யாரும் தயாராயில்லை.

பலவிதமான ஊகங்கள், முரண்பட்ட அறிக்கைகள், கேலியான பேச்சுகள், குற்றச்சாட்டுகள் நிலவுகின்றன. தாங்கள் செயலற்றுப் போகவில்லை என்று நிரூபிக்க இரு மாநில அரசுகளும் அதிரடிப்படைகளை வீரப்பன் வேட்டைக்கு அனுப்பிவிட்டன. அதையும் உடனடியாகச் செய்யாமல் ராஜ்குமார் விடுதலைக்குப் பின் ஐந்து நாட்கள் தாமதித்ததற்காக கடுமையான விமர்சனத்துக்கு உள்ளாகியிருக்கின்றன.

உண்மையில், தாமதத்தைக் காட்டிலும் அதிக கவலையும் வியப்பும் அளிக்கும் விஷயம் என்னவெனில் ராஜ்குமார் விடுதலை பெறும் வரை பலமுறை சந்தித்துப் பேசி, திட்டமிட்ட இரு மாநில முதல்வர்களும் இப்போது இரு துருவங்களைப் போல் வெவ்வேறு திசைகளில் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான். இரு மாநில காவல் துறையினருமே அதிரடிப்படையை அனுப்புமுன் ஒருத்தரையொருத்தர் கலந்தாலோசிக்கவில்லை என்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இத்தனை நாட்களாக முயன்றும் பிடிக்க முடியாமல் போன வீரப்பனை இப்போது பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கை இரு அரசுகளுக்கும் எந்த அடிப்படையில் ஏற்பட்டது




என்பது விளங்கவில்லை. அந்த நம்பிக்கையில் அவர்கள் ஏன் இணைந்து இயங்கக்கூடாது என்பதும் புரியவில்லை.

வீரப்பன் வாழும் அடர்ந்த காட்டுப் பகுதியில் புகுந்து தேடுவது கஷ்டம்.

அப்பகுதியின் சுற்றுவட்டார கிராமங்களில் வாழும் மக்கள் வீரப்பனின் ராபின்ஹுட் ராஜ்ஜியத்து விசுவாசப் பிரஜைகள். எனவே அவர்களுடைய ஒத்துழைப்பு காவல் துறைக்குக் கிடைப்பது கஷ்டம்.

தேடச் செல்லும் காவல் துறையினரே வீரப்பனிடம் பிணைக் கைதிகளாவதுண்டு; அல்லது அவனால் இரக்கமின்றிக் கொல்லப் படுவதுண்டு.

- இந்த உண்மைகள் தமிழகமும் கர்நாடகமும் அனுபவபூர்வமாக உணர்ந்தவை.

அப்படியிருந்தும் அவை மீண்டும் அதே முயற்சியில் இறங்கி இருக்கின்றன.

மத்திய உள்துறை அமைச்சர் அத்வானி நீட்டிய உதவிக் கரத்தை இரு முதல்வர்களும் உடனே ஏற்கவில்லை. கிருஷ்ணா மட்டும் தாமதமாக டெல்லி சென்றிருக்கிறார்.

வீரப்பனைப் பிடிப்பதில் கிடைக்கக்கூடிய பெருமை தமிழக காவல்துறைக்கா அல்லது கர்நாடகா காவல் துறைக்கா என்கிற கௌரவப் பிரச்னை முன்னெப்போதைக் காட்டிலும் பெரிதாகியிருப்பதாகவே தோன்றுகிறது.

மத்திய அரசிடம் உரையாடி, ராணுவ உதவி பெற்று வீரப்பன் இருப்பிடத்தைத் தாக்கி அவனைக் கைப்பற்றலாம் என்று இரு மாநில அரசுகளுக்குமே தோன்றாமலிருந்தது பெரும் துரதிர்ஷ்டம்தான்.

சமீப காலமாக தீவிரவாத அமைப்புகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருக்கும் வீரப்பன், அவர்கள் பயன்படுத்தக்கூடிய நவீன ஆயுதங்களையும் கண்ணி வெடிகளையும் உபயோகிக்கக்கூடும். அத்தகைய அபாயங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொண்டு வீரப்பனைக் கைப்பற்றுவது சராசரியான ஆயுதங்களைப் பெற்ற காவல்துறையினருக்கு மிகக் கடினமாக இருக்கும்.




காவல் துறையினர் உயிரிழந்தால் அவர்கள் சார்ந்த அரசுக்குத் தீராத அவப்பெயர் உண்டாகும்.

வீரப்பனைப் பிடிக்க முடியாமல் போய் விட்டாலோ அது அவமானம் மட்டுமல்ல; வேண்டுமென்றே தப்பவிட்டுவிட்டதாகக் குற்றச்சாட்டுகள் எழும்.

தப்பித் தவறி வீரப்பனை நெருங்கிச் செல்ல முடிந்ததெனில், அவனுக்கு ஏற்படக்கூடிய அபாயங்களுக்கோ உயிர்ப் பாதிப்புக்கோ காவல்துறையும் அரசும்தான் பொறுப்பு.

நெடுமாறன் போன்றவர்கள் அந்தக் கடத்தல்காரனைக் கதாநாயகனாகச் சித்திரித்து 'மாவீரன்' நிலைக்கு உயர்த்தி வைத்திருக்கிறார்கள். எளிய மக்கள் இந்தக் கருத்தை எளிதில் வழிமொழிந்து, வீரப்பன் மீது அனுதாபப்படுவார்கள்.

வீரப்பனைக் கைது செய்து அழைத்து வந்தாலோ அவனை ஹீரோவாக்கி நீதிமன்றங்களில் அவன் சார்பில் வழக்காட பல அமைப்புகள் காத்திருக்கின்றன.

ஆக, வீரப்பன் வேட்டையில் 'தோற்றால் தலைவலி; வென்றால் திருகுவலி' என்கிற இக்கட்டில் இரு மாநில அரசுகளும் மாட்டிக்கொண்டிருக்கின்றன.

ராஜ்குமார் விடுதலை என்று அறிந்ததுமே கிருஷ்ணாவும் கருணாநிதியும் அத்வானியுடன் கலந்தாலோசித்து ராணுவ உதவி கோரியிருப்பார்களேயானால், இப்படியொரு சங்கடம் நேர்ந்திராது.

திக்குக்கு ஒன்றாகச் செயல்படும் அதிரடிப்படைகளைக் காட்டிலும் நவீன ஆயுதங்களுக்கும் கண்ணி வெடிகளுக்கும் பழக்கப்பட்டிருக்கும் ராணுவம், வீரப்பனைப் பிடிப்பதற்கான வாய்ப்புகள் அதிகம். சேதமோ இழப்போ, வெற்றியோ, தோல்வியோ, ராணுவத்தின் பொறுப்பாகப் போயிருக்கும்.

ஆனால் இப்போது, வெற்றி உறுதியில்லாத நிலையில் அதிரடிப்படையின் ஒவ்வொரு அசைவும், சம்பந்தப்பட்ட முதல்வர்களுக்குத்தான் மதிப்பெண் போடும். அதிலும் தமிழக முதல்வரின் நிலை மிக நெருக்கடியானது - தேர்தல் பரீட்சை நெருங்கிவிட்டது என்பதால். ●

# சரிவைச் சந்திப்பாரா

சென்னை ராதாகிருஷ்ணன் நகர் தொகுதியில் சமீபத்தில் மண்ணெண்ணெய் டிப்போ ஒன்று திறக்கப்பட்டது. திறப்பு விழாவுக்கு அமைச்சர்கள் நேருவும், சுந்தரமும் வந்திருந்தனர். ஆனால் கூடியிருந்த மக்கள் அவர்களைப் பேச விடவில்லை. தொகுதி சட்டமன்ற உறுப்பினரை எதிர்த்து கோஷம் போட்டுக்கொண்டே இருந்தார்கள். அவசர, அவசரமாக நிகழ்ச்சிகளை முடித்துவிட்டுப் புறப்பட்டுப் போனார்கள் அமைச்சர்கள்.

அவர்கள் போன பிறகு சட்டமன்ற உறுப்பினரை மக்கள் பிலு பிலுவென்று பிடித்துக்கொண்டனர். "பின்ன என்ன ஸார்... இந்த ஏரியாவில் கழிவு நீர், குடிநீரில் கலக்கிறது என்று மாதக்கணக்கில் சொல்லியும் ஒரு நடவடிக்கையும் இல்லை. சுடுகாட்டுக்குச் சரியான வழி கிடையாது. சாலை வசதிகளும் சரியில்லை. 'அமைச்சர்கள் வருகிறார்கள்' என்று சாலைக்கு 'பாட்ச் ஒர்க்' செய்தார்கள். அதுதான் எங்களுக்கு எரிச்சல்' என்கிறார் இலகா நகர் சண்முகம். தொகுதியின் சட்டமன்ற உறுப்பினர் சமூக நலத்துறை அமைச்சர் சற்குணபாண்டியன்! "மற்ற அமைச்சர்கள் வந்திருக்கும்போது ஏன் பிரச்னை பண்ணுகிறீர்கள்? எதுவானாலும் என்னிடம் சொல்லுங்கள்? நான் செய்து தருகிறேன்" என்று அந்த மக்களிடம் சொல்லிவிட்டு வந்தேன். அது போலவே சுடுகாட்டுப் பாதை தவிர மற்றப் பிரச்னைகளை மூன்று நாளில் தீர்த்து மீண்டும் அந்தப் பகுதிக்குப் போனேன். மக்கள் மகிழ்ச்சியுடன் என்னை வரவேற்றார்கள். மண்ணெண்ணெய் டிப்போ திறப்பு விழாவின் போது பிரச்னை உருவாக்கியதற்காக வருத்தப்பட்டார்கள்" என்று நம்மிடம் சொன்னார் அமைச்சர்.



"தொகுதி மேம்பாட்டு நிதியிலிருந்து கங்கச்சாவடி பேருந்து நிலையம் கட்டியது, சத்துணவு கூடங்கள் கட்டியது. கொரந்தபாளையத்தில் ஆதி திராவிடர் குடியிருப்புகளுக்குக் கழிவுநீர் இணைப்பு கொடுத்தது, விளையாட்டுத் திடல், சமுதாயக் கூடம், பெண்கள் பள்ளிக்குக் கட்டடம்' என்று கடந்த நான்கு வருடங்களில் நிறையவே செய்திருக்கிறார். தொகுதியெங்கும் குடிசை மாற்று வாரியத்தால் புதிய குடியிருப்புகள் கட்டப்பட்டு வருகின்றன. ஏற்கனவே கட்டப்பட்ட பழைய குடியிருப்புகள் பழுது பார்க்கப்பட்டு வருகின்றன. சஞ்சய்காந்தி நகர், சேலையம்மன் நகர் பகுதிகளில் சிமெண்ட் சாலைகள் போடப்பட்டிருக்கின்றன. கடற்கரையை ஒட்டியுள்ள ஆறாவது வட்டத்தில் கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டம் செயல்படுகிறது. மூன்று வட்டங்களில் மண்ணெண்ணெய் டிப்போக்கள் திறக்கப்பட்டுள்ளன. எல்லா தெருக்களிலும் தண்ணீர்த் தொட்டிகள் வைக்கப்பட்டுள்ளது மட்டுமல்லாமல் அவற்றில் தினசரி தண்ணீர் சரியாக விநியோகிக்கப்படுகிறதா? என்றும் அமைச்சர் கண்காணிக்கிறார்" என்கிறார் உடன்பிறப்பு ஒருவர். இருப்பினும் ஏரியா மக்களுக்கு ஒரு இனம் புரியாத வெறுப்பு அரசின் மேல் இருக்கிறது.

கொருக்குப்பேட்டை... நெடுஞ்சாலையில் ஹரிநாராயணபுரத்தில் துவங்கி, மணலி புதுநகர்வரை பத்தும் மேற்பட்ட நகர்கள் இருக்கின்றன. இங்கிருக்கும் மக்கள் வேலைக்காகத் துறைமுகம், பாரிமுனை ஆகிய இடங்களுக்குச் செல்ல வேண்டும். இவர்களது பெரிய பிரச்னை பேருந்துகள்தான். ஒரே ஒரு ரூட் பஸ்தான் இங்கு ஓடிக்கொண்டிருக்கிறது.

"தண்டையார்பேட்டையையும், கொருக்குப்பேட்டையையும் இணைக்கும் மேம்பாலம் அ.இ.அ.தி.மு.க ஆட்சி காலத்தில் கட்டப்பட்டது. அமைச்சர் தேர்தல் பிரசாரத்தின்போது, இந்தப் பாலத்தைப் பயன்படுத்தி மணலி புது நகர் வரை நிறைய பஸ் ரூட்கள் விடுவதாகச் சொன்னார். ஒன்றும் நடக்கக் காணும். காலை, மாலை நேரங்களில் அந்தப் பகுதி மக்கள் படும் அவஸ்தையைப் பார்த்தால் கண்ணீர் வரும்" என்கிறார் ராதாகிருஷ்ணன் நகர் வாசியும், வடசென்னை மாவட்ட காங்கிரஸ் தலைவருமான டி.வி. துரைராஜ்.

"மாநகர பஸ் நிர்வாகத்தோடு அமைச்சர் முட்டி மோதிக் கொண்டிருக்கிறார். கூடிய விரைவில் இரண்டு புது பஸ் ரூட்கள் அந்தப் பகுதிக்கு விடப்படும்" என்று நம்பிக்கை தெரிவிக்கிறார் அமைச்சரின் உதவியாளர் ஒருவர். அமைச்சருக்கு என்று சட்டமன்றத் தொகுதி அலுவலகம் இல்லாதது பற்றியும் மக்கள் அலுத்துக் கொள்கிறார்கள்.

"தொகுதிக்கு மத்தியில் ஓர் அலுவலகம் வைத்தால் நாங்கள் புகார் மனு கொடுக்க வசதியாக இருக்கும். இதே தொகுதியில் சட்ட



மன்ற உறுப்பினராக இருந்த மதுசூதனன் இன்னமும் அலுவலகம் வைத்துத் தன்னால் முடிந்த உதவிகளைச் செய்து வருகிறார்'' என்கிறார் நேதாஜி நகர் மணி.

''அமைச்சருக்கு என்று குறிப்பிட்ட வட்டம் இருக்குதுங்க... அவர்கள் சொல்படி கேட்டுக் கொண்டு செயல்படுவார். இங்கு தி.மு.க. விலேயே கூட கோஷ்டிகள் உண்டு. அந்தக் கோஷ்டித் தகராறு காரணமாகவே குடிசை மாற்று வாரியக் குடியிருப்புகள் நெடுநாட்கள் ஒதுக்கப்படாமலேயே இருந்தன'' என்கிறார் செரியன் நகர் கருணாகரன்.

தி.மு.க அமைச்சர்களிலேயே கட்சிரீதியாக சீனியர்களை வரிசைப்படுத்திப் பார்த்தால் முதல் பத்து பேருக்குள் வருவார் சற்குண பாண்டியன். அப்பா ஜஸ்டிஸ் கட்சி, பின்னர்

# சற்குணம்?

திராவிடர் கழக அனுதாபி. எனவே சிறு வயதிலேயே அப்பாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு மாநாடுகள், கூட்டங்கள் என்று சென்ற அனுபவம் அமைச்சருக்கு உண்டு. 12 வயதில் செயின்ட் ஆன்னி பள்ளியில் படிக்கும்போதே தி.மு.க மேடையில் ஏறி விட்டார் அமைச்சர். ஆலிவர் சாலைக்கு மிக நெருக்கம். ஏரியா உடன்பிறப்புகள் 'அக்கா' என்று பாச மழை பொழிகிறார்கள்.

1967ல் அண்ணா ஆட்சிக்கு வந்தபோதே இவருக்கு சில பொறுப்புகளைக் கொடுத்துள்ளார். கட்சியிலும், ஆட்சியிலும் பெண்களுக்குச் சரியான பிரதிநிதித்துவம் வேண்டி அண்ணாவிடத்திலேயே வாதாடியிருக்கிறார். 1989ல் இதே தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராக இருந்தும் அமைச்சராகும் வாய்ப்பு கிடைக்கவில்லை. 'புலி' விவகாரத்தில் சுப்புலட்சுமி ஜெகதீசன் பெயர் கொஞ்சம் ரிப்பேராகவே 1996ல் சற்குண

பாண்டியனுக்குச் சான்ஸ் அடித்தது.

அமைச்சர் இலாகா அள்ளிக் கொடுக்கும் இலாகா. பத்தாம் வகுப்பு படித்து, 18 வயது ஆகியிருக்கும் பெண்களுக்கு மூவலூர் ராமாமிர்தம் அம்மையார் திருமண உதவித் திட்டத்தின் மூலம் 10000 ரூபாய் உதவித் தொகை வழங்கப்படுகிறது. "கடந்த நான்கு வருடங்களில் மட்டும் சுமார் இரண்டு லட்சம் பேருக்கு இந்தத் திருமண உதவித் தொகை வழங்கப்பட்டிருக்கிறது. இது ஒரு சாதனை" என்கிறார் சமூக நலத்துறை அதிகாரி ஒருவர்.

எட்டுவிதமான திருமண உதவித் திட்டங்கள் தமிழக அரசால் செயல்படுத்தப்படுகிறது. மிகவும் பாராட்டத்தக்க ஓர் அம்சம் பெண்கள் சுய உதவிக் குழுக்களை கிராமம் தோறும் அமைத்திருப்பது.

இந்த சுய உதவிக் குழுக்கள், சத்துணவுக் கூடங்களைப் பார்வையிடுவது, கள்ளச் சாராயத்தை ஒழிப்பது போன்ற பணிகளிலும் ஈடுபடுகின்றன. ஐந்து வயது வரையுள்ள குழந்தைகளுக்குச் சத்துணவு போடுவதும் சமூக நலத் துறைதான். "எட்டாவது வரை படிக்கும் மாணவ, மாணவிகளுக்குச் சீருடை கொடுப்பதும் நாங்கள்தான். வருடந்தோறும் 65 லட்சம் செட் சீருடைகள் கொடுக்கிறோம். இந்தச் சீருடை தைக்கும் வேலை மகளிர் கூட்டுறவு சங்கங்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இதன் மூலம் பெண்களுக்கு வேலை வாய்ப்பு உருவாக்கப்படுகிறது. அதேபோல் பால்வாடியில் குழந்தைகளுக்குக் கொடுக்கப்படும் சத்து மாவையும் பெண்கள் குழுதான் தயாரிக்கின்றது. சத்துமாவு தயாரிப்பில் 3000 பெண்களுக்கு மேல் வேலை வாய்ப்பு கிடைக்கிறது" என்றார் சமூக நலத்துறை இயக்குனரக அதிகாரி ஒருவர்.

இவரது இலாகா செயல்படுவதில் தன்னார்வ குழுக்களின் பங்கு அதிகம். அமைச்சரின் அறையில் என்.ஜி.ஓக்களின் கூட்டம் "ஜே...ஜே..." வென்றிருக்கிறது. பல திட்டங்களில் அவர்கள் மூலமாகவோ, அல்லது அவர்களது சிபாரிசின் பேரிலோதான் பயனாளிகளுக்கு நிதி உதவி கொடுக்கப்படுகிறது.

தி.மு.க கூட்டணியில் தொகுதிப் பங்கீட்டில் ராதாகிருஷ்ணன் நகர் வேறு கட்சிக்குப் போகவில்லை என்றால் தொகுதியில் மீண்டும் போட்டியிடும் வாய்ப்பு சற்குணத்துக்குப் பிரகாசமாக இருக்கிறது. ஆனால் அப்படி போட்டியிடும்போது வெற்றிக்கனியைப் பறிக்க அமைச்சர் கடுமையாகப் போராட வேண்டியதாக இருக்கும்.

— ப்ரியன்

படம்: ராஜன்

# INDIAN INSTITUTE OF MANAGEMENT & TECHNOLOGY

*in association with*

# ALL INDIA COUNCIL FOR MANAGEMENT STUDIES

25, Mada Church Road, Mandaveli,
Chennai - 600 028. INDIA Phone : 4956036
Fax : 495 2692 e-mail : icolam@hotmail.com

29, Lazarus Church Road, R.A. Puram,
Chennai - 600 028. INDIA Phone : 4933210
Fax : 493 3259 e-mail : aiicas@hotmail.com

**IIMAT** and **AICOMAS** jointly offer the following **One Year** and **Six Months** Diploma Courses by correspondence

**Eligibility :** No formal qualification (Open Education System). **For Application and Prospectus send Rs. 10/- Postage stamp** to any one of the Institute.

## ONE YEAR DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* MARKETING MANAGEMENT
* TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000 / QS 9000
* MATERIALS MANAGEMENT
* EXPORT & IMPORT MANAGEMENT
* HOTEL MANAGEMENT
* CATERING MANAGEMENT
* BANKING & INSURANCE MANAGEMENT
* TRAVEL & TOURISM MANAGEMENT
* MECHANICAL ENGINEERING
* CIVIL ENGINEERING
* ELECTRICAL ENGINEERING
* ELECTRONICS & COMMUNICATION ENGINEERING

## SIX MONTHS DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* OFFICE ADMINISTRATION
* SALES & MARKETING
* FINANCIAL MANAGEMENT
* RESEARCH & DEVELOPMENT
* INDUSTRIAL RELATIONS & PERSONNEL MANAGEMENT
* HUMAN RESOURCES DEVELOPMENT
* EXPORT & IMPORT MANAGEMENT
* FOREIGN TRADE MANAGEMENT
* MATERIALS MANAGEMENT
* PRODUCTION MANAGEMENT
* FOOD & BEVERAGE MANAGEMENT
* FOOD PRODUCTION MANAGEMENT
* COMPUTERS IN OFFICE MANAGEMENT
* COMPUTER APPLICATION
* HOTEL MANAGEMENT
* BANKING MANAGEMENT
* TEACHER TRAINING EDUCATION
* LABOUR LAWS
* QUALITY CONTROL & ISO 9000
* ADVERTISING & PUBLIC RELATIONS
* NURSING MANAGEMENT
* ENVIRONMENTAL MANAGEMENT SYSTEM & ISO 14000/14001
* INTERNATIONAL BUSINESS MANAGEMENT
* BUSINESS INFORMATION SYSTEM
* MANAGEMENT INFORMATION TECHNOLOGY
* HEALTH & HOSPITAL MANAGEMENT
* HOSPITAL ADMINISTRATION
* EDUCATIONAL MANAGEMENT
* TOTAL QUALITY MMANAGEMENT & ISO 9000
* NETWORKING & INTERNET APPLICATION
* QUALITY ASSURANCE & QS 9000 / ISO 9000
* SOFTWARE CAPABILITY MATURITY MODEL (guidelines for improving software process)
* INTERNATIONAL AIRLINES MANAGEMENT (Affiliated/Recognised by Westwind Aviation Academy, Arizona, USA)
* E-COMMERCE APPLICATION
* WEB DESIGNING APPLICATION
* WEB APPLICATION DEVELOPMENT
* INTERNET & INTRANET SECURITY

We offer Post-Graduate Diplomas also. (Duration - 18 months). Kindly write to any one of the above institute for more information.



# கே.பாவின் நூறு நிமிட மேஜிக்!

"எல்லோரும் ஜாதி, ஜாதி என்று வாய்கிழியப் பேசுவார்கள். ஆனால் ஒரே ஜாதியாகவே இருந்தாலும், அழுக்குவேட்டி அழுக்கு வேட்டிதான்; வெள்ளை வேட்டி வெள்ளை வேட்டிதான்'' என்று 'நச்'சென்று சொன்னது 'அழுக்கு வேட்டி' மைக்ரோ டி.வி. தொடர்! சு. சமுத்திரத்தின் கதையை சுந்தர் கே. விஜயன் இயக்கியிருந்தார்.

இந்த மைக்ரோ தொடர், சின்னத் திரைக்குப் புதுவரவு. ஜவ்வாய் இழுக்கப்படும் மெகா தொடர்களால் சலித்துப் போயிருக்கிற நேயர்களின் மனசை நெருடவும், வருடவும் வந்திருக்கின்றன. மின்பிம்பங்கள் தயாரிக்கும் இந்த மைக்ரோ தொடர்களில் ஒவ்வொரு வாரமும் திங்களன்று ஆரம்பித்து, வெள்ளியன்று கதை முடியும். அடுத்த வாரம் இன்னொரு கதை.



ஜெயகாந்தன், சு. சமுத்திரம், பாலகுமாரன் என்று எழுத்துலக ஜாம்பவான்கள் மட்டுமின்றி பிரபலமில்லாதவர்களின் கதைகளும் இந்தத் தொடரில் இடம் பெறப்போகின்றன.

அதுபோலவே, சுந்தர். கே. விஜயன், 'மர்ம தேசம்' நாகா, 'வேதம் புதிது' கண்ணன் என்று ஒவ்வொரு கதையையும் ஒவ்வொருவர் டைரக்ட் செய்கிறார்கள்.

"டி.வியில் சிறுகதைகள்,



நெடுந்தொடர்கள் தான் பிரபலம். இரண்டுமில்லாமல், மைக்ரோ தொடர்களை எடுக்கும் எண்ணம் எப்படி உருவானது?" என்ற கேள்வியை டைரக்டர் கே. பாலசந்தரிடம் கேட்ட போது,

"ஐடியா கொடுத்தது என் மகன் கைலாசம்தான். இது ரசிகர்களிடம் நல்ல வரவேற்பைப் பெறக் கூடியது என்று நானும் நினைத்தேன். ஓ.கே. செய்தேன்" என்றார்.

"தமிழில், ஐந்து எபிஸோட் எடுப்பதற்கு சௌகரியமான குறுநாவல்கள் அதிகம் வந்தது இல்லையே?"

"சிறுகதைகள், நாவல்கள் அளவுக்குக் குறுநாவல்கள் இல்லை என்பது வாஸ்தவம். ஆனால் ஒரு முக்கியமான விஷயத்தை நான் சொல்ல விரும்புகிறேன். ஐந்து எபிஸோட் சீரியல் என்றால், மொத்தம் நூறு நிமிடங்களுக்கு வரும். எனவே ஒரு கதையில் நூறு நிமிடங்களுக்கு வரும்படி சுவாரசியம் இருக்கிறதா என்பதுதான் முக்கியம். அது சிறுகதையா, குறுநாவலா, முழுநீள நாவலா என்பது ஒரு பொருட்டல்ல. உதாரணமாக, பல வருடங்களுக்கு முன் கலைமகளில் எட்டு பக்கங்களில் வெளியான சிறுகதையொன்றைத் தொடராக எடுத்திருக்கிறோம். மிக நன்றாக வந்திருக்கிறது.

"அவ்வளவு ஏன்? ராமாயணத்தை மூன்று மணி நேர சினிமாவாகவும் எடுக்கலாம்; மூன்று வருட டி.வி. சீரியலாகவும் எடுக்கலாம். நாம் என்ன செய்கிறோம்? அதற்கு எதையெல்லாம் எடுத்துக் கொள்ளலாம்? எதை, எதையெல்லாம் விட்டுவிடலாம்



## டி.வி.க்கு யெஸ்; சினிமாவுக்கு நோ!

மிஸ்.இந்தியா போட்டியில் நாலாவது இடம்; சென்னை மாநகரத்து முன்னணி மாடல் அழகி, டி.வி. நிகழ்ச்சித் தொகுப்பாளி என்ற பழைய முகங்களுடன் சின்னத்திரைக்குக் கிடைத்துள்ள புதுமுகம்தான் காயத்ரி. சினிமா வாய்ப்புகளை மறுத்த இவர், டி.வி. தொடரில் நடிக்க ஒப்புக் கொண்டது எப்படி?

"மாடலிங்தான் என் cup of tea. நடிப்புக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை. எனவேதான் சினிமா வாய்ப்புகளை மறுத்துவிட்டேன். டி.வி. தொடர்களிலும் எனக்கு ஆர்வம் கிடையாது. தையாண்டி தர்பாரில் பங்கேற்கச் சென்றபோது டைரக்டர் கே. பாலசந்தரையும், அவரது மகன் 'மின்பிம்பங்கள்' கைலாசத்தையும் சந்தித்தேன். "புதிதாய் ஆரம்பிக்க விருக்கும் மைக்ரோ தொடரில் நடிக்கிறாயா?" என்றார். "மாடலிங்கில்தான் எனக்கு விருப்பம். நடிக்க ஒப்புக் கொண்டால் நிறைய நாட்களுக்கு 'டேட்ஸ்' தரவேண்டியிருக்கும். என் மாடலிங் வாய்ப்புகளை இழக்க வேண்டியிருக்குமே" என்றபோது, "நாங்கள் எடுக்கப்போவது ஐந்து நாட்களுக்கு ஒரு கதை. எல்லா கதைகளிலும் நடிக்க வேண்டும் என்று இல்லை. ஒருசில நாட்கள் ஒதுக்கினாலே போதும்" என்றார். நானும் ஒப்புக் கொண்டேன்.

"விளம்பரங்களில் நடிப்பது, டி.வி. தொடரில் நடிப்பது என்ன வித்தியாசம்?"

"விளம்பரம் ரொம்ப ஈ.சி. டி.வி. தொடர் அப்படி இல்லை. மேக்அப்பில் கூட வித்தியாசம் உண்டு. விளம்பரங்களில், மேக்—அப் அழகைக் கூட்டுவதற்காக. டி.வி. தொடரில் கேரக்டருக்கேற்றபடி; அதில் வசனங்கள் சொற்பம். இதில் நிறைய பேச வேண்டும்.

என்று முடிவு செய்து கொள்ள வேண்டியது தான் முக்கியம்" என்கிறார் கே.பி.

"**வ**ழக்கமான டி.வி. தொடர்களை இயக்குவதற்கும், மைக்ரோ சீரியல் இயக்குவதற்கும் என்ன வித்தியாசம்?" இந்தக் கேள்வியை டைரக்டர் நாகாவிடம் கேட்டோம்:

"இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை நாள்தோறும் உணர்ந்து கொண்டு இருக்கிறேன். எனக்கு சில விஷயங்களை, காட்சிகளை விஸ்தாரமாகச் சொல்லிப் பழகி விட்டது. இப்போது, சில காட்சிகளை இன்னும் கொஞ்சம் நீளமாய் எடுக்கலாமே என்று தோன்றும். உடனே நான் எடுப்பது மைக்ரோ தொடர். மொத்தமே நூறு நிமிடங்கள்தான்' என்று எனக்கு நானே

அடுத்த இதழிலிருந்து...



**'ரிமோட்!'**

**— வினோத் இயக்கும் புத்தம்புது பகுதி!**

நினைவூட்டிக் கொண்டு காட்சியை நறுக்கென்று அமைத்துவிடுவேன். ஏறத்தாழ சினிமா எடுப்பது போலத்தான் இது" என்று கூறும் நாகாவின் லட்சியம் ஒரு முழுநீள திரைப்படத்தை இயக்க வேண்டும் என்பதுதான்.

'**வே**தம் புதிது' படத்துக்குக் கதை எழுதியதன் மூலம் தன் பெயருடன் அதைச் சேர்த்துக் கொண்ட நாடக கதாசிரியர், டைரக்டர் கண்ணன். நாடகங்களுக்காக ஏழு தடவை விருது பெற்றவர். "எட்டு பக்க கதையை, ஐந்து எபிஸோட் ஆக்குவதற்கு சிரமப்பட்டீர்களா?" என்றால், "இல்லை. அடிப்படையில் நான் ஒரு எழுத்தாளர், வசனகர்த்தா, பதினாறு நாடகங்கள் எழுதிய அனுபவம் எனக்குக் கைகொடுக்கிறது. (லேட்டஸ்ட் நாடகம் குரோர்பதி, அண்மையில் அரங்கேறியுள்ளது) எங்கே எதைச் சேர்த்தால், கதையின் விறுவிறுப்பு கூடும் என்று என்னால் சுலபத்தில் தீர்மானித்து விடமுடியும். அதுவும் நான் எடுத்துக் கொண்டிருப்பது ஃபேமலி சென்டிமென்ட் கதை என்பதால், ஒரு பிரச்னையுமில்லை" என்கிறார்.

"**இ**ந்த மைக்ரோ தொடருக்குப் பிரம்மாண்டமான அளவில் செலவு செய்கிறீர்களே!" என்றால் "இது செலவு என நான் நினைக்கவில்லை; நீண்டகால திட்டத்துக்கு முதலீடு" என்று பதிலளிக்கிறார் கைலாசம்.

"மின்பிம்பங்கள் தயாரிக்கும் இந்த மைக்ரோ தொடர்களில் உங்களின் பங்கு என்ன? வெறும் வர்த்தக நோக்குக்காக உங்கள் பெயரும் சேர்க்கப்படுகிறதா?" என்ற கேள்வியை கே.பி.முன் வைத்தோம்.

"மின்பிம்பங்களில், இரண்டு பேர், பல்வேறு கதைகளையும் படித்து கதைச்சுருக்கம் எழுதி என்னிடம் கொடுக்கிறார்கள். நான் அவற்றிலிருந்து, நூறுநிமிட காட்சிகளுக்கு விஷயம் இருக்கிறதா என்று பார்த்து, தேர்வு செய்கிறேன். மாற்றங்கள் தேவை எனில் சொல்கிறேன். அவசியப்படும்போது தலைப்புகளை மாற்றி மெருகூட்டுகிறேன். உதாரணமாக, 'தரையைத் தொடாத விழுதுகள்' என்ற கதையின் தலைப்பை 'பிளாஸ்டிக் விழுதுகள்' என்று மாற்றினேன். அழுக்கு வேட்டி என்பதுகூட என் ஐடியாதான். ஒரு சிருஷ்டிகர்த்தா என்கிற முறையில் என் பங்களிப்பு நிச்சயம் உண்டு.

"தரமில்லாத சரக்குக்கு எந்த முத்திரை குத்தினாலும் வியாபாரமாகாது. காரணம்: டி.வி. பார்க்கிறவர்கள் கையில் ரிமோட். பார்க்கிற நிகழ்ச்சியில் சின்ன அலுப்பு என்றாலும், ரிமோட்டை அழுத்தி அழுத்தி வேறு சானலுக்குத் தாவிவிடுவார்கள். ஒரு புரோகிராமின் இடையே விளம்பரம் வருகிற போது, சட்சட் என்று நாலு சானல் தாவி நோட்டம் விடுவார்கள். வேறு எதிலாவது சுவாரசியமாக எதையாவது பார்க்க நேர்ந்தால், அவர்கள் மறுபடி பழைய புரோகிராமைப்பார்க்க வருவார்கள் என்பதற்கு உத்தரவாதமில்லை. எனவே, ஒவ்வொரு விநாடியும், நாங்கள் டி.வி. பார்க்கிறவர்கள் மீதான இறுக்கமான பிடிப்பைத் தளர்த்திவிடக்கூடாது. ஆகவேதான் சொல்லுகிறேன். இன்று எங்களுக்குள்ள மாபெரும் சவால் 'ரிமோட்'தான்!" என்கிறார் கே.பி.

**— எஸ். சந்திரமௌலி**

படம்: **ராஜன்**



# கல்கி
# ரமணி Vs ரமணி
## இணைந்து வழங்கும்
## 'தம்பதி தமாஷ்'

## தீபாவளி பரிசுப் போட்டி முடிவுகள்!

**ரூ 15,000 மதிப்புள்ள ஃப்ரிட்ஜ், முதல் பரிசு பெறுபவர்:**

ஆர். அருண்குமார்
33, ரெட்டியார் தெரு,
உப்பிலியாபுரம்,
திருச்சி - 621 011

**ரூ. 7,000 மதிப்புள்ள வாஷிங் மெஷின்களை இரண்டாவது பரிசாகப் பெறுவோர்:**

எஸ். மாலதி,
18/1012, சிங்காரச் சோலை,
டிபெட் ரோடு,
முசிறி 621 211

ஆர். சேகர்,
விஜய் கார்மெண்ட்ஸ்,
பிளாட் எண் D - (3) - 2
மெப்ஸ் வளாகம்
தாம்பரம் சானடோரியம்,
சென்னை 600 045.

**ரூ.2000 மதிப்புள்ள பட்டுப் புடைவைகளை ஆறுதல் பரிசுகளாகப் பெறுவோர்:**

1. ஆர். சுசீலா,
28, சுனில் ஃபிளாட்ஸ்,
மூன்றாவது குறுக்குத் தெரு,
என்.ஜி.ஓ காலனி,
ஆதம்பாக்கம், சென்னை 600 088.

2. ஏ. முஹமது ஹுமாயூன்,
ஜனுபா ஸ்டோர்,
692 A/1, கேப் ரோடு,
நாகர்கோயில் - 629 001.

3. கு. பாஸ்கரன்,
சுகாதார ஆய்வாளர்,
லட்சுமி கிளினிக் (மேல்மாடி)
ராம் நகர், தே. கல்லுப்பட்டி,
மதுரை மாவட்டம் - 625 702.

4. ஜி.எஸ். பாலகிருஷ்ணன்,
ஃபிளாட் 2 ஏ,
14, ராஜகோபாலன் தெரு,
வால்மீகி நகர், சென்னை - 600 041.

5. சக்தி ஏ.ஜே. ஜப்பார்,
514, மெயின் ரோடு,
சத்தியமங்கலம் - 638 401.

6. ஏ.சி. காந்தா,
6/90, மஞ்சு அபார்ட்மெண்ட்ஸ்,
திருவள்ளுவர் தெரு,
கே.கே. நகர், சென்னை - 78.

7. முனைவர் பா. தர்மாம்பாள்,
84, மந்தைவெளி தெரு,
சென்னை - 28.

8. சூர்யா
24/12ஏ, ஸ்ரீராம் நகர்,
ரெட்டிபாளையம் ரோடு,
தஞ்சாவூர் - 613 004.

9. என். செல்வராஜ்,
42, திருமுகமலர்ந்தபுரம்,
சென்னிமலை,
ஈரோடு மாவட்டம் - 638 051.

10. என். பட்டாபிராமன்,
202, குமார் பாரடைஸ்,
வாடியா ரோடு, பசவங்குடி,
பெங்களூர் - 560 004.

போட்டியில் கலந்துகொண்டு திணற டித்த அத்தனை பேருக்கும் கல்கி, மின் பிம்பங்கள் சார்பில் நன்றி!

முதல் பரிசு பெறும் அனுபவக் கட்டுரை பக்கம் 72-ல்.



அந்த அரங்கம் முழுவதும் வாய் பிளந்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தது. தலைக்கு மேலே இரண்டு அடி தூக்கிநின்ற பாம்பு அப்படியே கழுத்திலிருந்து இறங்கி உடலைச் சுற்றி கால்வரை படர்ந்தது. இது நாதர் முடி. நல்ல பாம்பல்ல! சமீபத்தில் சென்னையில் நடந்த 'ஆசிய கூந்தல் அழகுப் போட்டி'யில்தான் இப்படி பாம்பாகி இருந்தது கூந்தல்.

இது மட்டுமல்ல; இலையுதிர்ந்த மரம், பைசா நகரத்து சாய்ந்த கோபுரம், செடிகள் வளர்ந்த தொட்டி! இதெல்லாம் அந்தந்தப் பெண்களின் தலையில்! அம்மாடியோவ்! என்று வாய் பிளந்து காத்திருந்தவர்களின் முன் அறிவித்தார்கள் - 'நாதர் முடி' பெண்ணுக்குத்தான் முதல் பரிசென்று!

● இந்தக் கூந்தல் அழகுப் போட்டியைத் தென்னிந்திய அழகுக்கலை நிபுணர்கள் சங்கம் நடத்தியது. ஸ்ரீலங்கா, ஜப்பான், பாகிஸ்தான், கொரியா, தாய்லாந்து, சிங்கப்பூர், இந்தோனேஷியா என்று பல்வேறு நாடுகளிலிருந்தும் வந்திருந்தவர்கள் பல்வேறு போட்டிகளிலும் பங்கேற்றனர்.

● பெண்கள் தலைமுடி வெட்டுதல், ஆண்கள் தலைமுடி வெட்டுதல், மணப்பெண் அலங்காரம், மாலை நேர கூந்தல் அலங்காரம், நகத்தில் கலைத்திறன் என்று பல்வேறு பிரிவுகளிலும் போட்டிகள் நடந்தன. ஒட்டு மொத்த சாம்பியன்ஷிப் தாய்லாந்து நாட்டு சிம்கேட்டுக்குக் கிடைத்தது.

● மணப்பெண்களுக்கான மேக் அப் + முடி அலங்காரப் போட்டியில்தான் நிறைய பேர் பங்கேற்றனர். போட்டி நடந்தபோது காஷ்மீர் முதல் ஜப்பான் வரை, பல்வேறு மாநில, நாட்டு மணப்பெண்கள்போல அட்டகாசமாய் அலங்கரித்து, அசத்தினார்கள். கல்யாணம் ஆகாத ஆண்கள் மனசு அலைபாய்ந்திருக்கும்.



● உடல் முழுக்க மணி பிளான்ட் செடியை ஒவியம் தீட்டிக்கொண்டு, தலையிலும் அதே செடி வளர்த்துக்கொண்டு வந்த லட்சுமி மேனனிடம் "இதுபோல எசகு பிசகாய் மேக்கப் போட்டு நிற்பது தர்ம சங்கடமாக இல்லையா?" என்று கேட்டபோது, "ஆல் ஃபார் ஃபன்! ஒரு தமாஷுக்குத்தானே!" என்றார்.





"இப்படியே தமாஷாக ரோட்டில் நடந்து போவீர்களா?"

"ம்ம்!" என்று அவர் ஒரு மிரட்டு மிரட்ட, வாய்பொத்தி நகர்ந்தோம்.

● நிகழ்ச்சிக்கு வந்த சிறப்பு விருந்தினர் ஃபெமினா பத்திரிகையின் ஆசிரியரான சத்யா சரன். அவர் உயரம் ஐந்தடி நாலு அங்குலம். அவரது முடியின் நீளமும் அதே அளவு! வாவ்!

தொகுப்பு: **மௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**



விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி (வழி - வில்லியனூர்) 18வது கி. மீட்டரில் கண்டமங்கலம் அருகில் 2 கி. மீட்டரில் உள்ள சின்னபாபு சமுத்திரம் எனும் கிராமத்தில் ஜீவ சமாதியில் இருந்து அருள் ஒளி வீசும் அற்புத சித்தர் சிவத்திரு ஸ்ரீபடே சாஹிப் ஆவார். பல ஆண்டுகளுக்கு முன்னர் மத்திய கிழக்கு ஆசிய நாடுகள் மற்றும் பல நாடுகளில் வைத்தீஸ்வரனாக பல கோடி மக்களின் நோய்களைத் தீர்த்து இங்கு **ஜீவ சமாதியில்** வீற்றிருக்கின்றார்.

இவர் வாழும் காலத்தில் தீராத நோயால் துன்பப்படும் நோயாளிகளை இங்குள்ள **மகிழ மரத்தை** வேகமாகச் சுற்றிவரக் கூறுவார். மரத்தைச் சுற்றிக் களைத்து விழுந்த நோயாளிகளை உற்றுநோக்குவார். நோய் தீர்ந்த மகிழ்ச்சியில் அவர்கள் கூத்தாடுவார்கள். இவர் செய்த அற்புதங்கள் ஏராளம்! ஏராளம்!!

ஒன்றே-குலம், ஒருவனே தேவன் என்ற மத ஒருமைப்பாட்டைக் காக்கும் சித்த புருஷரே ஸ்ரீ படே சாஹிப் ஆவார். நோயாளிகளுக்கு விபூதி கொடுத்தே நோய்களைப் பறந்தோடச் செய்துள்ளார்.

இமயமலையின் அடிவாரத்தில் சுமார் 2000 அடி கீழே புதைந்திருந்த நிஷ்டதார்யம் எனப்படும் உளிபடாத கல்லை இறையருள் வழிகாட்டுதலால் இவர் தொட்டு அழகிய அருணாசலேஸ்வரர் லிங்கமாக உருப்பெறச் செய்துள்ளார். இவரின் சமாதி அருகே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இவர் கையால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள அற்புத விநாயகர் சிலை அளவில்லா அருளை வாரி வழங்கி வருகிறது.

# வேண்டியதை அருளும் ஸ்ரீ படே சாஹிப் ஜீவ சமாதி

ஒருநாள் ஸ்ரீ படே சாஹிப் குழந்தைகளை அழைத்து ஒரு பெரிய குழியைத் தோண்டச் செய்தார். தான் இறங்கியவுடன் மண் கொண்டு குழியை மூடச் செய்தார். குழந்தைகளும் இதை விளையாட்டாக எண்ணி குழியை மூடினர். ஒரு சித்த புருஷரின் ஜீவ சமாதிக்கு இது இறைவனின் திருவிளையாடல் என்று அவர்கள் உணர்ந்தாரில்லை. நெடுநேரமாகியும் குழியிலிருந்து சத்தம் கேட்காமையால் குழந்தைகள் அழத் தொடங்கினர். அப்போது குழியிலிருந்து ஸ்ரீ படே சாஹிப்பின் கரம் மட்டும் வெளிவர அவர் கையில் பல வண்ணங்களில் மிட்டாய்கள் இருந்தன. குழந்தைகள் மிட்டாய்களை எடுத்துக் கொண்டு குதூகலமாக ஓடி ஊர் மக்களுக்குச் சொல்ல இவ்வாறாக பரிணமித்ததே ஸ்ரீ படே சாஹிப்பின் ஜீவசமாதி. இவரின் குருபூஜை திருநாள் பிரதி வருடம் மாசி மாதம் வரும் மகம் நட்சத்திரத்திற்கு முன்வரும் ஆயில்யம் நட்சத்திர நாளாகும்.

ஸ்ரீ படே சாஹிப்பின் ஜீவசமாதிக்கும் ஸ்ரீ அருணாசலேஸ்வரர் திருச்சன்னதிக்கும் இடையே அமைந்துள்ள கண்ணுக்குப் புலனாகாத சுரங்கப்பாதையில் இன்றைக்கும் பல யோகிகள், சித்தர்கள் ஆழ்ந்த தியான நிலையில் அமர்ந்துள்ளனர். இந்த ஆன்மீக ரகசியங்கள் சற்குருமார்களே அறிய முடியும்.

கொடிய தொற்று நோய்கள், தீராத வியாதிகள் போன்றவற்றால் அவதியுறுவோர் ஸ்ரீ படேசாஹிப் ஜீவசமாதியை செவ்வாய் மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளில் தரிசனம் செய்து இயன்ற அளவு அன்னதானம், நீர் மோர் தானம் செய்தால் உத்தமமான பலன்களை அளிக்கும். தாமரை இலையின் பின்பக்கம் அன்னம் வைத்து தானம் செய்வது அதிக பலனைத் தரும். கேன்ஸர், காசநோய், தொழுநோய், எய்ட்ஸ் போன்ற கடுமையான நோய்கள் உடையோருக்கு ஸ்ரீ படே சாஹிப்பின் ஜீவசமாதி தரிசனம் ஒரு அருமருந்தாகும்.

அறுவை சிகிச்சை நிபுணர்கள், ஏனைய மருத்துவத்துறை வல்லுநர்கள், ஸ்ரீ படே சாஹிப்பின் ஜீவசமாதியை தரிசனம் செய்து இயன்ற திருப்பணிகளையும் தானதர்மங் களையும் செய்திடில் தங்கள் துறையில் முன்னேற்றம் பெறுவர். புதிதாக மருத்துவம்

தொடங்குவோர் ஸ்ரீ படேசாஹிப் அருளைப் பெறுதல் மிகவும் விசேஷமானதாகும்.

இவர் சமாதியின் அருகில் அமைந்துள்ள திரௌபதி அம்மன் கோவில் நெருப்பு மிதிவிழா ஆண்டுதோறும் நடைபெறும். தீமிதி விழா நடத்த உத்தரவு பெற ஸ்ரீ படே சாஹிப் சமாதியின் முன் பூ கிரகத்தை ஜோடித்து உத்தரவு பெற்றே தீமிதி நடைபெறும். தீமிதிக்கும் முன் பூக்குழியில் அணில் ஒன்று இறங்கிச் சென்ற பின் தீமிதிக்க மற்றவர்கள் இறங்குவார்கள். இந்த அதிசயம் இன்று வரை இங்கு நடைபெறுகிறது.

இம் மகானின் அற்புதங்களை பலமுறை ஸ்ரீ அகஸ்திய விஜயம் என்ற அற்புத மாத இதழில் கண்ட நான் தொடர்ந்து ஐந்து வாரங்கள் செவ்வாய்க் கிழமைகளில் சென்று தரிசிக்கும் பேறு அவர் அருளால் கிடைத்தது. அவரின் திரு உருவப்படம் யாவர்க்கும் கிடைக்க ஆவல் உந்த அச்சிட்டு கோவிலில் சேர்ப்பிக்கப்பட்டுள்ளது. மேலும் வெளியூர் பக்தர்கள் தங்க வசதியில்லாமையைப் போக்க அடியவனின் திருப்பணியாகச் சுற்றுப் பிரகார மண்டபம் கட்டும் பணி தொடங்கப்பட்டுள்ளது.



**மகான் ஸ்ரீபடேசாஹிப்**

**சின்னபாபு சமுத்திரம்**
**(கண்டமங்கலம்)**
**விழுப்புரம் மாவட்டம்.**

இவ்வாறு பல அற்புத செய்திகளை அறிய திருக்கயிலாய பொதியமுனிப்பரம்பரை 1001-வது குருமகா சன்னிதானம் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமை ஸ்ரீ ல ஸ்ரீ வெங்கட்ராம சுவாமிகளின் அகஸ்தியர் விஜயம் எனும் அற்புத நூலே காரணமாகும். யாவர்க்கும் பெரும்பேறு அடைய இந்நூல் வழிகாட்டுகிறது. இந்நூல் அவர் தம் குருதேவர் ஸ்ரீ ல ஸ்ரீ இடியாப்ப ஈச சித்த சுவாமிகள் (சிவ குருமங்கள கர்த்தர்) ஆசியுடன் ஸ்ரீ அகஸ்திய விஜயம் எண் – 4, ஸ்ரீ கபாலீஸ்வரர் தெற்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை – 600 004ல் இருந்து மாதா மாதம் வெளிவருகிறது. தொலைபேசி : 4957276.

• மகான் ஸ்ரீபடேசாஹிப் ஜீவ சமாதி





# “சாதிக்கொரு சங்கம் கட்டாயம் வேணும்!”

## - மதுரை ஆதீனத்தின் முழக்கம்!

“ஒவ்வொரு சாதிக்கும் ஒரு சங்கம் கட்டாயம் வேணும். அவரவர் சாதிகளை அவரவர் வளர்க்கணும். சாதிகளை ஒழிக்க முடியாது. சாக்கடை இருக்கும் வரை கொசு இருக்கத்தான் செய்யும். எந்த ஏரியாவிலே எந்தச் சாதிக்காரங்க அதிகமாக இருக்காங்களோ அந்த ஏரியாவிலே அந்தச் சாதிக்காரங்களே ரூ.5, 10 வசூல் செய்து தொழிற்சாலை அமைத்து அந்தச் சாதிக்காரர்களை மட்டுமே துப்புறவுப் பணியிலிருந்து நிர்வாக அதிகாரி வரை நியமிக்கணும். அப்பொழுது தான் அரசாங்கத்தை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இருக்காது...”

- சாதிகளை ஆதரிக்கும் இந்த கருத்தைச் சொன்னவர், திருஞானசம்பந்தரால் நிறுவப் பெற்று இதுவரை 291 ஆதீனகர்த்தர்களைக் கண்ட பழம் பெருமை வாய்ந்த மதுரை ஆதீனத்தின் 292 ஆவது ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்தான்!

ம.நடராஜன் தொகுத்து எழுதிய “அண்ணாவின் பேருரைகள்” நூல் அறிமுக விழா அண்மையில் காரைக்குடி கவியரசு கண்ணதாசன் மணிமண்டபத்தில் நடந்தது. இதில்தான் மதுரை ஆதீனம் இப்படிச் சொன்னார்.

விழாவில், “தைரியம் இருந்தால் தி.மு.க.வின் மூத்த தலைவர்களை தென் மாவட்டங்களில் ஏதாவது ஒரு தொகுதியில் போட்டியிட்டு ஜெயித்து காட்டச் சொல்லுங்கள் பார்ப்போம்” என்று சவால்விட்டார் மூவேந்தர் முன்னேற்றக் கழகத்தின் மாநில இணைத் தலைவர் எஸ்.ஆர். தேவர்.

இந்த விழாவில் நடராஜன் நடராஜத் தேவராகியிருந்தார். நிகழ்ச்சி முடியும் வரை எல்லோரும் அவரை “நடராஜத் தேவர்” என்றே அழைத்தனர்.

விழாவில் அனைவரையும் சிரிக்க வைத்து கிரங்கச் செய்தது மதுரை ஆதீனத்தின் பேச்சுதான். அதிலிருந்து துளிகள் சில :

“மன்னர் பாஸ்கரசேதுபதி, பாண்டித்துரைத் தேவர், முத்து ராமலிங்கத் தேவர் ஆகியோர் மதுரை ஆதீனத்தின் சீடர்கள். எனவே முக்குலத்தோருக்கும் மதுரை ஆதீனத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

“இன்றைய பொன் பரமகுரு, சீனிச்சாமித் தேவர், சேதுராமன் நீங்கள் எல்லோரும் ஒரு குடையின் கீழ் ஒன்று சேருங்கள். நீங்கள் சொல்பவர்தான் அடுத்த முதல்வர். ஏன் நீங்கள் சொல்பவர்தான் இந்தியாவின் அடுத்த பிரதமரும்கூட. உங்களையெல்லாம் இணைக்கும் தலைவராக மதுரை ஆதீனம் செயல்படும்.

“முக்குலத்தோர் ஆண்ட பரம்பரை இனி ஆளப்போகும் பரம்பரை. அடுத்த தமிழக முதல்வராக நடராஜன்தான் வரப்போகிறார்” என்று ஆசிர்வதித்துவிட்டு நடராஜன் பேச ஆரம்பித்தவுடன் புறப்பட்டுச் சென்றார் மதுரை ஆதீனம்.

அடுத்துப் பேசிய நடராஜன், முதல்வர் கருணாநிதியையும் அவரின் ஆட்சியையும் சரமாரியாக விமர்சித்தார்.

பாகிஸ்தானின் ஆட்சி மாற்றத்திற்கு முஷரப் போல, தமிழகத்திலும் ஒரு முஷரஃப் தோன்றிவிட்டான். இன்னும் ஆறு மாதத்தில் அவர் யாரென்று தெரியும் என்று பொடி வைத்துப் பேசி முடித்தார் நடராஜன்.

“அண்ணாவின் பேருரைகள்” நூலைப் பற்றியோ நூலில் உள்ள செய்திகளைப் பற்றியோ யாருமே பேசவில்லை!

**- கி. சிங்காரவடிவேல்**

படம் : **மயில் ஸ்டுடியோ**

# இன்சல்ட் பண்ணிய இந்திராகாந்தி!



குருசரண்தாஸ். டெல்லியைச் சேர்ந்த பத்திரிகையாளர், எழுத்தாளர், நாடக ஆசிரியர். பன்னாட்டு நிறுவனம் ஒன்றின் தலைமை நிர்வாகியாக இருந்தவர். இப்போது, அரசு மற்றும் தனியார்த்துறை நிறுவனங்களுக்கு ஆலோசகராக இருந்து வருகிறார். இவர் எழுதி, அண்மையில் வெளியாகியுள்ள புத்தகம் 'இந்தியா: அன்பவுண்ட்'. வாசகர்களுடன் கலந்துரையாட, அண்மையில் சென்னை லேண்ட் மார்க் புத்தகக் கடைக்கு வந்திருந்தார். கடந்த சில ஆண்டுகளாக தாம் சந்தித்த பலதரப்பட்ட மனிதர்கள், திரட்டிய தகவல்கள், மற்றும் தனது பல வருட அனுபவங்கள் இவைதான் இப்புத்தகம் எழுதுவதற்குத் தூண்டுதலாக இருந்தவை என்று சொன்னவர், சில அனுபவங்களை நம்மோடு பகிர்ந்துகொண்டார். அவற்றிலிருந்து:

● ஒருமுறை சென்னையிலிருந்து பாண்டிச்சேரிக்குக் காரில் போய்க் கொண்டிருந்தபோது, ஒரு கிராமத்தின் சாலையோர டீக்கடையில் வேலை பார்க்கும் ராஜா என்கிற சிறுவனைப் பார்த்தேன். அவனுக்குச் சம்பளம் மாதம் நானூறு ரூபாய். அதைக் கொண்டு, வாரம் இரண்டு நாள் மாலை, கம்ப்யூட்டர் கோர்ஸ் படிப்பதாக அவன் கூறினான். 'இன்னும் ஒரு வருஷத்தில், சென்னையில் உள்ள என் அத்தை, ஏதாவது ஒரு கம்ப்யூட்டர் கம்பெனியில் வேலை வாங்கித் தந்துவிடுவார்' என்ற ராஜாவிடம், பெரியவனானவுடன் உன் லட்சியம் என்ன? என்றபோது, ''அமெரிக்காவில் 'பில்கேட்' என்று ஒருவர் இருக்கிறாராம்!. பெரிய பெரிய பணக்காரராம் அவர். அவர் போல சொந்தமாய் ஒரு கம்பெனி நடத்த வேண்டும் என்பதே என் லட்சியம்' என்றான் அவன். எனக்கு இனிய ஆச்சரியம்!

● ஹல்டியா என்ற நகரத்தில், ஒரு புதிய உரத் தொழிற்சாலையை அரசு துவங்கியது. அதனருகே சகல வசதிகளுடன் கூடிய ஒரு டவுன்ஷிப் உருவானது. அத்தனை ஊழியர்களுக்கும் கை நிறைய சம்பளம்; போனஸ் உட்பட இதர வசதிகள். ஆனால், அந்த உரத்தொழிற்சாலையில் ஒரு கிலோ உரம்கூட உற்பத்தி செய்யவில்லை. அதற்குத் தொழிற்சாலை நிர்வாகம் சொன்ன காரணம்: தொழிற்சாலையில் நஷ்டத்தைத் தவிர்க்க, உரம் உற்பத்திச் செய்யாமல் இருப்பதுதான் ஒரே வழி!

● லக்னோவில், 1992ல் ஸ்கூட்டர்

கள் தயாரிக்க ஸ்கூட்டர்ஸ் இந்தியா என்ற தொழிற்சாலை துவக்கப்பட்டது. மூவாயிரம் தொழிலாளர்கள். ஆனால் இதுவரை ஒரு ஸ்கூட்டர்கூட தயாரிக்கப்படவில்லை.

● பிரகாஷ் டாண்டன் என்ற நண்பர் கூறியது மறக்க முடியாத ஒன்று. அவர், ஒவ்வொரு ஆண்டும், மும்பையிலிருந்து, குடும்பத்துடன் காரில் கோடைவிடுமுறைக்காக காஷ்மீர் செல்லுவார். ஒரு தடவை போகிற போது, நாசிக் நகரையடுத்து, ஒரு பெட்ரோல் பங்க் புதிதாகத் திறக்கப்பட்டுள்ளதைக் கவனித்தார். அடுத்த ஆண்டு, அங்கே ஒரு ஓட்டல் திறந்திருந்தார்கள். அடுத்த வருடம் சின்ன சின்னப் பெட்டிக்கடைகள் முளைத்திருந்தன. நாலைந்து வருடங்களில் ஒரு சின்ன கிராமமே உருவாகிவிட்டது.

● ஒருமுறை டெல்லி – அமிர்தசரஸ் ரயில் பயணத்தின்போது, ஒரு பாங்க் மானேஜரைச் சந்தித்தேன். தனது வங்கிக் கிளையில் யார் யாருக்குக் கடனுதவி செய்வது என்று உள்ளூர் எம்.பி, எம்.எல்.ஏ.க்கள்தான் முடிவு செய்வதாகவும், அவர்களால் சிபாரிசு செய்யப்படுபவர்களுக்கு, லோன் பெறத் தகுதியோ, திருப்பித் தரும் எண்ணமோ துளியும் கிடையாது என்று தெரிந்தும், கடன் தர வேண்டிய கட்டாயம் என்று வருந்தினார் அவர். அவரது மேலதிகாரிகளும், எந்த உத்தரவானாலும் எழுத்துமூலம் தரமாட்டார்களாம். எல்லாம் வாய் மொழிதானாம். விரைவில் வேறு வேலை தேடிக் கொண்டு விடுவேன் என்றார் அவர்.



''நான் பேசி முடித்ததும் கூட்டத்தில் இருந்து கைதட்டலும் வரவில்லை. கற்களும் வரவில்லையே என்ன அர்த்தம்?''
''எல்லோரும் தூங்கிட்டாங்கன்னு அர்த்தம் தலைவரே!''
– ஆர்.ஆர்.பூபதி

● ஒருமுறை பிரபல தொழிலதிபர் டாடாவை அவரது இல்லத்தில் சந்தித்துப் பேசும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது, நான் தொழிலதிபர் என்பது பெயரளவில்தான். என் கம்பெனி பற்றி ஒவ்வொரு விஷயத்தையும் என்னால் முடிவு செய்ய முடியாதபடி அரசாங்கத்தின் கெடுபிடி சட்டங்கள். இங்கே லைசென்ஸ் ராஜ்யம்தான் நடக்கிறது என்று ஆதங்கப்பட்டது இன்னும் என் காதுகளில் ஒலிக்கிறது.

பிரதமர் இந்திராகாந்தியிடம், அரசின் கெடுபிடி சட்டங்களின் பிரச்னைகளைச் சுட்டிக் காட்டிப் பேசிய ஒவ்வொரு தருணத்திலும், அசுவாரசியமாய்க் கேட்டுக் கொண்டே, தனக்கு வந்த தபால்களைப் படிக்க ஆரம்பித்து, இன்சல்ட் பண்ணியதைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டார் டாட்டா. இன்று தாராளமயமான பொருளாதாரத்தில், டாடா இருந்திருந்தால், திருப்தியடைந்திருக்கக்கூடும்.

● என்னைப் பிரமிக்க வைத்தவர்களுள் சாம் பிட்ரோடாவும் ஒருவர். இந்திய தகவல் தொழில் நுட்பத்துறையில் புரட்சிக்கு வித்திட்டவர் அவர். அவர் மின்சார வசதியில்லாத, தண்ணீர் வசதியில்லாத பீகார் கிராமம் ஒன்றில் பிற்படுத்தப்பட்ட ஜாதியில் பிறந்தவர். கூடப் பிறந்தவர்கள் எட்டு பேர். ஆனால், அவர் அரசியல் ஆட்சி மாற்றத்தின் காரணமாக, 'ஊழல்' முத்திரைக் குத்தப்பட்டு, மன வருத்தத்துடன் இந்தியாவிலிருந்து அமெரிக்கா சென்றபோது மனம் வேதனைப்பட்டது.

● குடும்பத்தின் டெக்ஸ்டைல் வியாபாரத்தில் ஏற்பட்ட தாளமுடியாத நஷ்டம் காரணமாக, பாலிடெக்னிக் படிப்பைப் பாதியில் நிறுத்த வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானவர் சுபாஷ் சந்திரா. இன்று அவரது Zee TV, இந்தியாவின் முன்னணி இந்தி சானல், ஆண்டு விளம்பர வருமானம் அறுநூறு கோடி ரூபாய்!

● எண்பதாண்டுகளுக்கு முன் உங்கள் ஆதர்ச மனிதர்கள் என்று கேட்டால் கோகுலே, திலகர் என்று சொல்லியிருப்பார்கள். ஐம்பது வருடங்களுக்கு முன் கேட்டிருந்தால் காந்தி, நேரு என்று பதில் கிடைத்திருக்கும். இன்றைய தலைமுறையினரைக் கேட்டால் அம்பானி, (ரிலையன்ஸ்)அசிம் பிரேம்ஜி (விப்ரோ), என்பார்கள். காலம் மாறிக் கொண்டே இருக்கிறது. மனிதர்களும்தான்!

— மௌலி
படம்: யோகா



**பா**ங்கில் அன்று எக்கச்சக்கமான கூட்டம்.

கட்ட வேண்டிய 'செக்கு'களைக் கொடுத்துவிட்டு, அந்த மாதச் செலவுக்கு வேண்டிய பணத்தை வாங்கிக்கொண்டு, வெளியே வந்து கைக் குடையை விரித்தபோது எதிரே நின்றிருந்தான் சத்யா.

சத்யாவும் நானும் ஒரே நாளில் ஒரே ஆபீஸில் வேலைக்குச் சேர்ந்து ஒரே நாளில் பதவி உயர்வு பெற்று வெவ்வேறு திசையில் பிரிந்தவர்கள். நான் ஓய்வு பெற்று இரண்டு வருஷங்கள் கழித்து அவன் ஓய்வு பெற்றான்.

எங்கோ மதுரை பக்கம் இருந்ததாகக் கேள்விப்பட்டேன். இங்கே எப்படி!

தலையில் பாதிக்கு மேல் வழுக்கை. முகமெல்லாம் வியர்வை வழிந்தோடியது. ஜவுளிக்கடைகளில் இப்போது வழக்கமாகக் கொடுக்கும் பெரிய சாக்குப் பைகள் இரண்டும் சாமான்கள் நிறைய இரண்டு கைகளில் தூக்கிக் கொண்டிருந்தான்.

''அடடே! சங்கரனா?'' என அவனே கூப்பிட்டு விசாரித்தான்.

"எப்படி இருக்கே சத்யா? வாயேன்... அங்கே போய் ஏதாவது சாப்பிட்டுக் கொண்டே பேசலாம்."

எதிரில் ஒரு சிறு ஐஸ்க்ரீம் பார்லர் இருந்தது. உள்ளே உட்கார்ந்து சாப்பிட மேஜை, நாற்காலிகள் இருந்தன. படு வேகமாகச் சுழன்ற ஒரு மின் விசிறி உஷ்ணக் காற்றையும் தெருப் புழுதியையும் மேலே வீசிக் கொண்டிருந்தது.

சத்யா சொன்னான்.

பக்கத்தில் ஒரு சூப்பர் மார்க்கெட்டாம். எல்லா சாமான்களும் ரொம்ப மலிவாம். மருமகள் கொடுத்த ஜாபிதாப்படி வாங்கிப் போவதாகச் சொன்னான்.

''ஆமாம் உன் மருமகள் வேலைக்குப் போகிறாள் இல்லையா?''

"ஆமாமாம். இந்தக் காலத்தில் புருஷன்

# இரண்டாவது வசந்தம்

பெண்டாட்டி இரண்டு பேர் சம்பாதிக்காமல் எப்படிக் காலம் தள்ள முடியும்?''

''ஆமாம். அதற்காக இந்தப் படைபடைக்கிற வெயிலில்தான் வர வேண்டுமா? காலையில ஒன்பது மணிக்குக் கடை திறக்கும் சமயம்.''

''அப்போது பேரப்பசங்களைப் பள்ளிக்கூடம் கூட்டிப் போக வேண்டுமே.''

''சாயங்காலம் காத்தாட வரலாமே!''

''நாளைக் காலை சமையலுக்குக் கறிகாய் வாங்கப் போகணுமே!''

சத்யாவுக்கு ஒரே பிள்ளைதான். மச்சினன் பெண்தான் மருமகள். அவன் ரிடையராவதற்கு முன்பே அவன் மனைவி மறைந்துவிட்டாள். கான்சர்.

''ரொம்பச் சோர்ந்து போயிருக்கிறாயே!'' எனி ப்ராப்ளம்?''

''வயது ஆகிறதோ இல்லையோ? ஒன்று பின் ஒன்றாகப் படுத்துகிறது. இலேசாக 'ஷுகர்'; கொஞ்சம் ஹார்ட் ப்ராப்ளம்' வயிற்றில் வலி. ஒவ்வொரு முறை போகும் போதும் டாக்டர் புதிதாக ஒரு வியாதி சொல்கிறார். ஒருநாள் போகும்போது அவருக்கே சொல்ல வியாதியின் பெயர் பாக்கி இருக்காது. என் மனைவி போன பிறகே கொஞ்சம் தள்ளாட்டம்தான்'' எனச் சிரித்தான்.

எனக்குக் கோபம் வந்தது.

''உன்னால் எப்படி சிரிக்க முடிகிறது? ஒரு வேலைக்காரனை விடக் கேவலமாக நடத்துகிறார்கள். உனக்குப் புரியவில்லையா?''

''என் கதை கிடக்கட்டும். நீ எப்படி இருக்கிறாய்?''

''என்னைப் பற்றி என்ன இருக்கிறது சொல்ல? இரண்டு பிள்ளைகள், இரண்டு பெண்கள். எல்லோரும் இந்த ஊரில்தான் இருக்கிறார்கள். ரிடையரான பிறகு ஒவ்வொருவரிடமும் கொஞ்ச நாட்கள் தங்கிப் பார்த்தேன். கொஞ்சம் செய்ய முடியுமா? என நிறைய வேலை கொடுத்தார்கள். தலைக்குத் தலை ஏவினார்கள்.

''கை நிறைய பென்ஷன். பாங்கில் ரொம்பப் பணம். புண்ணியவதி என் பெண்டாட்டி எப்பவோ போய்ச் சேர்ந்துட்டா. எதற்காக இவர்களிடம் கைகட்டி சேவகம் செய்ய வேண்டும்.

''பேசாமல் ஒரு முதியோர் இல்லத்தில் சேர்ந்து விட்டேன். தனி அறை. எல்லா வசதிகளும் உண்டு. டீ.வி உட்பட தனி. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர ஆட்கள். நல்ல சாப்பாடு...

''செலவு அதிகம் தான். யாருக்காகச் சேர்த்து வைக்க வேண்டும்? போகும்போது எதைத் தலையில் சுமந்து கொண்டு போகிறோம்?''

நான் சொன்னதை மௌனமாகக் கேட்டான் சத்யா.



''எப்படியோ சந்தோஷமாக நிம்மதியாக இருந்தால் சரி. உனக்குப் பொழுது எப்படிப் போகிறது?''

''பொழுது போதவில்லை சத்யா... என்னை அந்த இல்லத்திலே பொறுப்பாளனாகத் தேர்ந்து எடுத்து விட்டார்கள்.

அன்னம்

**ராதா:** என் 'மூட்' கிடக்கு விடுங்க. மழைக்கு எத்தனை வித மூட் தெரியுமா! ஒவ்வொண்ணையும் ஆராய்ச்சி பண்ணுறது தனி ஆனந்தம். ஆனா அந்த ஆரம்ப மழையோட வர மண்வாசனை இருக்கே: அது என்னைச் சும்மா வீரப் பனாட்டம் கடத்திட்டுப் போய்டும். எங்க...? நேர என் சொந்த கிராமம்–கண்டுருக்கு. சின்ன வயசுல தோழிகளோட சேர்ந்து நனைஞ்சது. கொட்டமடிச்சது எல்லாம் ஞாபகம் வரும். இப்பக்கூடத்தான் நனைய ஆசையாயிருக்கு... ஆபீஸ் போகணுமே!

மழை மொழி!



ஒவ்வொருவனையும் கண்குத்திப் பாம்புபோல கவனிக்க வேண்டி உள்ளது. அசந்தோமோ போச்சு! சாப்பிட்டு ஏப்பம் விட்டு விடுவார்கள்''

"பணம் பட்டுவாடா எல்லாம் உன் கையிலதான் போல இருக்கிறது."

"ஆமாம். எல்லாமே நான்தான். என் மேல் நிர்வாகத்திற்கு ஏக நம்பிக்கை. அத்தனை பேரையும் கண்ணில விரல் விட்டு ஆட்டிக் கொண்டிருக்கிறேன்."

இருவரும் வெளியே வந்தோம். சத்யா தயங்கினான்.

"உன்னை ஒன்று கேட்கலாமா?"

"என்னடா தயக்கம். கேளேன்."

"இத்தனை வேலைகளையும் நீயாக ஒரு பொது நல ஸ்தாபனத்திற்கு எதிர்பார்க்காமல் செய்கிறாயே! இதில் அரைக்கால் பங்கு உன் மகனுக்குச் செய்தால் என்ன?''

என்னால் பதில் சொல்ல முடியவில்லை.

''விசுவம். இது நமக்கு இரண்டாவது வசந்தம். முதல் வசந்தம் மனைவியின் அணைப்பில் சுகம் கண்ட பருவம். குழந்தைகளைப் பெரியவர்கள் பார்த்துக் கொண்டார்கள். ஆபீஸ், வீடு என உலகம் இயந்திரமாக இருந்தது. இப்போது மனதளவில் ஒரு உற்சாகம். பேரன், பேத்திகளோடு கொஞ்ச. டி.வியில பார்க்கிறாயே... எத்தனை சிரமப்பட்டு ஒரு பூ மலர்வதைப் படம் எடுத்துக் காண்பிக்கிறான். ஒரு வண்ணத்துப் பூச்சிக் கூட்டை உடைத்துக் கொண்டு வருகிறது எத்தனை ரம்மியமாக இருக்கிறது... நம் பேரக் குழந்தைகள் நம் கண்முன் வளர்வதைப் பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா! அவர்கள் மழலை, விளையாட்டு விஷமம்... புத்திசாலித்தனம். போக்கிரித்தனம் எல்லாம் நமக்கு இறைவன் அளித்த வரமடா விசுவம்? துபாய்க்குப் போய் சம்பாதிக்கறவன் இழக்கும் ஆனந்தத்தை அவன் உணர்வதில்லை. அது போலதான் நீயும்...''

"... ... ...''

''எப்படி நீ போகப் போகிறாய்?'' எனக் கேட்டான் சத்யா.

"ஒரு ஆட்டோ பிடித்துத் தான்."

''வேண்டாம்' என் மருமகள் ஆபீஸ் போகும்போது காரில் இறக்கி விட்டுப் போனாள். இப்போ காரை அனுப்பி வைப்பாள்; நான் உன்னை உன் இல்லத்தில் இறக்கி விடுகிறேன்'' என்றான் சத்யா.

அவன் சொல்லி முடிக்கவும் கார் வரவும் சரியாக இருந்தது.

மௌனமாக ஏறிக் கொண்டேன்.

"என்ன யோசிக்கிறாய்?" எனக் கேட்டான் சத்யா.

"ஒருவேளை முட்டாளாக இருந்து விட்டோமோ என்றுதான்" என்றேன் உளமாற.

# அய்யனுக்குத் தங்கக் காசு!



• விழாவில்...



தற்பொழுது திருவள்ளுவரின் நினைவைப் போற்றும் வகையில் திருவள்ளுவர் தங்கக்காசு, சமீபத்தில் காரைக்குடியில் வெளியிடப்பட்டது.

விழாவில் பேசிய திருவள்ளுவர் தங்கக்காசு தயாரிப்பாளரான சுப. பரமசிவம், "கல்கத்தா அருங்காட்சியகத்தில், திருவள்ளுவர் உருவம் பதித்த தங்கக்காசு இருப்பதாக எழுத்தாளர் ஐராவதம் மகாதேவன் கட்டுரையில் குறிப்பிட்டிருந்தார். அந்தச் செய்தியைப் படித்த பின்பு மனிதனுடைய வாழ்க்கையை நெறிப்படுத்தும் கருத்துகளைக் குறளாகத் தந்த வள்ளுவருக்குப் புதிய நூற்றாண்டின் தங்கக் காசு வெளியிட எண்ணி, முதன்முறையாக இருபத்தைந்துத் தங்கக் காசுகளை, இருபத்திரண்டு காரட் தங்கத்தில் ஒரு பவுன் எடையில் வெளியிட்டிருக்கிறேன். ஒரு தங்கக் காசின் விலை மூவாயிரத்து அறுநூறு ரூபாய்" என்றார்.

தங்கக் காசை வெளியிட்டு முனைவர் தமிழண்ணல் பேசும்போது பகவத்கீதையுடன் திருக்குறளை ஒப்பிட்டார்.

"பகவத்கீதை குலவழித் தொழிலைக் கூறுகிறது. திருக்குறளில் எந்த விதப் பேதமும் இல்லை. பகவத்கீதையில் குறிப்பிட்டதைப் போல குலத் தொழில் பார்க்க வேண்டும் என்றால், நானும் பழ. கருப்பையாவும் இன்று இந்த மேடையில் தமிழ் பேசிக் கொண்டிருக்க முடியாது. வட்டித் தொழில் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்" என்றார் சின்ன சிரிப்புக்கிடையே.

"பகவத்கீதைக்கு மகாத்மா காந்தி, திலகர், இராஜாஜி போன்ற பெருந் தலைவர்கள் உரை எழுதியதால்தான் பெரும் புகழடைந்தது; திருக்குறளுக்கு அதுபோல யாரும் உரை செய்யாததால் புகழ் பரவவில்லை" என்று வருத்தப்பட்டார் பழ. கருப்பையா.

"இறைவனுக்கு எல்லோரும் ஒன்றுதான். உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பாகுபாடு கிடையாது. பகவத்கீதையில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பேதத்தை இறைவன் குறிப்பிட்டிருக்கிறார் என்றால் அது இறைவனின் வாக்காக இருக்காது. அப்படி இருந்தால் அந்த இறைவனின் வாக்கு ஆய்வுக்குரியதே!" என்று குறிப்பிட்டு முற்றுப்புள்ளி வைத்தார் குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்.

வெளியிடப்பட்ட இருபத்தைந்து தங்கக் காசுகளும் மேடையிலே விற்றுத் தீர்ந்தன. விரைவில் ஒரு கிராம் எடையில் ரூ.500/- மதிப்பில் திருவள்ளுவர் தங்கக் காசு வெளியிடவிருப்பதாகவும் விழா முடிவில் அறிவிக்கப்பட்டது.

— கி. சிங்கார வடிவேல்

படங்கள்: மயில் ஸ்டுடியோ

# பொன்னியின் செல்வன்

### நாற்பத்து இரண்டாம் அத்தியாயம்

## மலையமான் துயரம்

சம்புவரையர் முன்கட்டுக்கு வந்ததும் கந்தமாறனைத் தனியாக அழைத்து, "மகனே! நம் குலத்துக்கு என்றும் நேராத ஆபத்து இன்று நேர்ந்திருக்கிறது! அதிலிருந்து நாம் தப்ப வேண்டுமானால் நான் சொல்வதை உடனே நீ தடை சொல்லாமல் நிறைவேற்ற வேண்டும்'' என்று கூறினார்.

கரிகாலருடைய மரணம் கந்தமாறனைப் பெரிதும் கலங்கச் செய்திருந்தது. தான் வந்தியத்தேவனைக் கொல்ல நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்பதையும் அவன் உணர்ந்திருந்தான். ''தந்தையே! மூடனாகிய என்னாலேதான் நம் குலத்துக்கு இந்த ஆபத்து நேர்ந்திருக்கிறது. அதற்காக என்னை மன்னியுங்கள். தாங்கள் என்ன கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றான்.

"நீ உடனே ஒருவருக்கும் தெரியாமல் இந்த மாளிகையை விட்டு வெளியேற வேண்டும். நான் படுக்கும் அறையில், கட்டிலுக்கு அடியிலிருந்து சுரங்கப்பாதை ஒன்று போகிறது உனக்குத் தெரியும் அல்லவா? அது வேட்டை மண்டபத்திலிருந்து போகும் சுரங்கப் பாதையில் இம் மாளிகையின் மதிள் சுவரண்டை போய்ச் சேருகிறது...''

''தந்தையே! இந்த இக்கட்டான நிலைமையில் தங்களைத் தனியே விட்டு விட்டு என்னைச் சுரங்க வழியில் தப்பித்துப் போகச் சொல்கிறீர்களா?'' என்றான் கந்தமாறன்.

''பிள்ளாய்! அதற்குள் உன் வாக்

**அமரர் கல்கி**

குறுதியை மறந்து பேசுகிறாயே? ஆம்; நீ போகத்தான் வேண்டும். கொல்லி மலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்துக்கு இப்போது நீ ஒருவன்தான் இருக்கிறாய். அவசியமாயிருந்தால், நீ அந்த மலைக்கே போய் மறைந்து வாழ வேண்டும். மதுராந்தகத் தேவருக்குப் பட்டங்கட்டுவது என்று நிச்சயமாகி, நான் உனக்குச் செய்தி அனுப்பிய பிறகுதான் திரும்பி வர வேண்டும்!'' என்றார் சம்புவரையர்.

''மன்னிக்க வேண்டும், தந்தையே! மறைந்து வாழ்வது என்னால் இயலாத காரியம். வல்வில் ஓரியின் குலத்துக்கு அத்தகைய கோழைமையைப் பெற்ற அபகீர்த்தி வேறு வர வேண்டுமா? இந்தக் கணமே என்னுடைய இன்னுயிரைக் கொடுக்கச் சொன்னீர்களானால் கொடுக்கிறேன். ஆனால் ஒளிந்து வாழ ஒருப்படேன்!'' என்றான் கந்தமாறன்.

சம்புவரையர் சிறிது யோசனை செய்துவிட்டு, ''மகனே! உன்னைச் சோதனை செய்வதற்காகக் கூறினேன். ஓடித் தப்பித்துக் கொள்ளவும் மறைந்து வாழவும் நீ இஷ்டப்படவில்லை. நல்லது; உயிருக்கு ஆபத்து நேரக்கூடிய வீரச் செயலிலேதான் உன்னை நான் ஏவப் போகிறேன். சுரங்கப்பாதை வழியாக உடனே வெளியேறிச் செல்! ஆனால் கொல்லிமலைக்குப் போக வேண்டாம்! நேரே தஞ்சாவூருக்குப் போ!! பெரிய பழுவேட்டரையர் அநேகமாக அங்கே இருக்கலாம். இருந்தால், அவரிடம் இங்கே நடந்ததைச் சொல்லு! அவர் இல்லாவிட்டால் சின்னப் பழுவேட்டரையரிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு...!

''ஐயா! இங்கே என்ன நடந்தது என்று அவர்களிடம் சொல்லட்டும்?''

''இது என்ன கேள்வி? கரிகாலரின் மரணத்தைப் பற்றிச் சொல்லு! 'நாம் உத்தேசித்திருந்த காரியம் விதி வசத்தினால் வேறுவிதமாக நடந்துவிட்டது! கரிகாலர் மாண்டுவிட்டார்! மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட இதுதான் தக்க சமயம் என்று அவர்களுக்குத் தெரியப்படுத்து! மலையமானும் கொடும்பாளூர் வேளானும் அதற்குக் குறுக்கே நிற்பார்கள். நமது பலத்தையெல்லாம் உடனே திரட்டி அந்த இரண்டு பேரையும் அடியோடு அழித்து விட வேண்டும் என்று கூறு!'' என்றார் சம்புவரையர்.

''கரிகாலர் எப்படி மரணமடைந்தார் என்று அவர்கள் கேட்டால் என்ன சொல்லட்டும்?'' என்றான் கந்தமாறன்.

''வேறு என்ன சொல்கிறது? வாணர் குலத்தைச் சேர்ந்த வந்தியத்தேவன் அவரைக் கொலை செய்துவிட்டான் என்று கூறு! இன்னும் ஒரு முக்கியமான விஷயம். இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்! வந்தியத்தேவன் ஈழ நாட்டுக்குப் போய்த் திரும்பி வந்திருக்கிறான். அங்கே அருள்மொழித் தேவனையும் பிறகு பழையாறையில் இளைய பிராட்டியையும் பார்த்துவிட்டு வந்திருக்கிறான். அருள்மொழித்தேவன் நாகைப்பட்டினத்தில் மறைந்திருந்து இப்போது வெளிப்பட்டிருப்பதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. அருள்மொழித் தேவன் சிங்காதனம் ஏறும் ஆசையினால் அண்ணனைக் கொல்லுவதற்கு வந்தியத்தேவனை அனுப்பி வைத்தான் என்ற வதந்தியைச் சோழ நாட்டில் பரப்ப வேண்டும். பழையாறை இளைய பிராட்டியும் இதற்கு உடந்தையென்ற சந்தேகத்தையும் உண்டு பண்ண வேண்டும். இதையெல்லாம் பழுவேட்டரையர்களிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு...!''

''தந்தையே! தாங்கள் சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா? சிநேகத் துரோகியான வந்தியத்தேவன் அத்தகைய பயங்கரமான எண்ணத்துடனேயே இந்த மாளிகைக்கு வந்திருக்கலாம் அல்லவா?''

''இருக்கலாம், மகனே! ஆனால் பழுவூர் இளையராணி திடீரென்று மாயமாய் மறைந்து போனதற்குக்

காரணம் கண்டுபிடிக்க வேண்டுமே? அவள் பேரிலும் அவளுக்கு உடந்தையாயிருந்த பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் பேரிலும் வல்லவரையன் வந்தியத்தேவன் குற்றம் சாட்டுகிறானே...!"

"குற்றம் செய்தவன் மற்றவர்கள் பேரில் அதைச் சுமத்தவே பார்ப்பான். இப்போது எனக்கு எல்லாம் விளங்குகிறது, தந்தையே! பழுவூர் இளைய ராணியைப் பழையாறைக் குந்தவை தேவிக்கு எப்போதும் பிடிப்பதேயில்லை. கரிகாலரைக் கொன்றுவிட்டு அதே சமயத்தில் பழுவூர் இளைய ராணியை அபகரித்துக் கொண்டு போவதற்கும் அவள்தான் ஏற்பாடு செய்திருக்க வேண்டும். முதன்மந்திரி அநிருத்தரும் இதற்கு உடந்தை போலிருக்கிறது. அதற்காகவே இந்த வந்தியத்தேவனை அவர்கள் அனுப்பியிருக்கிறார்கள்! ஐயோ! அவர்களுடைய சூழ்ச்சியை அறியாமல் மோசம் போய்விட்டோமே?"

"கந்தமாறா! போனதைப் பற்றி வருந்துவதில் பயனில்லை. இனிமேல் நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டும். நீ உடனே புறப்பட்டுச் செல்! கரிகாலரின் மரணச் செய்தி சுந்தர சோழருக்குப் போய்ச் சேர்வதற்கு முன்னால், தஞ்சையில் வேறு யாருக்கும் தெரிவதற்கு முன்னால், பழுவேட்டரையர்களுக்கும் மதுராந்தகருக்கும் தெரிய வேண்டும். ஆகையால் நீ விரைந்து செல்! தஞ்சைக் கோட்டைக்குள் போவதற்கும் இரகசியச் சுரங்க வழி உண்டு என்பது உனக்குத் தெரியும் அல்லவா...?"

"தெரியும், தெரியும்."

"அப்படியானால், உடனே புறப்படு!"

"புறப்படுகிறேன், தந்தையே! என் தங்கை – மணிமேகலை – அவளைப் பற்றித்தான் சிறிது கவலையாயிருக்கிறது."

"வேண்டாம் உனக்கு அந்தக் கவலை! நம்மிடம் அவள் உளறியது போல் வேறு யாரிடமும் உளறுவதற்கு நான் விட மாட்டேன். அப்படி அவள் உளற முற்பட்டால், அவளை என் கையினாலேயே கொன்றுவிடுவேன்..."

"ஐயோ! அதற்காகத்தான் கவலைப்படுகிறேன். தங்கள் கோபத்தை எண்ணித்தான் பயப்படுகிறேன்..."

"வேண்டாம்! அவளுடைய மனத்தை மாற்றும் வழி எனக்குத் தெரியும். ஆகா! விதி விசித்திரமானதுதான்! முதலில் அவளை நாம் மதுராந்தகத் தேவருக்கு மணம் செய்து கொடுப்பது என்று எண்ணினோம். இடையில் அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டு கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்க உத்தேசித்தோம். கரிகாலர் இன்று பிணமாகக் கிடக்கிறார். நல்லவேளை, மணிமேகலையின் உள்ளம் அவரிடம் செல்லவில்லை. நமது பழைய உத்தேசத்தையே நிறைவேற்ற வேண்டியதுதான்..."

"ஆனால், தந்தையே! மணிமேகலையின் உள்ளம் இப்போது அந்தச் சண்டாளன் வந்தியத்தேவன் பேரில் அல்லவா போயிருப்பதாகத் தெரிகிறது?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, மகனே! மணிமேகலைக்குத் தன் மனத்தைத் தான் அறியும் பிராயமே இன்னும் வரவில்லை. அவளை நான் கவனித்துக் கொள்கிறேன். நீ இனி ஒரு கணமும் இங்கே தாமதிக்க வேண்டாம்!"

அச்சமயம் மதிள் சுவர்களுக்கு வெளியில் வெகு சமீபத்தில் எழுந்த ஆரவாரத்தைக் கேட்ட கந்தமாறன் "அப்பா இது என்ன? மலையமான் படைகள் நெருங்கி வருவது போல் காண்கிறதே? மலையமானைத் தாங்கள் மாலையில் பார்த்தபோது அந்தக் கிழவன் என்ன சொன்னான்?" என்று கேட்டான்.

"நல்ல மங்களகரமான செய்தியைத்தான் சொன்னான். மணிமேகலையை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்கப் போகும் செய்தி அறிந்து

அக் கிழவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தானாம். அதே மணப்பந்தலில் அவனுடைய மகள் வயிற்றுப் பேத்தி ஒருத்தியையும் மணஞ் செய்து கொடுக்கலாம் என்று அழைத்து வந்திருக்கிறானாம்! அழகாயிருக்கிறதல்லவா? மாளிகைக்கு வரும்படி நான் அழைத்ததற்கு, நாளைப் பொழுது விடிந்ததும் நல்ல முகூர்த்தத்தில் வருவதாகச் சொல்லியிருக்கிறான். அவனுடைய வீரர்கள் இப்போதே வரப் போகும் திருமணத்தைக் கொண்டாடுகிறார்கள் போலிருக்கிறது!"- இவ்விதம் கூறி விட்டுச் சம்புவரையர் சிரிக்கப் பார்த்தார். ஆனால் சிரிப்பு அரைகுறையாக நின்றுவிட்டது.

"வா! வா! நானே உன்னைச் சுரங்கப்பாதையில் கொண்டுபோய் விட்டு விட்டு வருகிறேன். வழியில் ஒரு விநாடியாவது நீ தாமதிக்கக்கூடாது.



வழியில் எங்கேயாவது குதிரை சம்பாதித்துக்கொண்டு விரைந்து போக வேண்டும்!'' என்றார்.

சம்புவரையர் கையில் ஒரு தீபத்தை எடுத்துக்கொண்டார். இருவரும் சுரங்கப்பாதையில் புகுந்தார்கள். விரைவாக நடந்தார்கள். மாளிகையின் மதில் சுவரைக் கந்தமாறன் கடந்தபிறகு, சம்புவரையர் அவனைக் கட்டித் தழுவி ஆசி கூறிவிட்டுத் திரும்பினார். ''விளக்கு வேண்டுமா?'' என்று கேட்டதற்கு கந்தமாறன் ''வேண்டாம், அப்பா! எனக்கு இந்த வழி நன்றாய்த் தெரிந்ததுதானே? கண்ணைக் கட்டி விட்டாலும் போய் விடுவேன்!'' என்றான்.

அவன் சுரங்கப்பாதையில் கண்ணுக்கு மறைந்த பிறகு சம்புவரையர் திரும்பினார். வழியில் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்தார். அடுத்த அறையில் ஏதாவது சப்தம் கேட்கிறதா என்று காது கொடுத்துக் கேட்டார். ஒன்றும் கேட்கவில்லை. சில கண நேரம் தயங்கி நின்றார். பிறகு, ஒரு முடிவான தீர்மானத்துக்கு வந்தவர் போல், பெருமூச்சு விட்டார். விளக்கை நன்றாகத் தூண்டி, வைக்க வேண்டிய இடத்தில் வைத்துவிட்டு விரைந்து திரும்பிச் சென்றார்.

திரும்பச் சம்புவரையர் முன்கட்டுக்குச் சென்றதும், அந்தப்புரத்துப் பெண்களையெல்லாம் ஒன்று சேர்த்தார்.

அவர்கள் எல்லாரும் ஏற்கெனவே கலங்கிப்போயிருந்தார்கள். கண்ணீரும் கம்பலையுமாகக் கந்தமாறனால் அந்தப்புரத்தில் கொண்டு வந்து தள்ளப்பட்ட மணிமேகலையைக் கேட்டு அவர்கள் ஒருவாறு கரிகாலன் மரணத்தைப் பற்றித் தெரிந்துகொண்டிருந்தார்கள்.

''பெண்களே! நம் குலத்துக்கு என்றுமில்லாத பெரும் விபத்து ஏற்பட்டுவிட்டது. எந்த நிமிஷத்திலும் நீங்கள் இந்த மாளிகையை விட்டுப் புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும். பல தினங்கள் காட்டிலும் மலையிலும் காலங் கழிக்கவும் துணிவு பெற வேண்டும். எல்லாரும் அவரவர்களுடைய ஆடை ஆபரணங்களை எடுத்துக்கொண்டு நிலா முற்றத்துக்கு வந்து சேருங்கள். அழுகைச் சப்தமோ, புலம்பல் சப்தமோ 'முணுக்' என்றுகூடக் கேட்கக் கூடாது! தெரியுமா?'' என்று எச்சரித்தார்.

பின்னர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசற்பக்கம் வந்தார். முன் வாசல் கோபுரத்தின் மேல் ஏறி வெளியிலே என்ன அவ்வளவு ஆரவாரம் என்று தெரிந்துகொள்ள விரும்பினார். அதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. ஏனெனில், அவர் முன்வாசலை நெருங்கும் போதே வெளியிலிருந்து வீரர்கள் கோட்டை வாசற் கதவுகளைத் தகர்த்துத் தள்ளிவிட்டு உள்ளே தடதடவென்று புகுந்துகொண்டிருந்தார்கள். வாசற் காவலர்கள் அவர்களைத் தடுக்க முயன்று முடியாமல் கீழே விழுந்துகொண்டிருந்தார்கள்.

இதுவல்லாமல், கோட்டையின் மதில் சுவர் மீது ஏறிக் குதித்தும் வீரர்கள் உள்ளே புகுந்துகொண்டிருந்தார்கள்.

சம்புவரையரின் உள்ளத்தில் பெரும் பீதியும் கலக்கமும் ஏற்பட்டன. கரிகாலன் கொலையுண்ட செய்தி ஒருவேளை மலையமானுக்குத் தெரிந்துவிட்டதா, என்ன? இதற்குள் எவ்விதம் தெரிந்திருக்கும்? - தெரிந்தால் தெரியட்டும். எப்படியும் தெரிந்துதானே தீர வேண்டும்? ஆனால் இன்னும் சிறிது நேரத்துக்கு இவர்களை இங்கேயே நிறுத்தித் தாமதப்படுத்தி வைக்க வேண்டும். அரை நாழிகை நேரம் தாமதித்தால் போதுமானது. அதற்குள் தாம் உத்தேசித்த காரியம் நிறைவேறிவிடும்...

கோட்டை வாசலுக்கும் மாளிகை முகப்புக்கும் நடுவில் இருந்த நிலா முற்றத்தின் நடுவில் சென்று சம்புவரையர்

கம்பீரமாக நின்றார். அவர் கையிலே கூரிய வாள் மின்னியது. அவருக்குப் பின்னால் ஏழெட்டு வீரர்கள் நெடிய வேல்களைப் பிடித்துக்கொண்டு நின் றார்கள். அவர்களில் சிலர் கையில் தீவர்த்தி வெளிச்சம் வைத்துக்கொண்



டிருந்தார்கள்.

வாசற் கதவுகளை உடைத்துத் தகர்த்துக்கொண்டு முன்னால் வந்த வீரர்களைத் தொடர்ந்து திருக்கோவலூர் மலையமானும் பார்த்திபேந்திரனும் வந்தார்கள்.



நிலா முற்றத்தின் நடுவில் நின்ற சம்புவரையரைப் பார்த்துவிட்டுப் பார்த்திபேந்திரன் மலையமானுக்கு அவரைச் சுட்டிக் காட்டினான். இருவரும் சம்புவரையரை நோக்கி வந்தார்கள்.

அருகில் வரும்போதே மலையமான், "சம்புவரையரே! இது என்ன நான் கேள்விப்படுவது? அத்தகைய பாதகத்தையும் செய்வீரா? ஓகோ! இது என்ன? கையில் வாளுடன் நிற்கிறீரே? உமது உத்தேசம் என்ன?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"அந்தக் கேள்வியை உங்களிடம் கேட்கத்தான் நிற்கிறேன். உங்கள் உத்தேசந்தான் என்ன? வாசற் கதவைத் தகர்த்துக்கொண்டு வந்ததின் நோக்கம் என்ன? சற்று முன்னால் நான் வந்து தங்களை அழைத்தேன். நாளைக்கு நல்லவேளை பார்த்துக்கொண்டு வருவதாகச் சொன்னீர்கள்...

"சம்புவரையரே! நல்லவேளை இப்போதே வந்துவிட்டது. அதனாலேதான் வந்தேன். ஆதித்த கரிகாலன் எங்கே? வீரபாண்டியன் தலைகொண்ட வீராதி வீரன் எங்கே? சேவூர்ப் போர்க்களத்தின் வெற்றி வீரன் எங்கே? என் பேரன் எங்கே?" என்று மலையமான் கேட்டார்.

"என்னைக் கேட்டால், எனக்கு என்ன தெரியும்? இளவரசருக்கு இஷ்டப்பட்ட இடத்தில் அவர் இருப்பார். அந்த முரட்டுப் பிள்ளையிடம் நான் எவ்விதப் பேச்சு வார்த்தையும் வைத்துக் கொள்வதில்லையென்றுதான் முன்னமே தங்களிடம் சொன்னேனே? பார்த்திபேந்திரனுக்கும் அது தெரிந்த செய்திதான்!"

"அடே சம்புவரையா! இவ்வாறு வீண் சாக்குப்போக்குச் சொல்லி ஏமாற்றப் பார்க்காதே! ஆதித்த கரிகாலனை உடனே கொண்டு வந்து எங்களிடம் ஒப்புவித்து விடு! இல்லாவிட்டால், உன்னுடைய இந்தக் கோட்டை கொத்தளம் மாளிகை எல்லாவற்றையும் இடித்துத் தகர்த்து மண்ணோடு மண்ணாக்கி விடுவேன்!" என்று திருக்கோவலூர் மலையமான் கர்ஜித்தார்.

"பார்த்திபேந்திரா! இந்தக் கிழவன் என்ன பிதற்றுகிறான்? இவனுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்துவிட்டதா? இளவரசரைக் கொண்டு வந்து இவனிடம் ஒப்புவிப்பதற்கு நான் யார்? இவன்தான் யார்? இளவரசரை நான் சிறைப்படுத்தி வைத்திருக்கிறேனா? அல்லது இவன் இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போகப் போகிறானோ?" என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன் சிறிது சாந்தமான குரலில், "சம்புவரையரே! பதற வேண்டாம்! கிழவருக்குக் கோபம் வரக் காரணம் இருக்கிறது. இதோ இந்த ஓலையைப் பாருங்கள். தாங்களே தெரிந்து கொள்வீர்கள்!" என்று கூறிச் சிறிய ஓலைத் துண்டு ஒன்றைச் சம்புவரையர் கையில் கொடுத்தான்.

அவர் அதைப் பின்னால் பிடிக்கப்பட்ட தீவர்த்தியின் வெளிச்சத்தில் நன்றாக உற்றுப் பார்த்தார்.

"இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கு ஆபத்து. உடனே படைகளுடன் வந்து காப்பாற்றவும்" என்று அந்த ஓலையில் எழுதியிருந்தது.

அதைப் படிக்கும்போதே சம்புவரையர் முகமெல்லாம் வியர்த்தது. முன்னர், கரிகாலனுடைய சடலத்தைக் கண்டதும் அவருடைய உடல் நடுங்கியது போல் இப்போதும் ஆடி நடுங்கியது.

"இது என்ன சூழ்ச்சி! இது என்ன சதி? யார் இப்படி ஓலை எழுதியிருக்க முடியும்?" என்று தடுமாறினார்.

"ஓலை யார் எழுதினால் என்ன? ஆதித்த கரிகாலரை உடனே இவ்விடம் அழைத்து வா! அல்லது அவர் இருக்குமிடத்துக்கு எங்களை அழைத்துப் போ! இல்லாவிடில், என் வீரர்களை விட்டுத் தேடச் சொல்லட்டுமா?" என்று கேட்டார் மலையமான்.

"ஆகட்டும், ஐயா! கரிகாலர் இருக்கு

மிடத்துக்கு உங்களை அழைத்துப் போகிறேன். பார்த்திபேந்திரா! உனக்கு அந்த இடம் தெரியும். பழுவூர் இளைய ராணியின் அந்தப்புரத்துக்குப் போயிருக்கிறார் என்று சற்று முன் அறிந்தேன். அங்கே இவரை நீயே அழைத்துப் போ!'' என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன், ''ஆம், தாத்தா! வாருங்கள்! நானே உங்களை அழைத்துப் போகிறேன்!'' என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுப் பார்த்திபேந்திரன் பழுவூர் இளையராணி நந்தினி தங்கியிருந்த அந்தப்புரம் இருந்த திக்கை நோக்கினான்.

''ஐயோ! இது என்ன?'' என்று அலறினான். ஏனெனில், அவன் பார்த்த திக்கில் அப்போது தீ கொழுந்து விட்டு எரிந்துகொண்டிருந்தது. தீயின் கொழுந்துகளுக்கு மேலே கரிய புகை மண்டலம் அடர்ந்திருந்தது.

அவன் பார்த்த திசையை எல்லாரும் பார்த்தார்கள். ''தீ! தீ!'' என்ற பீதி நிறைந்த ஒலி எல்லாருடைய கண்டங்களிலிருந்தும் கிளம்பியது.

பார்த்திபேந்திரன் சிறிது திகைப்பு நீங்கியவனாய், ''சம்புவரையரே! முதலில் இந்த ஓலையை நான் நம்பவில்லை. இப்போது நம்புகிறேன். ஏதோ சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. - பாட்டா! இந்தச் சதிகாரர்களை உடனே சிறைப்படுத்தச் சொல்லுங்கள்! நான் போய் இளவரசர் இருக்குமிடத்தைப் பார்த்துத் தேடி அழைத்து வருகிறேன்!'' என்று சொன்னான்.

சம்புவரையர் மறுபடியும் பழைய தைரியமான குரலில், ''ஆமாம், பார்த்திபேந்திரா! சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. ஆனால் செய்தவர்கள் நீங்கள். என் அரண்மனையின் கதவைத் தகர்த்துக்கொண்டு புகுந்தீர்கள். உங்கள் வீரர்களை ஏவி விட்டுத் தீ வைக்கும்படி சொல்லியிருக்கிறீர்கள். இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து என்றால், அதுவும் உங்களாலேதான் நேர்ந்திருக்க வேண்டும்! ஜாக்கிரதை! இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்கும் காலம் வரும்!'' என்றார்.

பார்த்திபேந்திரன் அவருடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல் ஓடினான்.

அதே சமயத்தில் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் கும்பலாக மாளிகைக்குள்ளேயிருந்து நிலா முற்றத்துக்கு வந்தார்கள். அவர்களுடைய மனக் கலக்கத்தை அவர்கள் முக பாவங்கள் வெளிப்படுத்தின. ஆனால் யாருடைய குரலிலிருந்தும் ஒரு சிறு முனகலாவது விம்மலாவது கேட்கவில்லை.

அவர்களில் சிலருடைய கவனம் மாளிகையின் பின்புறத்தில் வெளிச்சமாகத் தெரிந்த இடத்திற்குச் சென்றது. ஒருவரையொருவர் சுட்டி அழைத்துக் கொழுந்து விட்டெரிந்த தீச் சுடரைக் காட்டினார்கள். மணிமேகலையும் அதைப் பார்த்தாள். உடனே ''ஐயோ! தீ! தீ! அவர் அங்கு இருக்கிறாரே!'' என்று அலறிக்கொண்டு அந்தத் திக்கை நோக்கி ஓடத் தொடங்கினாள். சம்புவரையர் குறுக்கிட்டு அவளை நிறுத்தினார். அவளுடைய முகத்தில் பளார் என்று ஓர் அறை கொடுத்தார். பிறந்தது முதல் யாரும் தன்னை இப்படி நடத்தி அறியாதவளான மணிமேகலை, - சம்புவரையரின் கண்ணுக்குக் கண்ணான செல்லப் பெண் மணிமேகலை, - தந்தையை வெறித்து நோக்கிய வண்ணம் ஸ்தம்பித்து நின்றாள்.

சம்புவரையர் சிறிது இரங்கிய குரலில், ''அசட்டுப் பெண்ணே! உனக்குத்தான் முன்னமே நான் எச்சரிக்கை செய்திருந்தேனே? ஏன் எனக்குக் கோபம் வரச் செய்கிறாய்?'' என்று கூறிவிட்டு, ''அதோ பார்! நீ அலறி அடித்துக் கொண்டு ஓட வேண்டிய அவசியம் இல்லை என்பதைத் தெரிந்துகொள்!'' என்றார்.

சம்புவரையர் சுட்டிக் காட்டிய திசையிலிருந்து வந்தியத்தேவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து

கொண்டிருந்தான். அவனுடைய தோளின் பேரில் ஆதித்த கரிகாலரின் உயிரற்ற உடலைச் சாத்தி எடுத்துக் கொண்டு வந்தான்.

சம்புவரையருக்கும் அவருடைய மகளுக்கும் நடந்த விவாதத்தில் கவனம் செலுத்திய மலையமானும் இப்போது வந்தியத்தேவனை நோக்கினார். அவன் மெள்ள மெள்ளத் தள்ளாடி வருவதையும், அவனுடைய தோளில் யாரையோ தூக்கிக்கொண்டு வருவதையும் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றார். ஏனோ அவருடைய முதுமைப் பிராயம் அடைந்த உடம்பு நடுங்கியது. உள்ளத்தில் ஒருவிதத் திகில் உண்டாயிற்று. கிட்ட நெருங்கி வந்தவனைப் பார்த்து ஏதோ கேட்க விரும்பினார். ஆனால் நா எழவில்லை; தொண்டை அடியோடு அடைத்துக்கொண்டு விட்டது.

வந்தியத்தேவன் மலையமானைப் பார்த்துக்கொண்டே அவர் அருகில் வந்தான்.

"ஐயா! இதோ இளவரசர் கரிகாலர்! வீரபாண்டியன் தலைகொண்ட இந்த வீராதி வீரரை உயிரோடு தங்களிடம் கொண்டு சேர்க்க என்னால் இயலவில்லை. உடலை மட்டும் தீக்கிரையாகாமல் கொண்டு சேர்த்தேன். விதியினாலும் சதியினாலும் கொல்லப்பட்ட உங்கள் பேரப் பிள்ளையை இனி நீங்கள் ஒப்புக்கொள்ளுங்கள்!" என்று கூறிவிட்டு வந்தியத்தேவன் இளவரசர் கரிகாலரின் சடலத்தை மெதுவாகக் கீழே இறக்கிப் படுக்க வைத்தான்.

உடனே தடால் என்று தானும் கீழே விழுந்து நினைவிழந்தான்.

கிழவர் மலையமான் இளவரசரின் உடலுக்கு அருகில் உட்கார்ந்தார். அவருடைய வீரத் திருமுகத்தைச் சற்று நேரம் உற்று நோக்கினார். திடீரென்று மலை குலுங்குவது போல் அவருடைய உடம்பெல்லாம் குலுங்கி அசைந்தது! அலைகடலின் பேராரவாரத்தைப் போல் அவருடைய தொண்டையிலிருந்து "ஐயோ!" என்ற சோகக் குரல் வந்தது.

தம் இரும்பையொத்த முதிய கைகளினால் தலையிலும் மார்பிலும் மாற்றி மாற்றி அடித்துக்கொண்டார்.

"என் செல்வமே! உன்னை மணக் கோலத்தில் பார்க்க வந்தேனே! பிணக் கோலத்தில் பார்க்கிறேனே!" என்று எட்டுத் திசையும் கிடுகிடுத்து நடுங்கும்படியாக அலறினார்.

பின்னர், அம் முதுபெருங் கிழவர் ஆதித்த கரிகாலன் பிறந்ததிலிருந்து நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகக் கூறிப் புலம்பினார். அவன் பிறந்த நாளில் நடத்திய கொண்டாட்டங்களைக் குறிப்பிட்டார். அவன் குழந்தையாயிருந்தபோது தமது மடியிலும் கரங்களிலும் தோள்களிலும் கொஞ்சி விளையாடியதைச் சொல்லி அழுதார். அவனுக்கு வேல் எறியவும் வாள் பிடித்துச் சண்டை செய்யவும் தாம் கற்றுக் கொடுத்ததையெல்லாம் சொன்னார். பதினாறாவது பிராயத்தில் சேவூர்ப் போர்க்களத்தில் அவன் நிகழ்த்திய அஸகாயசூரத்தனமான வீர பராக்கிரமச் செயல்களை ஒவ்வொன்றாகக் கூறித் துக்கித்தார்.

"ஐயோ! பாண்டியனோடு நடத்திய அந்த வீரப் போர்களிலே நீ இறந்து வீர சொர்க்கம் அடைந்திருக்கக் கூடாதா? இந்தச் சண்டாளன் சம்புவரையனும் இவனுடன் சேர்ந்த சதிகாரர்களும் செய்த சூழ்ச்சிக்கு இரையாகியா மாண்டிருக்க வேண்டும்? அந்தோ! உன்னை நானே இவன் விருந்தாளியாகப் போகும்படி சொல்லி அனுப்பினேனே? எனக்கு வயதாகி விட்டது. உனக்கு இங்கே நண்பர்கள் வேண்டும் என்று எண்ணி, இவன் மகளை நீ மணந்து கொண்டால் உன் கட்சியில் இருப்பான் என்று நம்பி அனுப்பினேனே? சம்புவரையன் மாளிகைக்கு அனுப்புவதாக எண்ணிக் கொண்டு யமனுடைய மாளிகைக்கு விருந்தாளியாக அனுப்பி விட்டேனே? நான் அல்லவோ பாதகன்? நான்

அல்லவோ உன்னைக் கொன்றவன்?'' என்று கூறி மீண்டும் மீண்டும் தம் தலையிலே அடித்துக்கொண்டார்.

பின்னர் திடீரென்று சோகத்திலிருந்து விடுபட்டு ரௌத்திராகாரம் அடைந்து சுற்றுமுற்றும் பார்த்தார். ''அடே சம்புவரையா! உண்மையைச் சொல்! இளவரசர் எப்படியடா மாண்டார்? என்ன சூழ்ச்சியடா செய்தாய்? தேவேந்திரனே வந்து எதிர்த்தாலும் நேருக்கு நேர் நின்று அவனை வென்றிருக்க முடியாதே? எத்தனை பேரை அவன் பேரில் ஏவி விட்டாய்? அவர்கள் எங்கே மறைந்திருந்து எப்படியடா இந்த வீராதி வீரனைக் கொன்றார்கள்? உண்மையைச் சொல்லி விடு!'' என்று கர்ஜித்தார்.

சம்புவரையரும் கோபத்தோடு, ''கிழவா! உன் முதுமைப் பிராயத்தை முன்னிட்டுப் பொறுத்திருக்கிறேன். இளவரசர் எப்படி இறந்தார் என்று உனக்கு எவ்வளவு தெரியுமோ, அவ்வளவுதான் எனக்கும் தெரியும்! இளவரசர் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வந்தானே, அவனைக் கேட்டால் ஒருவேளை சொல்லுவான்! என்னைக் கேட்பதில் என்ன பயன்?'' என்றார்.

''அடே! உன்னுடைய மாளிகையில் உன்னுடைய விருந்தாளியாக இருக்கும் போது இச்சம்பவம் நேர்ந்திருக்கிறது. நீ ஒன்றும் அறியாதவன் போலப் பேசுகிறாய். இதை யார் நம்புவார்கள்? நல்லது; உன்னைச் சுந்தர சோழ சக்கரவர்த்தி கேட்கும்போது இந்த மறுமொழியை அவரிடம் சொல்லு! வீரர்களே! இந்தச் சம்புவரையனையும் சிறைப்படுத்துங்கள். இவனுடைய மாளிகை, மதில் சுவர் எல்லாவற்றையும் இடித்துத் தரையோடு தரை ஆக்குங்கள்!'' என்று கிழவர் இடி முழக்கம் போன்ற குரலில் கட்டளையிட்டார்.

அப்போதுதான் திரும்பி வந்திருந்த பார்த்திபேந்திரன் மலையமானைப் பார்த்து ''ஐயா! இந்த மாளிகையை அழிக்கும் பொறுப்பு நமக்குக் கிடையாது. அக்னி பகவான் அந்த வேலையை மேற்கொண்டு விட்டார்! அதோ பாருங்கள்!'' என்றான்.

மலையமான் பார்த்தார். அந்தப் பெரிய மாளிகையில் ஒரு மூலையில் சற்று முன் காணப்பட்ட தீ வெகு சீக்கிரமாகப் பரவி வருவதைக் கண்டார். பிரம்மாண்டமாக வளர்ந்து வானளாவிக் கொழுந்து விட்டெரிந்த அப்பெருந் தீ மாட கூடங்களையும், மச்சு மெத்தைகளையும், கோபுரக் கலசங்களையும் விழுங்கிப் பஸ்மீகரம் செய்து கொண்டு மேலும் மேலும் இரை தேடி அதன் ஆயிரம் பதினாயிரம் செந்நாக்களை நீட்டிக் கொண்டு விரைந்து வருவதைக் கண்டார். அந்தக் கோர பயங்கரமான காட்சியைப் பார்த்த வண்ணமாகத் திருக்கோவலூர் வீரர்கள் பிரமித்து நிற்பதையும் கண்டார்.

''சரி! சரி! அக்னி பகவான் நமது வேலையை ஏற்றுக்கொண்டு விட்டார். நல்லது, பார்த்திபேந்திரா! உடனே புறப்படுவோம். மூன்று உலகமாளும் சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது மூத்த மகனைப் பார்க்க வேண்டும் என்று மூன்று வருஷமாகச் சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். என் மகள் வானமாதேவி இளவரசனை அழைத்து வரும்படி எனக்குச் சிபாரிசு மேல் சிபாரிசு அனுப்பிக்கொண்டிருந்தாள். உயிரற்ற இளவரசனின் சடலத்தையாவது அவர்கள் கடைசி முறை பார்க்கட்டும். இந்த வீராதி வீரனுடைய உடலைச் சண்டாள சம்புவரையனுடைய மாளிகையை விழுங்கிய அக்கினிக்கு நாம் இரையாக்க வேண்டாம். தஞ்சாவூருக்கு எடுத்துச் செல்வோம். சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் கொண்டு போய்ப் போடுவோம். உயிர்களையிழந்த திருமுகத்தை யாவது பெற்ற தாயும் தகப்பனாரும் பார்த்துப் புலம்பட்டும். இளவரசனைக் கொன்ற சண்டாளப் பாதகர்களுக்குத் தக்க தண்டனை சக்கரவர்த்தியே விதிக்கட்டும்'' என்றார் மலையமான்.

(தொடரும்)

# இலக்கிய உலகில் இன்னொரு சண்டை!

வெளியே பெய்து கொண்டிருந்த மழையை ஆவியாக்கிவிடக்கூடிய அளவுக்குத் தீப்பொறி பறந்தது அந்தக் கூட்டத்தில். மேடையில், எழுத்தாளர்கள் சு.சமுத்திரம், வல்லிக்கண்ணன், விக்கிரமன், பா. செயப்பிரகாசம், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத் தலைவர் செந்தில்நாதன், இன்குலாப், அ.குமரேசன் என்று ஒரு பெரிய படை.

அத்தனை பேரும் சேர்ந்து தாக்கியது சக எழுத்தாளர் சா. கந்தசாமியையும் சாகித்ய அகாடமி அமைப்பையும்.

தாக்குதலுக்கான காரணம்...?

1960-1995 வரையிலான காலகட்டத்துத் தமிழ்ச் சிறுகதைகளின் தொகுப்பு ஒன்றைத் தயாரிக்க சாகித்ய அகாடமி சா. கந்தசாமியைப் பணித்தது. 'அந்தப் பணியைத் தொகுப்பாளர் நடுநிலையாகச் செய்யவில்லை; சிறுகதை இலக்கியத்தில் பல போக்குகளை உருவாக்கிய முக்கிய எழுத்தாளர்கள் பலருக்கு இடம் தரப்படவில்லை; தமக்கு 'வேண்டிய' எழுத்தாளர்களை மட்டும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்...' என்று குற்றச்சாட்டுகளை அடுக்கியது எதிர்ப்புக்குழு. 'அது மட்டுமல்ல, இத்தனைக்கும் பிறகு மீண்டுமொரு சிறுகதைத் தொகுப்புப் பணியை-அதிலும் நூற்றாண்டின் சிறந்த கதைகளைத் தொகுக்கும் பணியை சா. கந்தசாமிக்கே தந்திருக்கிறது அகாடமி. தமிழில் வேறு ஆட்களில்லையா? இது மாபெரும் மோசடி!' என்று கொதிக்கிறது எதிர்ப்புக் குழு.

'சாகித்ய அகாடமிக்காக ஜெயகாந்தன் பற்றிய டாகுமெண்டரியைத் தயாரிக்கும் பணியும் சா. கந்தசாமிக்கே தரப்பட்டது. மீண்டும் மீண்டும் ஒருத்தருக்கே வாய்ப்புகள் என்பது அநீதி' என்று சாடியது எழுத்தாளர் குழு.

"மக்கள் பணத்தில் செயல்படுகிறது சாகித்ய அகாடமி. ஆனால் வெகுஜன பத்திரிகைகளில் எழுதுகிறார்கள் என்பதற்காகவே சிலரைப் புறக்கணிக்கிறது. இந்த அமைப்புக்கு எழுத்தைக்காட்டிலும் எழுத்தாளர்களே முக்கியமாகத் தெரிகிறார்கள்." -இது சு. சமுத்திரத்தின் குற்றச்சாட்டு.

"அகாடமிக்கு ஆலோசனைக் குழு உண்டு. அதில் சிவகாமி ஓர் உறுப்பினர். அவர் சுற்றுலாத்துறை அதிகாரியாக ஆஸ்திரேலியாவில் பணியாற்றி வருகிறார். நாடு திரும்ப ஐந்தாண்டுகள் ஆகும். மற்ற இரு உறுப்பினர்கள் கி. ராஜநாராயணன், டி. செல்வராஜ். இவ்விருவரும் இல்லாத சமயம் பார்த்துத் திட்டமிட்டு இரண்டாவது சிறுகதைத் தொகுப்பு பற்றி முடிவெடுத்திருக்கிறார்கள். நடுநிலை வகிப்பவர்களுக்கு அகாடமியில் மதிப்பில்லை. அத்தகையவர்கள் கூட்டங்களின்போது மிரட்டி அடக்கப்படுகிறார்கள்..."- இது மணிமுடியின் குற்றச்சாட்டு.

"ஐம்பது ஆண்டுகளாக எழுதிவருகிறேன். என் சிறுகதைகளில் ஒன்றுகூடவா தொகுப்பில் இடம்பெற லாயக்கில்லை?"- இது விக்கிரமனின் வருத்தம்.

"முதல் தொகுப்புக் கதைகளுள் சாவு பற்றியவை 19! முறையற்ற பாலுறவு பற்றியவை ஆறு! இத்தகைய பார்வை உடையவர் நூறாண்டுக் கதைகளை எவ்வாறு தொகுப்பாரோ? ஒரு குழுவே செய்ய வேண்டிய தொகுப்புப் பணியைத் தனி ஒருவருக்குத் தர வேண்டுமா? தமிழ்ப் படைப்புலகில் வேறு

• வல்லிக்கண்ணன், செந்தில்நாதன், விக்ரமன்,



நபர்கள் இல்லையா?"- இவை வல்லிக்கண்ணன் எழுப்பும் கேள்விகள்.

"சாகித்ய அகாடமியின் செயல்பாடு முறைகள் வெளிப்படையாக்கப்படவேண்டும். எந்த அடிப்படையில் தொகுப்பாளர்களும் எழுத்தாளர்களும் தேர்வு செய்யப்படுகிறார்கள் என்பது தெரிந்தாக வேண்டும்"- தமிழக முற்போக்கு எழுத்தாளர் சங்கத் தலைவரான செந்தில்நாதனின் காட்டமான கோரிக்கை.



• சமுத்திரம்

இரவு பத்து மணி வரை நடந்த எதிர்ப்புக் கூட்டம், 'இத்தனைக்கும் பிறகு சா.கவிடம் தான் தொகுப்பு பொறுப்பு தரப்படும் என்று அகாடமி சொன்னால், தெருவில் இறங்கிப் போராடுவோம்' என்று தீர்மானம் போட்டு விட்டது.

குற்றச்சாட்டுகளுக்கு சா. கந்தசாமியின் பதில் என்ன..? அவரிடமே கேட்டபோது சொன்னார்:

"தொகுப்புப் பணியை எனக்குத் தர வேண்டும் என்பது அகாடமி ஆலோசனைக் குழுவின் முடிவு.

"பிற மொழிகளில் இருபதாம் நூற்றாண்டுச் சிறுகதைகள் தொகுக்கப்பட்டிருப்பது போல் தமிழிலும் செய்ய வேண்டாமா? என்று சாகித்ய அகாடமிக்கு நான்தான் கடிதம் எழுதினேன். இப்போது எதிர்ப்பவர்கள் அப்போது என்ன செய்து கொண்டிருந்தார்கள்? அதே போல், தமிழ் எழுத்தாளர் ஒருவர் பற்றிக்கூட டாகுமென்டரி வரவில்லையே என்று டெல்லிக்குக் கடிதம் எழுதியதும் நான்தான். 'டாகுமென்டரி எடுக்க யார் இருக்கிறார்கள்?' என்று கேட்டபோது இதுவரை நானே இருபது டாகுமென்டரிகள் எடுத்திருப்பதைச் சொல்லி வாய்ப்புக் கேட்டேன், கொடுத்தார்கள்.

"பிற மொழிகளிலிருந்து தமிழுக்குப் பல புத்தகங்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆனால் தமிழ்ப் புத்தகங்கள் பிற மொழிகளுக்கு அந்த அளவு போகவில்லை. அதுவும் உருது மொழிபெயர்ப்பு ஒன்றுகூட இல்லை. இதற்காக கடந்த பத்தாண்டுகளாக சாகித்ய அகாடமியுடன் சண்டைபோட்டு வருகிறேன். - எனக்காக அல்ல; என் மொழிக்காக.

"ஒருவரே ஏன் தொகுப்புத் தயாரிக்க வேண்டும்? ஒரு குழு செய்ய வேண்டிய வேலை இது என்கிறார்களே...? பிற மொழித் தொகுப்புகள் ஒரே தொகுப்பாளரால்தான் தயாரிக்கப்படுகின்றன. தொகுப்பாளர் மீதோ தொகுப்பின் மீதோ குறை கூற விரும்பினால் திருத்தங்களையும், பரிந்துரைகளையும் அகாடமிக்குத் தெரிவிக்கலாம். அகாடமியும் அதை ஏற்று, மதிப்பீட்டாளர் ஒருவருக்குப் புத்தகத்தை அனுப்பி வைக்கும். அந்த மதிப்பீட்டாளர் தரும் ஆலோசனைகளைத் தொகுப்பாளர் ஏற்றாக வேண்டும். அதன் பிறகுதான் நூல் வெளியாகும்.

"ஒவ்வொரு கட்டத்திலும் கருத்து தெரிவிக்க வாய்ப்பு இருக்கிறபோது ஏன் முறைப்படி அகாடமியிடம் அதைத் தெரிவிக்கக் கூடாது? அகாடமி செயல்பாடுகள் வெளிப்படையானவை. பாலன்ஸ் ஷீட்டைக் கூட பார்வைக்குத் தருகிறார்கள்.

"இந்தப் பணியில் பொருளாதார ஆதாயம் பெரிதாகக் கிடைக்காது. மொத்த வேலைக்கும் ஐயாயிரம் ரூபாய் தருவார்கள். புத்தக விற்பனையிலிருந்து ராயல்டி கிடையாது.



• சா. கந்தசாமி

ஆனால் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்களிடம் பதிப்பு உரிமை பெற்றுத்தரும் பொறுப்பு தொகுப்பாளருடையது...

"எழுத்தாளர்கள் சகஜமான தொடர்பு வைத்துக் கொண்டு நட்பை வளர்த்துக் கொள்ளாமல் ஒதுங்கிப் போவதினால் என்ன பயன்? இன்று கூட்டம் போடுகிறார்கள். அகாடமிக்கு என்றைக்காவது கருத்துத் தெரிவித்துக் கடிதம் எழுதியதுண்டா!" என்று கோபத்துடனும் வருத்தத்துடனும் கேட்கிறார் சா. கந்தசாமி.

எல்லாவற்றிலும் பெரிய வேடிக்கை, இருபதாம் நூற்றாண்டுச் சிறுகதைகளைத் தொகுக்கும் பணி பற்றிய அதிகாரபூர்வமான ஆணை இன்னமும் சா. கந்தசாமிக்கு வந்து சேரவில்லை என்பதுதான்!

**— சக்கரத்தாழ்வார்**

படங்கள்: **வெங்கடேஷ்**

ஒருவரது உடலில், நோய் எதிர்ப்பு சக்தி குறைகிறபோதுதான் நோய்க் கிருமிகள் உடலினுள் புகுவதற்கு வசதியாக நுழைவாயில் திறந்து விடப்படுகிறது. இதை அலோபதி மருத்துவத்திலும் சொல்கிறார்கள். 'வருமுன் காப்போம்' என்பது நம் மரபு. இதைத் தான் சித்த மருத்துவர்கள் கடைபிடிக்கிறார்கள்.

பிறந்த குழந்தைக்கு, ஐந்தாவது நாளிலிருந்தோ இல்லையென்றால், ஒன்பதாவது நாளிலிருந்தோ, உடலில் நோய் எதிர்ப்பு சக்தியை வளர்க்க மருந்து கொடுக்கிறார்கள். இந்த மருந்து முக்கியமாக மூன்று பொருட்களைக் கொண்டது. அவை மிளகு, வேம்பு, சீரகம். இந்த மூன்றையும் நன்றாக அரைத்து இரண்டு சிட்டிகை அளவுக்கு எடுத்துத் தாய்ப் பாலில் கலந்து குழந்தைக்குக் கொடுத்தால், நோய் எதிர்ப்பு சக்தி நிறைய இருக்கும். இந்த மருந்துக்கு வேப்பங்காரம் என்று பெயர்.

பழங்காலத்தில், சித்தர்கள், காடு, மேடு, மலைப்பகுதிகளில் அலைந்து திரிந்த பொழுது ஆயிரக்கணக்கான செடி, கொடி, மரங்களை ஆழமாய் ஆராய்ந்து, அவற்றின் அரிய குணாதிசயங்களைக் கண்டறிந்தார்கள். அவர்கள் கண்ட எல்லா மூலிகை

# கிச்சனில் ரசம்;



களும், தாவரங்களும் அவர்களுக்கு வியப் பூட்டின என்று கூற முடியாது. ஆனால், அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திய ஒரு சிலவற்றில் சீரகமும் உண்டு!

நம் அகத்தைச் சீராக வைத்திருக்க சீரகம் உதவுவதன் காரணமாகத்தான் அதற்கு 'சீரகம்' என்றே பெயர் வந்தது. சித்த மருத்துவத்தைப் பொறுத்தவரை, மிளகும், சீரகமும் இரட்டைப் பிறவிகள் போலத் தான். மிளகு, சீரகம் என்று ஒன்றாகச் சேர்த்துச் சொல்வதுதான் வழக்கமே தவிர மிளகு வேறு, சீரகம் வேறு என்று வேறுபடுத் திப் பார்க்கும் வழக்கமில்லை. சொல்லப் போனால் பல வீடுகளின் அஞ்சறைப் பெட்டிகளில் மிளகையும் சீரகத்தையும் தனித்தனியாக வைத்திருக்க மாட்டார்கள். இரண்டையும் ஒன்றாகவே போட்டு வைத் திருப்பது வழக்கம்.

மனிதனுக்கு நோய்கள் வருவதற்குண் டான அடிப்படைக் காரணம், அவ னுடைய உடம்பின் உஷ்ண நிலை. அது கூடினால், ஒருவிதமான நோய்கள் வரும். குறைந்தால் வேறுவிதமான பாதிப்புகள். உடலின் உஷ்ணநிலை கூடுவதாலும் குறைவதாலும் வரும் நோய்களுக்கு, ஒரே மருந்து என்றால், உங்களுக்கு ஆச்சரிய



'மூலிகைமணி'
டாக்டர் க. வேங்கடேசன்
டாக்டர் க.வே. அபிராமி

கேரளாவுக்குப் போனால், அன்றாடம் குடிக்கிறத் தண்ணீரையே 'சீரக வெள்ளம்' என்றுதான் குறிப்பிடுவார்கள். குறைந்த பட்சம் இரண்டு டம்ளர் சீரகத் தண்ணீரா வது ஒருவர் சாப்பிட்டு வந்தால், அது, ரத்தத்தைச் சுத்திகரிப்பதுடன், ரத்தக் குழாய்களின் சீதோஷ்ணநிலை ஒரே சீராக இருக்கும்படியாகச் செய்யும்.

தமிழில்கூட ஒரு பழமொழி உண்டு: ''சிறுபிள்ளை இல்லாத வீடும் வீடல்ல. சீரகம் இட்டு ஆக்காத களியும் களி யல்ல''

பெரும்பாலான நோய்களுக்கு முக்கிய

# கிளினிக்கில் வைத்தியம்!

மாக இருக்கும்.

ஆம்! அந்த அதிசய மருந்து சீரகம்தான். உயர்ந்துவிட்ட உஷ்ண நிலையையும் அது குறைக் கும். குறைந்துவிட்ட உஷ்ண நிலையையும் அது அதிகரிக்கும்.

எப்படியானாலும் ஐந்து சிட்டிகை சீரகத் தைத் தண்ணீரில் போட்டுக் கொதிக்க வைத்து, ஒரு டம்ளர் சாப்பிட்டால் போதும். நம் வீடுகளில் உள்ள பிரிட்ஜ், ஏ.சி. போன்ற உபகரணங்களில் உள்ள தெர்மோ ஸ்டார்ட் போல, உடம்பின் உஷ்ண நிலையை ஒரே சீராக இருக்கச் செய்துவிடும்! ஆக, சீரகம், சமசீதோஷணத்துக்கு உகந்த ஒன்று!

காரணம் மலச்சிக்கல். மலச்சிக்கலுக்குக் காரணம், வாய்வுத் தொல்லை. இந்த வாய்வுத் தொல்லை வயிற்றில் உள்ள சிறு குடலிலும், பெருங்குடலிலும்தான் ஏற்படு கிறது. சீரகத்துக்கு ஒரு விறுவிறுப்பூட்டும் குணம் உண்டு. சீரகம் சாப்பிட்டால், வயிற் றில் வாய்வு சேராமல் இருக்கும். இதனால் பல நோய்கள் வராமல் தடுத்துவிட




முடியும்.

எலுமிச்சம்பழச் சாறில் நன்றாக ஊற வைத்து, நிழலில் ஒன்றிரண்டு வார காலம் உலர்த்தினால், சீரகம் எலுமிச்சம் சாற்றை இழுத்துக் கொள்ளும். அதை நன்கு பொடியாக்கி ஒரு பாட்டிலில் போட்டு வைத்துக் கொள்ள வேண்டும். அதை பாலிலோ, மோரிலோ போட்டுக் கலக்கிச் சாப்பிடலாம். குறிப்பாக வெயில் காலங்களில், சீரகப் பொடி போட்டு, ஒரு கிளாஸ் மோர் குடித்தால், நம் உடம்பினுள்ளே ஒரு சுகமான அனுபவம் ஏற்படுவதை நாம் உணர முடியும்.

பித்த மயக்கம், வாந்தி, குமட்டல், வயிற்றில் அல்சர் போன்ற தொல்லை இருந்தால், சீரகப் பொடியுடன் சம அளவு நாட்டுச் சர்க்கரை கலந்து இரண்டு சிட்டிகை அப்படியே வாயில் போட்டுச் சாப்பிட்டால் நிவாரணம் கிடைக்கும்.

ஹைப்பர் டென்ஷன் உள்ளவர்களுக்கு, நாக்கில் உள்ள சுவை அரும்புகள் பாதிக்கப்பட்டு, சாப்பிடும் உணவின் சுவையை உணர முடியாது. லேசான கசப்பு இருக்கும். செரிமானப் பிரச்னைகூட இருக்கும். நெஞ்சு கரிப்பு இருக்கும். அப்படிப்பட்டவர்கள், இந்த எலுமிச்சம் சாறில் ஊற வைத்த சீரகப் பொடி மூன்று நான்கு சிட்டிகையை எடுத்து வாயில் போட்டு இலேசாக மென்றால், சுவை அரும்புகள் மீண்டும் புத்துணர்வு பெறும். ஹைப்பர் டென்ஷன் (பிளட் பிரஷர்) நிலையும் குறைந்து, பலன் கிடைக்கும்.

தினமும் சாப்பாட்டில் சீரகம் இருக்கும்படி பார்த்துக் கொண்டாலே போதும். வாரம் ஒரு நாளாவது சீரக ரசம் சாப்பிடுவது நல்லது. சீரகத்தை மருந்தாகப் பயன்படுத்துகிறபோது, சீரகம், கருப்பட்டி, வெல்லம், நெய் இவற்றைப் பயன்படுத்தி லேகியம் செய்து, நோயாளிகளுக்குக் கொடுப்போம். ஆக, கிச்சனில் சீரக ரசம் கிளினிக்கிலே சீரக லேகியம்!

எண்ணெய் தேய்த்துக் குளிக்கிறபோது, நல்லெண்ணையில் சீரகம் போட்டு நன்கு காய்ச்சித் தேய்த்துக் குளித்தால், கண்களுக்குக் குளிர்ச்சி. கண்பார்வை கூர்மையடையும். கோடை காலங்களில் இது ரொம்ப பயனளிக்கும்.

படங்கள் : **யோகா**

சீப்பு சீப்பாகப் பழங்களும் கவுளி வெற்றிலையும் சரிகை வேட்டி, உத்திரியமும் மஞ்சள் கிழங்குகளும் குங்குமச் சிமிழுமாக நிறைந்திருந்த பெரிய, புதிய பித்தளைத் தாம்பாளத்தைத் தன் கையில் திணித்து, ராமநாதன் சாஷ்டாங்கமாகக் காலில் விழுந்தபோது, அப்புசாமி பேச்சற்றுப் போனார். தன் வீடே தான் ஏறுவதற்கென்று தயாரிக்கப்பட்டதொரு சாட்சிக் கூண்டு போல் தெரிந்தது அவருக்கு.

"இத்தனை வருஷத்துல நீங்க யோசிக்காம இருந்திருக்க மாட்டீங்கன்னு நம்பி வந்திருக்கேன் மாமா. நாம விரோதம் பாராட்டிண்டிருக்கறதுக்கு இன்னமும் ஏதாவது அர்த்தமிருக்கா?" என்று ராமநாதன் கேட்டான்.

இருப்பதாகத்தான் அவருக்கு அப்போதும் தோன்றியது. அவன் அகிலாவைத் திருமணம் செய்து கொண்டோடியதுகூட அவருக்குப் பெரிதாகத் தெரியவில்லை. ஆனால் அப்படியொரு சாத்தியம் உண்டென்பதற்கான சிறு குறிப்பைக்கூட முன்னதாகத் தமக்குத் தராததை ஒரு திட்ட மிட்ட மோசடியாகவே கருதினார்.

"பொண்ணு கல்யாணம்ங்கறது பெத்தவனுக்கு யக்ஞம் மாதிரி. நீ ராட்சஸனாட்டம் வந்து கொத்திண்டு போவே. நான் உன்னைச் சீராடணும்; இல்லே?" – ஆங்காரமாகக் கேட்டார்.



# அலை உறங்கும் கடல்

"சீராடணும்னு நான் கேட்கலை. அன்னிக்கு உங்களுக்கு என்கிட்டே இருந்த கோவத்துல, கல்யாணம் பண்ணி வையுங்கோன்னு கேட்டிருந்தோம்னா ஒத்துண்டிருந்திருப்பீங்களா?"

"மாட்டேன். நிச்சயமா மாட்டேன்" என்றார் உடனே.

"அதான், சொல்லாம பண்ணிக்க வேண்டியதாயிடுத்து. எத்தனை சாபம் குடுத்திருப்பீங்க? ஒண்ணானா பலிச்சிருந்ததுன்னா இன்னிக்கு இந்த நிலைமைக்கு வந்திருக்க முடியுமா! அது பலிக்கலைங்கறதே, நாங்க தப்பு பண்ணலைங்கறதை, உறுதியாக்கிடற இல்லியா?" என்று சிரித்தான்.

அப்புசாமிக்குச் சிரிப்பு வரவில்லை. ஆனால் கடந்த காலக் கசப்புகளை மீண்டும் மீண்டும் நெஞ்சில் கொண்டு வந்து குவித்து உமிழ்வதில் ஏதும் பயனுண்டா? என்று யோசித்தார். தன்னை உருத்தெரியாமல் அழித்தே இருந்தாலும் இத்தனை வலி தெரிந்திருக்காது. தோற்கடிக்கப்பட்டதான உணர்வு தான் தாங்க முடியாத இம்சையாகப்பட்டது.

அதுவுங்கூட இப்போது



# 18

பா. ராகவன்

அகிலாவைப் பார்க்கும்போது சற்றே குணம் மாறித் துலங்குவது போலிருந்தது. பணத்தின் செழுமையில் அவள் நிறம் பூசி நிற்கக் கண்டவருக்குச் சற்றே நிதானமேற்பட்டது.

''என்ன பண்றீங்க ரெண்டு பேரும்?'' என்று பொதுவாகச் சுவரைப் பார்த்துக்கேட்டார்.

அகிலா சிரித்துக்கொண்டாள். ''இன்னும் மாறலை பாரேன் இது'' என்று உமா விடம் தாழ்ந்த குரலில் சொல்லிவிட்டு, ''நேர பார்த்துதான் கேளேன். ரெண்டு பேரும் உத்தி யோகம் பார்க்கறோம். மொத்தமா மாசம் முப்பதாயிரம் வரது. சொந்தமா ஒரு ஃப்ளாட் இருக்கு, மெட்ராஸ்ல, இன்ஸ்டால்மெண்ட்ல கார் வாங்கியிருக்கோம். உனக்குக் காட்டணும்னே அறுநூத்தி அறுவத்தாறு கிலோமீட்டர் ஓட்டிண்டு வந்திருக்கோம். ஒரே பொண்ணு நாலாங்கிளாஸ் படிக்கறா. இதையெல்லாம் கேட்டுத் தெரிஞ்சுக்கணும்னு உன் தலையெழுத்து'' என்றாள் இடிக்கிற மாதிரி.

அப்புசாமிக்கு மிச்ச எல்லாவற்றையும் விட அவன் வசதி யாக இருக்கிறான் என்பதுதான் மிகுந்த ஆறுதலாயிருந்தது.

தணக்குச் சமமாக தர்ப்பைக் கட்டு ஏந்தி அக்னி தீர்த்தக் கரையில் அமர்ந்து சுக்லாம் பரதம் சொன்னவன் இப்படிக் காரில் வந்து இறங்கக்கூடுமென்று அவர் எண்ணியிருக்கவில்லை. ஏதாவது ஒரு அலுவலகத்தில் குமாஸ்தாவாக இருப்பான் என்றுதான் நம்பியிருந்தார்.

அவ்வப்போது கடிதங்கள் வருவதும் பதில்கள் செல்வதும் அவர் அறியாததல்ல. ஆயினும் விவர மேதும் கேட்டுக் கொள்ள விரும்பாத பாவனையில் அவளைத்தான் உதிர்த்துவிட்டதாக வீட்டில் உணர்த்தியிருந்தார்.

''உங்களுக்குத் தெரியாததில்லை மாமா. நான் ராமகிருஷ்ணமடத்துல தங்கிப் படிச்சவன்தான். பெத்தவா கிடையாது. உறவுக்காரான்னு சொல்லிக்கறதுன்னா, நான் தர்ப்பைக் கட்டு தூக்கிப் பிழைச்ச அக்னி தீர்த்தக் கரையைச் சேர்ந்தவாதான். என்னமோ ஒரு வெறி; நிறையக் காச பார்த்துடணும்னு படிச்சேன். காதலிக்கணும்னெல்லாம் திட்டம் வெச்சிண்டில்லே. அகிலா எனக்கு வாய்ச்சது சுவாமி அருள். வேற ஒண்ணும் சொல்றதுக்கில்லை. ஒரு உசரத்தைத் தொட்டுட்டு உங்களை வந்து பார்க்கணும்னுதான் இத்தனை நாளா காத்திருந்தேன். இனிமே உங்க இஷ்டம்தான்'' என்றான் ராமநாதன்.

உண்மையில் அப்புசாமி மிகவும் இளகியிருந்தார். ஒரு தோள் கிடைத்தால் பற்றிக்கொண்டு அழலாம் போலத்தான் இருந்தது அவருக்கு. இதுநாள் வரை ஊதி ஊதி வளர்த்து வந்த விரோதத் தீ உண்மையிலேயே தன்னிடமிருந்ததா என்கிற சந்தேகம் வந்தது. ஒருவேளை தாம் எதிர்பார்த்தது போல இவன் ஒரு சாதாரண குமாஸ்தாவாக வந்து நின்றிருந்தாலும் இப்படித்தான் இருந்திருப்போமா என்கிற யோசனையும் கூடவே எழுந்தது.

தான் அடைய முயன்றும் இயலாததொரு மாய மோகினியை இவன் கைப்பற்றி விட்டான் என்கிற உணர்வே அவன் மேல் மரியாதை கொள்ளப் போதுமான காரணம் என்று இப்போது தோன்றியது அவருக்கு.

"என்ன சம்பாதிக்கறே?" என்று ரகசியமாகக் கேட்டார், அப்புசாமி.

"சி.ஏ. முடிச்சேன் மாமா. பெரிய கன்சல்டிங் ஏஜென்ஸியில சீனியர் கன்சல்டன்டா இருக்கேன். அகிலாவும் தபால்ல பி.காம் முடிச்சுட்டு, கம்ப்யூட்டர் கோர்ஸ் படிச்சா. இப்ப வேலை பார்க்கறா. கை நிறைய சம்பாதிக்க முடியறது மாமா" என்றான் ராமநாதன்.

"டாக்ஸ் கட்டி மாளலை போதுமா?" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள் அகிலா.

உமாவுக்கு அவளைப் பார்க்கப் பார்க்கப் பெருமிதம் பொங்கித் ததும்பியது. அகிலாவா? அகிலாவா இது! ராமேஸ்வரத்தின் நூற்றுக்கணக்கானப் பெண்களைப் போலவே அவளும் தூசு படிந்த விக்கிரகமாகத்தான் இருந்தாள். எப்படி இப்படி மாறிப்போனாள்?

அம்மா இறந்து மூன்று மாதங்கள் வரை அவளுக்குக் கடிதமேதும் செல்லாதிருக்கிறதா என்று கவனிப்பதிலேயே முழுமூச்சாக ஈடுபட்டிருந்தார் அப்புசாமி. அவர் வீட்டிலில்லாத சமயங்களில் பைத்தியம் மாதிரி, சுப்பிரமணியைக் காவலுக்கு வைத்துவிட்டே வெளியே செல்லுவார்.

நான்காவது மாசியம் வந்தபோதுதான் உமா துணிந்து அவளுக்குக் கடிதமெழுதினாள். அதிர்ந்துபோய் ஓடி வருவாள் என்றுதான் எதிர்பார்த்திருந்தாள்.

ஆனால் நிதானமாகப் பத்து நாட்கள் கழித்துத்தான் அகிலாவிடமிருந்து பதில் கடிதமே வந்தது. 'அம்மா அங்கில்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். அவள் எனக்கல்லவா மகளாக வந்து பிறந்திருக்கிறாள்?' என்று எழுதியிருந்தாள்.

விரக்தியில் அவளுக்குப் பிரமை பிடித்துவிடுமோ என்றெல்லாம் உமா அஞ்சியிருக்கிறாள். ஆனால் தன் நிலையின் உறுதிப்பாட்டை அகிலா தன் மௌனம் மூலமாகவே நிரூபித்ததை அறிந்தபோது அவளுக்குப் பிரமிப்பு ஏற்பட்டது. 'அகிலா, உன்னையொரு சிநேகிதியாக மீண்டும் அடையும் நாளுக்காகக் காத்திருக்கிறேன் என்றுதான் ஒவ்வொரு கடிதத்தையும் முடிப்பாள்.

அந்த தினம் இன்றுதான் என்று சொற்களில்லாமல் தன் புன்னகையின் மூலம் சொல்லிக் கொண்டிருந்தாள் அகிலா.

நீண்ட பல தினங்களுக்குப் பிறகு நீலுப் பாட்டியின் முகம் ஒரு குழந்தையினுடையது போலக் குதூகலமடைந்திருந்தது.

அத்தனைபேரும் கூடத்தின் கிழக்குச் சுவர் ஓரம் வரிசையில் அமர்ந்திருக்க, விறுவிறுவெனத் தானொருத்தியாகவே சமைத்து முடித்து எடுத்து வந்து பரிமாறிக் கொண்டிருந்தாள் அவள்.

தன் பிரதிமைகளைத் தானே உடைத்துக்கொண்டு ஊர்க் கதைகள் பேசத் தொடங்கிவிட்டார் அப்புசாமி.

"ஊருல இப்ப என்ன பணம் கொழிக்கறதுங்கறே ராமநாதா? சொன்னா ஆச்சரியப்படுவே. நீயெல்லாம் இருந்தப்போ சங்கல்பத்துக்கு அஞ்சு ரூபா கொடுக்க அழுவான்கள். இப்ப ரேட் தெரியுமா உனக்கு? மினிமம் அம்பது ரூவா. சோப்பு விலை ஏத்திட்டான். சீப்பு விலை ஏத்திட்டான். அரிசி, பருப்பு, கரெண்டு, தண்ணி எதுதான் என்ன விலைன்னு இல்லாம இல்லே ஆயிடுத்து? மண்டபம் கேம்ப்பு வாசல்லே பிரெட் பொட்டலம் மாதிரி ஒரு பொட்டலம் கொண்டு வந்து விக்கறான். பார்த்துக்கோ, பிராமணனுக்கு தானம் பண்ணவாம். என்னதுடான்னா, திவசம் பண்ண முடியாதவாளுக்கு தானம் பண்ணவாவது ஏற்பாடு பண்றோங்கறான். எதுக்குடான்னா, அங்க சண்டைல சொந்த மனுஷாளைச் சாக விட்டுட்டு வராளோல்லியோ? அதுக்குக் காரியமொண்ணும் பண்ண முடியறதில்லை கேம்ப்புல. பார்த்தான், எவனோ. இதை வாங்கி யாருக்கானா தானம் பண்ணு. காரியம் பண்ண பலன் கிடைச்சுடும்னு சொல்லி, வேஷ்டி, உத்திரியத்துலேருந்து, வெல்லம், வாழைக்காய் வரைக்கும் 'பேக்' பண்ணி ஆயிரம் ரூபாய்க்கு விக்கறான்!"

"நிஜமாவா?" என்றான் ராமநாதன்.

"பின்னே? பறந்து பறந்தில்ல சம்பாதிக்க வேண்டியிருக்கு? ஆனா பைசா நிக்க மாட்டேங்கறது பார்த்துக்கோ. ரோடு போடறேங்

**"அங்கே என்னடா கலாட்டா?"**

**"பாருங்க சார் இவனை... நான் சும்மா இருக்கும்போது என்னை போடா அசாருதீன்... மோங்கியா... ஜடேஜாங்கறான்!"**

**— புளியரை கணேசன்**

கறான். காலேஜு கட்டறேங்கறான். சேது சமுத்திர திட்டம், தோ வந்துடுத்துங்கறான்... ஒண்ணானா ஆச்சான்னா, ம்ஹூம்! எம்.எல்.ஏ.வைக் கேட்டா காசில்லைங் கறான். எம்.பியைக் கேட்டாலும் காசில் லைங்கறான். என்னதான் பண்றானோ இருக்கற பணத்தையெல்லாம்.

"எல்லாம் கேம்ப்புக்குத்தான் போயிண் டிருக்கு மாமா'' என்று ராமநாதன் சொன்னான்.

"நான் ஊரை விட்டுப் போகும்போது தபாலாபீஸ்ல மட்டுந்தான் டெலிபோன் பேச முடியும்ங்கற நிலைமை. இப்ப வீதிக்கு நாலு எஸ்.டி.டி பூத் ஊரெல்லாம் வந்தாச்சே, இங்கென்ன வந்திருக்கு?"

"அதைச் சொல்லு!'' என்று உற்சாக மானார் அப்புசாமி.

"குண்டு போட்டு அழிச்ச ஊரைத் திருப்



பிக் கட்டிட்டான் ஜப்பான்காரன்னு பாடப் புஸ்தகத்துல படிச்சா போதுமான்னு யார் கேக்கறது? புயலடிச்சி தனுஷ்கோடி அழிஞ்சு போய் இருபது வருஷத்துக்கு மேல ஆயி டுத்து. இன்னும் ஒரு புழு பூச்சி வாழறதுக் குக்கூட அந்த பூமில வக்கில்லே! மூணாஞ் சத்திரம் போறப்பவெல்லாம் மனசு அடிச் சுக்கும். எப்படி இருந்த ஊர் அது! உடைஞ்சு போன ரயில்வே ஸ்டேஷன் சுவரைக் காட்டி, இதான் தனுஷ்கோடின்னு டூரிஸ் டுகள்கிட்ட காசு வாங்கறான் செய்டு..."

"இலையைப் பார்த்துச் சாப்பிடுடா அப்புசாமி. அவனுக்கென்ன இதெல்லாந் தெரியாதா?" என்று நீலுப்பாட்டி சொன் னாள்.

"தெரிஞ்சதுதான் பாட்டி. ஆனா வருஷமானாலும் நிலைமை மாறலை பாருங்கோ" என்றான் ராமநாதன்.

"நாஞ் சொல்றேன் கேளு. இன்னும் சரியா இருபது வருஷம். எத்தனை வருஷம்? இருபது வருஷம்! இன்னொரு புயல் அடிக் கப் போறது ராமேஸ்வரத்துலே. நித்திரைல இருந்த உப பாண்டவாளைக் கொன்ன பாவம் தீர அஸ்வத்தாமன் வந்து ஸ்நானம் பண்ணின சேதுக்கரை அப்ப இல்லாம ஆயிடும். புரியறதா நாஞ் சொல்றது? முன்ன அடிச்ச புயல்ல ஊர்தான் அழிஞ்சது. அடுத்தப் புயல்ல பூமியே இல்லாம புதைஞ் சுடும்ங்கறேன். ராமேஸ்வரம்னு ஒரு தீவை 'மேப்பு'லேருந்தே எடுத்துடுவா பாரு. பாவ மான பாவமா பண்ணிண்டிருக்கா மனுஷா? புண்ணிய பூமிடா இது! கூறு போட்டு காசுக்கு வித்துண்டிருக்கா. புத்ர காமேஷ்டி யாகம் பண்றேன்னு பத்தாயிரம், பதினைஞ் சாயிரம் பிடுங்கிண்டு வெறும் கணபதி ஹோமம் பண்றான், பிராமணன். மீன் பிடிக்கப் போற கரையன் என்னடான்னா, கடலுக்குக் கும்பிச்சுவர் இல்லேன்னு கள்ளக்கடத்தலுக்கு 'ஹெல்ப்' பண் றான். தாங்க மாட்டா சமுத்ரகுமாரி, ஆமா!"

அப்புசாமி விழுந்து விழுந்து சிரித்தார்.

"சாபம் குடுக்க ஆரம்பிச்சுட்டியா?'' என்று உமா கேட்டாள்.

"பாட்டி சொல்றது, பொதுவான சீரழிவு. அது உலகம் முழுக்க உள்ளதுதான். ஆனா, நாம பேசிண்டிருந்தது, அடிப்படை வசதி கூட இன்னும் வராதது பத்தி" என்றான் ராமநாதன்.

"கவர்மெண்டு என்னடா பண்ணும்? வருஷத்துல பாதி நாள் ரெஃப்யூஜீஸ் வந் துண்டேதான் இருக்கா. பட்ஜெட்ல இதுக் கெல்லாமுமா நிதி ஒதுக்க முடியும்? இந்த ஊருக்குன்னு ஒதுக்கற நிதியெல்லாம் கேம்ப் புக்குப் போறது; அவ்ளோதான்" என்றார் அப்புசாமி.

இதையெல்லாம்கூட அப்பா யோசிக் கிறாரா என்று ஆச்சர்யமாயிருந்தது உமா வுக்கு. பொதுவாக ஊர் குறித்து அவர் பேசத் தொடங்கியதேகூட அவளுக்கு வியப் புத்தான். தன் வருமானம் என்பது தவிர வேறெது பற்றியும் அவர் சிந்தித்தோ பேசியோ அவள் கண்டதில்லை, இது காறும்.

இதே ராமநாதன், முன்பும் அடிக்கடி வீட்டுக்கு வந்துபோனவன்தான். பல நாட்கள் மீதமாகும் பழைய சாதத்தில் தயிர் விட்டுத் தந்தால், வாசல் திண்ணையிலேயே அமர்ந்து சாப்பிட்டு விட்டு "அமிர்தமா இருக்கு பாட்டி" என்று விட்டுப் போனவன் தான்.

என்ன மாறிவிட்டது புதிதாக என்று உமா யோசித்தாள். தன் பரவசத்தை வெளிக்

**கணேஷ்:** மழை வாசனைக்கு முந்தி எனக்கு ஞாபகம் வாது பட்டாக வாசனைதான் - அதான் தீபாவளி. எப்பவுமே நசநசன்னு மழையோட கைகோத்துக்கிட்டு வந்து என்னைக் காப்பாத்தும். மழையைக் கண்டா வீதியில் போம் ஆட்டம் போடற ஜூட் வந்துடும். பார்க்கறவங்க எதோ தீபாவளி 'ஜூட்'ன்னு பேசாம போய்டுவாங்க. இந்த வருஷம் அந்த வாய்ப்பிலே மண் விழுந்துடுச்க! அடுத்த தீபாவளிக்காவது வருணன் வருகை தா வேண்டும்.



[illegible] விரும்பாமலும் அதேசமயம், தருணத்தைத் தவற விடாமலுந்தான் அப்பா இப்படியெல்லாம் பேசிச் சீராடுகிறார் என்று நினைத்தாள்.

**அ**வர்களிருவரும் இன்னும் சாப்பிட்டு முடிக்காதிருக்க, அகிலாவும் உமாவும் மட்டும் விரைவாக முடித்துக்கொண்டு எழுந்து கொல்லைக்குச் சென்றார்கள்.

கிணற்றில் நீர் இறைத்துக் கையலம்பும் போது உமா கேட்டாள்: "குழந்தையை ஏண்டி விட்டுட்டு வந்தே?"

இதை அப்பா கேட்கட்டும்னு எதிர்பார்த்துண்டிருக்கேன். ஆசையிருந்தா நீ வந்து பாருன்னு சொல்லலாம்னுதான் கூட்டிண்டு வரலை" என்றாள்.

"தனியாவா விட்டிருக்கே?"

''வீட்டோட ஒரு மாமி இருந்து பார்த்துக்கறா. ஒரே நாள்ல திரும்பிடறதாத்தான் ப்ளான். இதும் மூசுடுத்தனம் மாறியிருந்தா திரும்பி வந்து பத்து நாள் இருக்கலாம்னு பேசிண்டுதான் கிளம்பினோம்.''

உமா அவளைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"எப்படி மாறிட்டேடி அகிலா!" என்று பார்த்துப் பார்த்து வியந்தாள்.

''நீ கூடத்தான் அடையாளமே தெரியாம வளர்ந்துட்டே. மூஞ்சில புருபுருன்னு ஒரு கவர்ச்சி. என் ரத்தம்தானே உனக்கும்? சொல்லு. யாரையானா லவ் பண்றியா?''- ரகசியமாகக் கேட்டாள்.

குப்ரென்று ஒரு கனை பொத்துக் கொண்டது போலாகிவிட்டது உமாவுக்கு. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, ''இன்னிக்கேவா கிளம்பிடுவே?'' என்றாள் ஆதங்கமுடன்.

''ராத்திரிதான். பத்து மணிக்குக் கிளம்பலாம்னு சொல்லியிருக்கார். அப்பத்தான் கார்த்தால பத்துக்கானா போய்ச் சேர முடியும். இனிமே என்ன? நினைச்சுண்டா கிளம்பிட வேண்டியதுதான். நீ வாயேன் என் கூட? வந்து நாலு நாள் இரேன்?'' என்று அகிலா கேட்டாள்.

உமாவுக்கு ஆசையாகத்தானிருந்தது. அவள் சென்னை பார்த்ததில்லை. தீவைத் தாண்டிய நிலப்பரப்பு எதனோடும் அறிமுகம்கூட இல்லை. தெற்கு வீதி விட்டால் கோயில். கோயில் விட்டால் மூணாம் சத்திரம். தங்கச்சிமடம், வேர்க்கோடு, அருள்தாஸ். ஒரு குங்குமச் சிமிழளவு உலகில் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோமென்ற உணர்வு அடிக்கடி அவளுக்கு எழாமலில்லை.

போய்த்தான் வரலாமே என்று தோன்றியது. ஆனால் அப்பா சம்மதிக்க வேண்டும். விபரீத ஆருடங்களேதும் பாட்டியிடமிருந்து வராமலிருக்க வேண்டும். தவிர, அருள்தாஸுக்குத் தெரியப்படுத்த வேண்டும். நேரில் பார்த்துச் சொல்ல முடியுமானால் மிகுந்த மகிழ்ச்சி உண்டாகும்.

யோனையுடன் அவள் உள்ளே நுழைந்த போது, வெளி வாசலில் அற்புதமேரி வந்து நிற்பதைக் கண்டாள்.

(தொடரும்)



# "ஜெயமோகன் புலம்பித் தீர்க்கிறார்!"

## வல்லிக்கண்ணன் - சுரதா சந்திக்கிறார்கள்!

தமிழ்க் கவிதை வரலாற்றில் இடம் பிடித்துக் கொண்ட வல்லிக்கண்ணன், சுரதா இருவருக்கும் இப்போது எண்பது வயது. முத்து விழா காணும், இவ்விருவரும் நமக்காக சந்தித்துக் கொண்டபோது தெரித்து விழுந்த சிந்தனைச் சிதறல்கள் இங்கே.

**சுரதா :** உங்கள் கவிதை உலகப் பிரவேசம் எப்படி நிகழ்ந்தது?

**வல்லிக் கண்ணன் :** திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ராஜவல்லிபுரம் தான் எனது சொந்த ஊர். அங்கு பத்தாம் வகுப்பு தேறிய பிறகு வாசிக்கும் ஆர்வம் ஏற்பட்டது. 1936-ல் பாரதிதாசனுடைய முதல் கவிதைத் தொகுப்பு வந்திருந்தது. அதற்கு முன்பு பாரதியையும் வாசித்திருந்தேன். இதற்கிடையில் புதிய மொழி, நடை, புதிய சிந்தனைகளோடு எழுதப்பட்ட தமிழ்ச் சிறுகதைகள் 'மணிக்கொடி' இதழில் தொடர்ந்து வெளிவந்தன. இன்னொரு பக்கம் கல்கியின் ஜனரஞ்சக எழுத்து வெகுஜன வாசகர்களை ஈர்த்தது. இத்தகையச் சூழலில்தான் நான் கவிதை எழுதத் தொடங்கினேன்.

**சுரதா :** ஒவ்வொரு படைப்பாளிக்கும், அவனுக்கு முந்தைய படைப்பாளி ஏற்படுத்தும் தாக்கம் முக்கிய அம்சம். என்னில் பெரும் தாக்கத்தை உண்டுபண்ணியவர் பாவேந்தர் பாரதிதாசன். கனகசுப்புரத்தினதாசன் என்று புனை பெயர் வைத்துக் கொள்ளும் அளவுக்கு அவர் கவிதைகள் மீது காதல் வளர்ந்தது.

**வ. கண்ணன் :** பிறகு நாற்பதுகளில் பெரும் பரபரப்பை ஏற்படுத்திய 'புரட்சிக்கவி' நாடகத்தில் அமைச்சராக நீங்கள்தானே நடித்தீர்கள். கலைவாணர் தலைமையில் திருநெல்வேலியில் நடந்தபோது அந்த நாடகத்தை நான் பார்த்திருக்கிறேன்.

**சுரதா :** ஆமாம்! அதேபோல் உங்களை எனக்கு அறிமுகப்படுத்தியது, நீங்கள் முதலில் எழுதிய பாரதிதாசன் 'உவமை நயம்' என்ற நூல்தான். அதைப் படித்துவிட்டு உங்களைச் சந்திக்க வந்தேன். அதன்பிறகு தீபம், சரஸ்வதி போன்ற பத்திரிகைகளில் தொடர்ந்து கவிதைகளும், புத்தக விமர்சனமும் எழுதி வந்தீர்கள். ஒரு கட்டத்தில் விமர்சனத் துறையில் முழு

வீச்சோடு இறங்கிவிட்டார்களே ஏன்?

**வ. கண்ணன்** : படைப்புகள் நிறைய வந்தால் மட்டும் போதாது. அவற்றுக்குத் தரமான, நேர்மையான விமர்சனம் இருந்தால்தான் அது வாசகர்களைச் சென்று சேரும். வேறு எல்லா தேசங்களிலும் விமர்சனம் ஒரு தனித்துறையாகவே வளர்ந்து வந்திருக்கிறது. ஆனால் தமிழில் ஆட்களைத் தேடிப் பிடிக்க வேண்டியிருந்தது. இன்னொன்று, கா.நா. சுப்ரமண்யம் போன்றவர்கள், விமர்சிக்கிறேன் பேர்வழி என்று, சிறுகதை, கவிதையில் இவர்கள்தான் என ஒரு பட்டியலை வெளியிடுவார்கள்.


● சுரதா ● வ. கண்ணன்

அடுத்த ஆறாவது மாதம் இன்னொரு பட்டியல் வெளியிடுவார்கள். இது போன்று வாசகனுக்கு வழிகாட்டாத விமர்சனப் போக்கை உடைக்கவே நான் அதில் கவனம் செலுத்த விரும்பினேன்.

**சுரதா** : அதன்பிறகு 'புதுக் கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற ஆய்வு நூலுக்கு சாகித்ய அகாடமி விருது பெற்றீர்கள் அல்லவா?

**வ. கண்ணன்** : எனக்குக் கவிதை உலகில் முகவரி தேடித்தந்த நூலும் அதுதான். ஆனால் சினிமாதான் உங்களைப் பிரபலப்படுத்தியது இல்லையா?

**சுரதா** : உண்மைதான். கவிதைக்காக 'காவியம்' என்ற வார இதழை நடத்தியபோதும், சினிமா பாடல்கள்தான் என்னைப் பெரிய அளவில் பிரபலப்படுத்தியது.

**வ.கண்ணன்** : இன்றைய வெகுஜன இலக்கிய வரிசையில் வருகிற சினிமாப் பாடல்களின் தரம் திருப்திகரமாக இல்லையே?

**சுரதா** : காரணம் இசைதான். பாடல் வரிகளை விழுங்கி, ஏப்பம் விடும்படி தாளம் அமைக்கிறார்கள். இசையின் வேகத்திற்கு முன்னால் எத்தனை கவித்துவமாக எழுதினாலும் ஒரு சில பாடல்களே புரிகின்றன. கவிஞர்கள் கையாளும் மொழியும் செத்துப் போய்விட்டது. ஆங்கிலச் சொற்களின் கலப்பும், பழைய சிந்தனைகளின் பிரதிகளையுமே திரும்ப எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

**வ. கண்ணன்** : இன்று மொழிக் கொலை என்பது சினிமா பாடல்களில் மட்டுமல்ல. பத்திரிகை, தொலைக்காட்சி இரண்டிலுமே சர்வ சாதாரணம். இலக்கிய வளர்ச்சிக்குத் தொடக்கத்தில் பங்காற்றிய பத்திரிகைகளே இப்போது இலக்கிய வீழ்ச்சிக்கும் பெரிய காரணமாக இருக்கின்றன.

**சுரதா** : எப்படிச் சொல்கிறீர்கள்?

**வ. கண்ணன்** : ஒரு தேசத்தின் கலாசார வேர்களை அறுத்துக் கொள்ளாமல் நவீன இலக்கியம் தோன்ற வேண்டும். அதற்கு அந்த நாட்டின் வெகுஜன இலக்கியம், கொஞ்சம் மேலும் சமகால சமூக, கலாசார நிகழ்வுகளைப் பிரதிபலிக்க வேண்டும். ஆனால் வாசகர்களைக் குஷிப்படுத்தி, பத்திரிகை விற்பனையைக் கூட்ட மூன்றாந்தர இலக்கியமும், மனித ஆர்வத்தைத் தூண்டும் மிகைப்படுத்தப்பட்ட செய்திகளும், கிசுகிசு துணுக்குகள் போன்றவையும்தான் வெளிவருகின்றன. கல்கி, விகடன் போன்ற ஒரு சில வெகுஜன இதழ்களை விதிவிலக்காக கூறலாம். ஆனால் வங்காளம், கேரளம், ஆந்திரம் போன்ற மாநிலங்களில் வெகுஜன ஊடகங்கள்கூட, இலக்கியத்தின் பால் பொறுப்புள்ளவை என்று சொல்லுவேன்.

**சுரதா** : மிகவும் சரி. முப்பது வருடத்திற்கு முன்பு மேற்கத்திய நாடுகளில் பிரபலமான 'இசங்கள்' இங்கே இப்போதுதான் வந்திருக்கின்றன. ஆனால் வங்காளத்திலும், மலையாளத்திலும் அந்த இசங்களை வைத்து இருபது வருடத்திற்கு முன்பே நாவல், சிறுகதை, கவிதை படைத்து விட்டார்கள். அதற்குக் காரணம் வெகுஜன பத்திரிகைகளின் ஒத்துழைப்பு.

**வ. கண்ணன்** : இசங்கள் அறிமுகமானபோது அவை தொடர்பான எளிய விளக்க கட்டுரைகளைப் பத்திரிகைகள் முதல் பக்கத்திலேயே வெளியிட்டு, அங்கே வாசகர்களைத் தயார் செய்கிறார்கள். சோதனை முயற்சிகளை எப்படி அணுக வேண்டும் என்று சொல்லித் தருகிறார்கள். எனவே நவீன இலக்கியம், வெகுஜன இலக்கியம் எல்லாம் அங்கே ஒன்றாகி விடுகிறது. இங்கே குஷ்பூவின் குழந்தை பற்றியும், டயானா கல்லறையின் அழகு பற்றியும் அதிக அக்கறை காட்டுகிறார்கள். வாசகர்கள் இல்லாதபோது இலக்கியம் எப்படி வளரும்.

**சுரதா** : தமிழ் இலக்கியம் தேக்கமடைந்து விட்டதற்கு இதுபோன்ற ஊடகங்கள் மட்டுமே காரணமா?

**வ. கண்ணன்** : இன்னும் மூன்று முக்கிய காரணங்களைச் சொல்லியாக வேண்டும். நவீன இலக்கியம் என்ற பெயரால், நமது கலாசார பின்புலத்தோடு ஒட்டாத இசங்களை, உடும்புப்பிடியாக பிடித்துக் கொண்டு, தங்கள் மேதமையை வெளிப்படுத்த சிலர் குழு மனப்பான்மையோடு எழுதுகிறார்கள். இவர்களுக்கு வாசகர்களைப் பற்றியோ, வாசகர் தயாரிப்பு பற்றியோ கவலை கிடையாது. இவர்களது

ஆழ்மன இலக்கியமும், தனிமனித வாதமும் எதையும் சாதிக்கப் போவதில்லை.

அடுத்து மார்க்சியம் போன்ற அரசியல் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட, முற்போக்கு இலக்கியமும், அதன் ஒரு கூறாக வெளிபட்டிருக்கும் தலித் இலக்கியமும், பழைய பிரச்சனைகளையே உள்ளடக்கமாக கொள்கின்றன. உலகமயமாதலின் விளைவுகள் பற்றி இவர்கள் கவனிக்க வேண்டும்.

இறுதியாக சோம்பேறித்தனம். புதிதாக எழுத வருவோர், தனக்கு முன் பேசப்பட்ட படைப்பாளிகளின் எழுத்துக்களைத் தொட்டுக் கூடப் பார்ப்பதில்லை.

**சுரதா :** சக எழுத்தாளர்களை இங்கே மதிப்பதும் குறைவாகத்தான் இருக்கிறது இல்லையா?

**வ. கண்ணன் :** அதுமட்டுமல்ல. மற்றவர்களின் நல்ல படைப்புகளை வாசகர்களுக்கு எடுத்துச் சொல்வதிலும் ஏதோ பிரச்னை குறுக்கிடுகிறது என்று நினைக்கிறார்கள். பொறாமைப்படுகிறார்கள். வாசகர் உலகிலிருந்து தனித்தியங்கும் ஜெயமோகன் போன்ற ஆட்கள் அமைதியாக எழுதுவதை விட்டுவிட்டு, தமிழில் இதுவரை, நாவலே இல்லை. கவிதையே இல்லை என்று புலம்பித் தீர்க்கிறார்கள். முழு உற்சாகத்தோடு எழுத வரும் புதியவர்களை நம்பிக்கை இழக்க வைக்கிறார்கள்.

**சுரதா :** உங்கள் கோபத்தைத் தணிக்க ஒரு கேள்வி. நீங்கள் ஏன் திருமணமே செய்து கொள்ளவில்லை. காதல் தோல்வியா?

**வ. கண்ணன்** *(சிரிக்கிறார்)* : எழுதிக் கொண்டே இருக்க வேண்டும், இலக்கிய பயணமாக ஊர் தோறும் சுற்ற வேண்டும் என்று முடிவு செய்தேன். அதற்குத் திருமணமும், குடும்பமும் ஒரு பெரிய தடையாக வரும். அத்துடன் எழுதுவதில் வரும் பணத்தை வைத்துக் குடும்பம் நடத்த முடியாது என்ற தெளிவு ஐம்பதுகளிலேயே எனக்கு இருந்தது.

**சுரதா :** எழுத்துலகில் மனநிறைவு கிடைத்து விட்டதா?

**வ. கண்ணன் :** நிறைய... விரக்தியோ, ஏமாற்றமோ இல்லை. பணம் ஈட்டவில்லையே என்ற கழிவிரக்கமும் எனக்கு இல்லை.

**சுரதா :** எனது நிலையும் அதுதான். கலைமாமணி, கேரள அரசின் குமரன் ஆசான் விருது உள்ளிட்ட பல மரியாதைகளைத் தமிழ் உலகம் எனக்கு அளித்துள்ளது. மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் தமிழ்ச் சகோதரர்கள் இன்னும் எனது பெயரால் வாசகர்கள் பேரவை நடத்துவது எனக்கு மகிழ்ச்சி தருகிறது.

- தொகுப்பு : **ஆர்.சி.ஜெயந்தன்**

படங்கள் : **ராஜுன்**



# "அன்புதான் ஒரே சொத்து!

• ஊர்வலத்தில் மாணவிகள்...



**சாயி பாபாவின் எழுபத்தைந்தாவது ஜெயந்தி நவம்பர் இருபத்து மூன்றாம் தேதி புட்டபர்த்தியில் கோலாகலமாக நடந்தது. பத்து லட்சம் பக்தர்கள் திரண்டிருந்த அந்தப் பக்தி பரவச விழாவில் சில துளிகள் :**

● ஜெயந்தியன்று காலை ஏழரை மணிக்கு பாபா, ஹில் வியூ ஸ்டேடியத்தில் அருளுரை வழங்குவதற்கு ஏற்பாடாகியிருந்தது. காலை நாலு மணிக்கே ஸ்டேடியம் ஹவுஸ் ஃபுல். புட்டபர்த்தி முழுக்க பக்தர்களின் தலைகள், தலைகள், தலைகள்தான். பத்து லட்சம் பேர் வந்திருப்பார்கள் என்று கணக்குச் சொன்னார்கள்.

● முந்தைய நாள் ஆந்திர முதல்வர் நாயுடு, முன்னாள் சபாநாயகர் சிவராஜ் பாட்டீல் கலந்து கொள்ள, பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா நடந்தது. விழாவில் பாபா உரையின் ஹைலைட் : "இந்த நாடு, பல துறைகளிலும் முன்னேறி, சாதனைகள் புரிய வேண்டுமெனில் கல்வி அறிவு தருவதில் அரசு கவனம் செலுத்த வேண்டும். வெறும் ஏட்டுக் கல்வி இல்லை; தரமான வாழ்க்கைக் கல்வி. அதுவும், ஏழை, பணக்காரன் என்கிற வித்தியாசம் பார்க்காமல், இலவசக் கல்வி. அது சாத்தியமா? என்றால், சாத்தியம். புட்டபர்த்தியில் அதுதான் நடக்கிறது."

● பிறந்த நாளன்று, மாணவர்கள் தயாரித்து வைத்திருந்த கேக்கை வெட்டி, அவர்களை ஆசீர்வதித்த பின்னரே, ஸ்டேடியம் வந்தார் பாபா.

● முதலில் அலங்கரிக்கப்பட்ட கம்பீர யானை. தொடர்ந்து, மாணவ, மாணவிகளின் வாத்திய அணிவகுப்பு அதனையடுத்து, வெள்ளையுடை அணிந்து, ரதத்தில் பாபா வந்தார்.

● ஸ்டேடியத்தில் நுழைந்து, மேடையை




அடையும் வரை ரதத்திலிருந்தபடி, இரு கரங்களையும் தூக்கி ஆசிர்வதித்தபடியே பாபா வந்த போது, மொத்த ஸ்டேடியமும் உணர்ச்சி வசப்பட்டு, மெய்சிலிர்த்துப் போனது.

● உலக நாடுகள் – சின்னஞ்சிறு, அதிகம் தெரிந்திராத நாடுகளும் இதில் அடக்கம் – பலவற்றிலிருந்தும், ஒரு ஆண், ஒரு பெண் இடம்பெறும் அணிவகுப்பு நடந்தது. ஆண் தங்கள் நாட்டுக் கொடியை ஏந்தி வர, பெண், அந்த நாட்டின் பெயர்ப் பலகையைத் தாங்கி வந்தார்.

● அடுத்து இந்திய மாநிலங்கள் வாரியாக, எட்டு பேர் குழுக்கள் அணி வகுத்து வந்தன. அவர்கள் தங்கள் மாநில பாரம்பரிய உடைகளணிந்திருந்தனர்.

● சீனாவிலிருந்து வந்திருந்த சாயி பக்தர்கள் சார்பில், சீனாவின் பாரம்பரிய சிங்க டான்ஸ் நடந்தது. குட்டி முதல் பெரிது வரை பதினைந்து சிங்கங்கள் போல உடையணிந்து, பதினைந்து நிமிடம் நடைபெற்ற நடனம்; புதுமையாக இருந்தது.

● மாலையில் பாபா தனது வழக்கமான காவியுடையில் தோன்றினார்.

● கூட்டத்தில் கண்ணில் பட்ட சில பிரபலங்களில் சுனில் கவாஸ்கர், பி. சுசீலா, அஞ்சலி தேவி, சௌகார் ஜானகி ஆகியோரும் அடக்கம்.

● பிரசாந்தி நிலையத்தில் சுமார் நூறு டி.வி. இரண்டு பெரிய வீடியோ ஸ்கிரீன்கள், ஸ்டேடியத்தில் இரண்டு ஸ்கிரீன்கள் என ஏற்பாடு செய்து, அனைத்து நிகழ்ச்சிகளும் லட்சக்கணக்கான பக்தர்கள் நேரடியாய்க் காண ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்த ஏற்பாடுகளைச் செய்தவர் சென்னையைச் சேர்ந்த சரவணா வீடியோஸ் சரவணன். இதற்கான செலவை ஒரு டெல்லி பக்தர் ஏற்றுக் கொண்டாராம்.

● பாபாவின் ஜெயந்தி ஆசிச் செய்தி : பாபாவின் ஒரே சொத்து அன்புதான். அதைத்தான் நான் வழங்கிக் கொண்டிருக்கிறேன். நான், உங்களிடமிருந்து எதிர்பார்ப்பதும் அதே அன்பைத்தான். ஆரோக்கியமும், சந்தோஷமும் உங்கள் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. உங்கள் சந்தோஷம்தான் எனக்கும் சந்தோஷத்தைத் தரும்.

செய்தி, படங்கள் : **யோகா**

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

• முரளி மனோகர் ஜோஷியுடன்...



• சுனில் கவாஸ்கர்



# ‘வயித்தெரிச்சலைக் கிளப்பாதீங்க!’

**ரூபாய் இருநூற்று முப்பத்தெட்டாக இருந்த சமையல் எரிவாயு விலையில் பத்து ரூபாய் விலைக் குறைப்பு செய்திருப்பதால் மத்திய அரசுக்கு நூற்று முப்பது கோடி ரூபாய் நஷ்டம்... இல்லத்தரசிகளுக்கு லாபமா? கேட்டோம்:**

**யமுனாவதி சுரேஷ்:**

**வ**யித்தெரிச்சலைக் கிளப்பி விடுறதுக் குன்னே இப்படி ஒரு கேள்வியைத் தேடி வந்து கேட்கறீங்கன்னு நினைக்கிறேன். வீட்டுக்காரர் இதுதான் இந்த மாச பட்ஜெட், பார்த்து ஒப்பேத்துன்னு கூலாகச் சொல்லிட்டுப் போயிடறார். நாங்களும், பால்கார்டு இவ்வளவு, புரொவிஷன் இவ்வளவு, வாடகை இவ்வளவுன்னு நுணுக்கி நுணுக்கிப் பட்ஜெட் போட்டாலும் துண்டு விழாத பட்ஜெட் போடவே முடியறதில்லே. ஏற்கெனவே சிலிண்டர் டெலிவரி செய்யற ஆளுக்கு அஞ்சு, பத்துன்னு அழவேண்டியிருக்கு. இதுல பத்து ரூபாயைக் குறைச்சதுல எங்களுக்குத் துளிகூட சந்தோஷம் இல்லே. நான் போன தேர்தல்லே வாஜ்பாய்க்குத் தான் வோட்டுப் போட்டேன். அக்கம் பக்கத்துல இருக்கிறவங்க எல்லாரும் வாஜ்பாய் நல்லது செய்வாரு போடுங்கன்னு சொன்னாங்க. ஆனா இந்த மாதிரி சொதப்பு வாருன்னு நினைக்கலே. பசியில அழுற பிள்ளைக்கு, கிலுகிலுப்பைய ஆட்டிக் காட்டுறமாதிரிதான் இந்த பத்து ரூபா. இதுக்குமேல நான் என்னத்தைச் சொல்றது?

**கலாவதி ராஜேந்திரன்:**

**நா**ன் முதல் முதலா சிலிண்டர் வாங்கினப்போ நூற்றி நாற்பத்தைந்து ரூபாயாக இருந்துச்சி. அப்புறம் இருநூற்றி இரண்டு. அங்கேயிருந்து பெரிய ஜம்ப் பண்ணி இருநூற்றி முப்பதெட்டு! இப்போ இதுலே பத்து ரூபாய் குறைச்சிருக்கறது நல்ல காமெடியா இருக்கு. பத்து ரூபாய் குறைச்சதுனால யாருக்கும் லாபமில்லை. ஆனா அரசாங்கத்துக்கு நூற்றி முப்பது கோடி இழப்புன்னு நினைக்கிறப்போ பகீர்ன்னு இருக்கு. அந்த நூற்றி முப்பது கோடியிலே எத்தனை நல்ல காரியங்கள் செய்யலாம். இந்த மாதிரி கண்துடைப்பு நாடகமாடுறது வோட்டுக்காகவும், கூட்டணிக்காகவும்தான் நல்லா தெரியுது.

**ரமணி பெர்னாட்:**

**சி**லிண்டர் விலை நூற்றி நாற்பத்தைந்து ரூபாயாக இருந்தப்போ-பரவாயில்லையே கட்டுப்படியாகிற விலையிலே இருக்கேன்னு தான் காஸ் அடுப்புக்கு மாறினேன். இப்போ ஏன்டா காஸ் வாங்கினோம்ன்னு தோணுது. அடிக்கடி அரிசி, பருப்பு விலை ஏறுதோ இல்லையோ, பெட்ரோல், காஸ் விலையை இஷ்டத்துக்கு ஏத்திடுறாங்க. இந்தமுறை ஒரேடியா ஏத்திட்டு அதுல பத்து ரூபா மட்டும் குறைச்சிருக்கோம்னு சொல்றாங்க. இது ஏதோ, போனா போகுதுன்னு பண்டிகை நேரத்துல இனாம் கொடுப்போமே அது மாதிரி மகா கேவலமா இருக்கு. இப்போ பத்து ரூபாய் குறைச்சதுலே நூறு கோடிக்கு மேலே நஷ்டம் வரப்போகுதுன்னு சொல்றீங்க... இந்த நஷ்டத்தாலே நாட்டு மக்களுக்கு லாபம் இருக்கிறதா தெரியலை. உருப்படியா ஒண்ணு செய்யலாம். இந்த காஸ் விலைக்குறைப்பை அரசாங்கம் வாபஸ் வாங்கிட்டு, ஏழை மக்கள் பயன்படுத்துற மண்ணெண்ணெய்க்கு இன்னும் இரண்டு ரூபா விலையைக் குறைச்சா அவங்களாவது சந்தோஷப்படுவாங்க.

• யமுனாவதி



• கலாவதி



• ரமணி



சந்திப்பு: **சக்கரத்தாழ்வார்**

படங்கள்: **ராஜன்**

**கல்கி – ரமணி Vs ரமணி இணைந்து வழங்கும் 'தம்பதி தமாஷ்' தீபாவளிப் பரிசுப் போட்டியில் முதல் பரிசு பெறும் அனுபவக் கட்டுரை:**

# தள்ளுபடி! தள்ளுபடி!

ஜூனியர் ஹார்லிக்ஸ் குடித்து வளர்ந்த busy girl மீனாவுக்கு மூன்று வயதானவுடன் உலக ஞானம் ஊட்ட விரும்பினேன். இன்னும் பதினைந்தே வருடத்தில் இந்தியாவின் பில்கேட்ஸ் ஆகப் போகும் மீனாவுக்காக ஒரு கம்ப்யூட்டர் வாங்க வேண்டும் என்று பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டது. (பெரியோர்=அப்பா+மகள்)

ஏற்கெனவே யஷ்வந்த் சின்ஹாவாக துண்டு பட்ஜெட்டால் விழி பிதுங்கிக் கொண்டிருந்த என் மனைவி, பெட்ரோலிய விலை உயர்வால் பொங்கிய மம்தாவானாள். அவளுடைய பட்டுப்புடைவை கோரிக்கை பரிசீலிக்கப்படும் என உறுதியளித்த பின், ஒரு சுபயோக சுப தினத்தில் கம்ப்யூட்டர் வந்திறங்கியது.

''மீனுக்குட்டி, அப்பா உனக்கு ஒண்ணொண்ணா சொல்லித் தருவேன். கவனமா கேக்கணும். என்ன?''–நான்.

"சரிப்பா!" ஆர்வமுடன் தலையசைத்தாள் மீனு.

"இது பேரு மானிட்டர். எங்க சொல்லு பாப்போம்?"

"மான்ட்டர்."

"இல்லை; மானி...ட்டர்."

"சரி, மானி...ட்டர்"–மீனு.

"குட்! இது கீ போர்டு."

"கீ போர்டு."

"வெரிகுட். இதுதான் ஃப்ளாப்பி டிஸ்க்."

"ஹை! இதென்ன நடுவுல ஓட்டை? இது வடையா?"

"நோ, நோ, இது ஃப்ளாப்பி டிஸ்க். சொல்லு..."

"போப்பா, போரடிக்குது."

"இப்ப பார், மீனுக்குட்டிக்குக் கார் ரேஸ் விளையாட்டு."

கண் கொட்டாமல் ரசித்தது மீனு.

ஒரு வாரம் சென்று...

"ஹாய் மீனுக்குட்டி, ஒரு வாரமா கார் ரேஸ், பைக் ரேஸ் எல்லாம் விளையாடறியா?"

"போ டாடி! இது வேஸ்டு! ஒண்ணுமே வரலை."

"என்ன சுகந்தி? மீனுவை விளையாடவே விடலையா நீ?"

"அது என்னமோ! எனக்கு ஒரெழவும் புரியலை. ஃப்ளாப்பி உள்ள நுழையவே மாட்டேங்குது. என்னைய விட்டுடுங்க சாமி." என் பத்தினி சலித்துக் கொண்டாள்.

"சரி விடு. மீனுக் குட்டி, நீ வா பார்க்கலாம். ஏன் ஃப்ளாப்பி உள்ள போக மாட்டேங்குது?"

"அப்பா, நான்தான் ஏற்கெனவே போட்டுட்டேனே?"

"என்ன போட்டே?"

"ஃப்ளாப்பிதான்."

"அப்படியா? எங்க பாப்போம்." டார்ச் அடித்தேன். உள்ளே கறுப்பு நிறத்தில் நடுவில் ஓட்டையுடன், செவ்வக வடிவில், ஒரு வாரமாகக் காணாமல் போயிருந்த பேன் சீப்பு ஒளிந்திருந்தது!

இடுக்கி, ஸ்குரு டிரைவர் உதவியுடன் அதை எடுத்துவிட்டு; டென்ஷனை வெளிக்காட்டாமல் மீனுவிடம் விளக்கினேன்.

"மீனு! இப்படி கண்ட குப்பைகளையெல்லாம் உள்ளே போடக் கூடாது. கம்ப்யூட்டர் வீணாகிவிடும். இனிமேல் நீ எது செஞ்சாலும் அப்பாகிட்ட சொல்லிட்டுதான் செய்யணும். சரியா."

"சரிப்பா. இனிமே போட மாட்டேன். நா வேணா இதையெல்லாம் துணியால க்ளீனா துடைச்சு வைக்கவா?"

மீனுவின் பொறுப்பை எண்ணி நெகிழ்ந்தவாறு ஓய்வெடுக்க உள்ளே சென்றேன்.

"ஐயோ! இங்க வாங்களேன்..." என் சகதர்மிணியின் அபயக் குரல் என்னை



உலுக்கியது. விரைந்தேன்.

பக்கெட் நிறைய தண்ணீரும் வீடு துடைக்கும் துணியுமாக நின்ற மீனுவைப் பார்த்ததும் எனக்கு ஹார்ட் அட்டாக் வந்தது.

"சுகந்தி, மீனுவை வெளில கூட்டிட்டுப் போ."

ஆராய்ந்ததில் கீ போர்டு சுத்தமாக அவுட் ஆப் ஆர்டர்!

"என்ன? போச்சா? அறுபதாயிரம் ரூபாய் போச்சு! பேசாம நங்கநல்லூர்ல பிளாட் வாங்குங்க. இவ கல்யாணத்துக்கு ஆவும்னு அடிச்சிக்கிட்டேன். இப்ப பில்கேட்ஸா வந்து கல்யாணம் பண்ணி வைக்கப் போறாரு."

"சும்மா இரு. ஒண்ணும் ஆகல. குழந்தைய அடிச்சியா? மீனு இங்க வா." கன்னத்தைத் தடவிக் கொண்டே விசும்பினாள் மீனு.

"செல்லக்குட்டி, இத தண்ணி போட்டுக் கழுவக் கூடாதுடா. வெறும் துணி மட்டும் தான் யூஸ் பண்ணனும்."

"அம்மா மட்டும் தண்ணி போட்டுத் தானே வீடு க்ளீன் பண்றா?"– மீனு.

"இதுக்குள்ள குட்டி, குட்டி சிப்ஸ் எல்லாம் இருக்கு. தண்ணி பட்டா அதெல்லாம் வீணாயிடும். இல்லையா?"

"சி.பி.யூவைக் காட்டிப் பொறுமையாக விளக்கினேன். புரியாமல் தலையாட்டி விட்டு விளையாடச் சென்றாள் மீனு.

மாலை. கையில் காப்பியுடன் பேப்பரை மேய்ந்து கொண்டிருந்தேன்.

'டமால்' என்று ஒரு சத்தம்.

டேபிள் மேல் இருந்த சி.பி.யூ. தரையில் சிதறிக் கிடந்தது. அருகில் மலங்க மலங்க விழித்தபடி மீனுக்குட்டி.

"நீ தானேப்பா இதுக்குள்ள சிப்ஸ் இருக்குன்னு சொன்ன? கொஞ்சூண்டு... தொறந்தேன்... தொப்னு..."– குழந்தை பயத்தில் திக்கித் திணறினாள்."

எனக்குத் தலையைச் சுற்றிக் கொண்டு வந்தது. மனைவியின் கனவுகள் கூடவே சுழன்று கரைந்தன!– கம்மல், பட்டுச்சேலை, நங்கநல்லூர் ப்ளாட்...

நீங்களும் கம்ப்யூட்டர் வாங்க விரும்புகிறீர்களா? விரைந்து தொடர்பு கொள்ளுங்கள். நழுவ விடாதீர்கள். பாதி விலை! 50% தள்ளுபடி! தவணை வசதி செய்து தரப்படும்.

ஆர். அருண்குமார்

நியூஸ்வீக் லாஸ்ட் பேஜ்ல அப்பப்ப பிரபல எழுத்தாளர்கள் பேட்டி வரும் பார்த்திருக்கீங்களா...? சமீபத்துல மராட்டி எழுத்தாளர், நாடகாசிரியர் விஜய் டெண்டுல்கருடையது வந்திருந்தது. மராட்டி ஸ்டேஜ்ல ஒரு சிந்தனை புரட்சி நிகழ்த்தியிருக்கறவர் டெண்டுல்கர்- 72 வயசு பத்ம பூஷண். ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் நடக்கக் கூடிய ஒரு சம்பவம் கூட தன்னை எழுதத் தூண்டுதுன்னு சொல்றார். ஆரம்பத்துல வெறுமே 'சுயசரிதை'யாகத்தான் இருந்ததாம் அவருடைய எல்லா எழுத்தும்; போகப் போகத்தான் பார்வை என்லார்ஜ் ஆச்சுன்றார்.

பெண் உரிமை பத்தி ரொம்ப தீவிரமா ஷார்ப்பா எழுதக் கூடியவர். (விஜய்தான்; விஜயா இல்லை அவர் பெயர்!) வீட்ல அம்மாவும் அக்காவும் பட்ட கஷ்டங்களைப் பார்த்துப் பார்த்து சின்ன வயசுல அதிர்ச்சியும் பயமும் எக்ஸ்பீரியன்ஸ் பண்ணிருக்கார். இந்தக் குடும்ப அனுபவத்தை அவர் எத்தனை டிக்னிடியோட விவரிக்கறார் தெரியுமா பேட்டியில? யார் மேலயும் பழி சுமத்தாம எல்லாருமே சோஷியல் ஆர்டரின் கைதிகள் அப்படிங்கிற பார்வையோட பேசறார். ரொம்ப யோசிக்க வைச்சுது.

குமுதத்துல ஆக்ட்ரஸ் லக்ஷ்மியோட டாட்டர் ஐஸ்வர்யா, தான் பட்ட கஷ்டங்களை விவரிச்சதைப் படிச்சப்போ நேர்மாறான எஃ ்பக் - அவங்க பேர்ல அனுதாபம் வர்றதுக்குப் பதில ... பம் வந்தது. யோசிக்கறதுக்குப் பதிலா அரு ... ப்புப்பட வைச்சது. பிகாஸ், பழைய குப்பைங்களை ... வறுமனே கிளறிவிடற சமாசாரம் அது- இன் பேட் டேஸ்ட்!

ரசனைன்றது நம்ம நாட்டுல எப்படியெல்லாமோ வெளிப்படுது. சாதாரணமா ரசிக மகாஜனங்கதான் விசில் அடிச்சு, கைதட்டி சில்வர் ஸ்க்ரீன் ஹீரோக்களை ஆராதிப்பாங்க. இப்போ நிவேதிதா என்ன சொல்றாங்கன்னா, நான் விசில் அடிச்சு கடவுளை ஆராதிக்கறேன்; நீங்க கையைத் தட்டினாப் போதும்ன்றாங்க. இந்த டிசம்பர் மியூசிக் சீசன்ல கபாலி ஃபைன் ஆர்ட்ஸ் சபாவோட

# இசைவிழாவில்



• வை.மு. கோதைநாயகி

• ஐஸ்வர்யா

இனாகரேஷனுக்குப் பிரேயர் நிவேதிதாவோட விசில் வாசிப்பு! (விசில்லயே முழு கச்சேரிகூட பண்ணுவாங்களாம்.)

ஒரு விஷயம் சத்தியமா புரியலை! எப்படியிருந்தாலும் உதட்டைக் குவிச்சு எனர்ஜியை செலவழிக்கப் போறாங்க- ஊதற காத்தை ஒரு புல்லாங்குழலுக்குள்ள ஊதித் தொலைச்சா கேக்கறதுக்கு (பார்க்கறதுக்கும்தான்!) பிளெஸன்டாகவாவது இருக்காதோ?

மத்தபடி சீசன்ல பிளெசன்ட் நியூஸ் – அதாவது சம்பந்தப்பட்ட வித்வான்களுக்கு மட்டும் – அம்பத்தேழரை சபாக்கள் தனித் தனியா நூத்தியெட்டேமுக்கால் வித்வான்களுக்குக் கண்டமேனிக்கு விருது கொடுக்கறாங்கன்றதுதான். கொஞ்சம் நாளான 'ஸபஸ' பிடிக்கறவங்களுக்கும் சபா கதவுகளண்ட டிக்கெட் செக் பண்ற வாலன்டியர்ஸுக்கும்கூட ஏதாவது பட்டம் தரலாம்.

பெண்ணிய ஜுரம் சபா பக்கமும் கொஞ்சம் பரவிடுச்சு. சாந்தி ஆர்ட்ஸ் பௌன்டேஷன் அன்ட் என்டௌமென்ட்ஸ்ன்ற சபால 'மஹிலா மில்லெனியம்' கொண்டாடறாங்க. மைக் வைக்கறவங்களைத் தவிர மத்த எல்லாரும் லேடீஸாத்தான் இருப்பாங்க போலிருக்கு- ஆர்டிஸ்ட், சீஃப்கெஸ்ட், பிரெஸிடன்ட்..... இந்த ஃபெஸ்டிவலை வை.மு. கோதைநாயகிக்குச் சமர்ப்பணம் பண்ணியிருக்காங்கன்றது ஒரு அன்எக்ஸ்பெக்டட் விஷயம். பை தி வே



# விசிலாராதனை

இந்தப் 'பிள்ளையார் சுழி' பெண் எழுத்தாளரோட கதை ஒண்ணு. 'அநாதைப் பெண்' என்கிற சினிமாவா வந்ததுன்னு உங்களுக்குத் தெரியுமா?

மத்தபடி 'பாரத் கலாசார்'ல பரதநாட்டியத்தோட மத்த டான்ஸ் ஃபார்மலை காக்டெயில் பண்ணி தினம் ஒரு புரோகிராம்.

'முத்ரா' நடத்தற மெகா குவிஸ் (பரிசு கோடி ரூபாயா? லட்ச ரூபாயா? தேங்கா மூடியா தெரியலை!)

ஸ்ருதி லய கேந்திரா நடத்துற தனி தனியாவர்தன கச்சேரி. அதாவது ஒன்றரை மணி நேரத்துக்கு ஒன்லி ம்ருதங்கம்-கஞ்சிரா....

– இப்படி சில நூதனங்கள்ளாம் பயமுறுத்துது. அஃப்கோர்ஸ், எல்லாத்தையும்விட பெரிய ஹை லைட்டா இருக்கப் போறது கல்கியோட மியூசிக் ஸ்பெஷல் இஷ்யூதான்! 'இட் வில் பி டாக்ட் அபவுட்'ன்ற மாதிரி எடிட்டர் சொல்லிக்கிட்டிருக்காங்க.



• விஜய் டெண்டுல்கர்

**சு**மி தமிழைக் (இங்க்லிஷை?) கண்டனம் பண்ணி டெய்லி லெட்டர்ஸ் வருதுன்றதையும் எடிட்டர் மறக்காம சொன்னாங்க. ஒழிக கோஷத்துக்கு நடுவுல 'ஐ கிவ் அப்'னு மிஸ்டர் கொடுவேரியோட 'சரணாகதி' லெட்டர் கூட வந்தது. அப்புறம் ஹைட்ரபாட் லாவண்யா– இப்போ பெங்களூர் லாவண்யாவாகி ஒரு காவிய மடல் அனுப்பியிருக்காங்க. ரசிகர் லெட்டர்ஸை விடுங்க! சுமி தமிழை– அல்லது இங்க்லீஷைக் கண்டு பல்லைக் கடிக்கறவங்ககிட்டே ஒண்ணு கேக்கறேன்... இந்த காலம்ல நல்ல தமிழ்ப் பிரயோகங்களே வரதில்லையா என்ன...? நெஞ்சைத் தொட்டு நிஜத்தைச் சொல்லுங்க; பிடிவாதத்தை விட்டு மன்றத்துல சேருங்க.

— சுமி



**வா**சற்படியில் காலை வைத்ததுமே இனிய அதிர்ச்சி ஈஸ்வரனுக்கு. அவர் முகத்தில் கேள்விக் குறியைத் தேக்கியபடி அஜய்யைப் பார்க்கிறார்.

"என்னடா இதெல்லாம்?"

"எனக்கே ஒண்ணும் புரியலியேப்பா. ப்ரீதி எங்கே... அவளைத்தான் கேட்கணும்."

ப்ரீதி இதற்குள் மிகவும் பழக்கமானவள் போல கூடத்தில் காத்திருந்த ஈஸ்வரனின் நண்பர்களை வரவேற்க போய்விட்டாள்.

ஒருவர் பாக்கியில்லை. ஈஸ்வரனின் பால்ய நண்பர்கள், கல்லூரி சிநேகிதர்கள், தினமும் கடற்கரைக்கு 'வாக்கிங்' போகும் போது, சந்திக்கும் நபர்கள், நெருங்கிய உறவினர்கள், முக்கியமாக–ஈஸ்வரனின் சம்பந்தியும் அந்த நிறுவனத்தின் முதலாளியுமான பெரிய மனிதர்...

"ஹாப்பி பர்த் டே டு யூ."

கோரஸாக எழுந்த குரல், எங்கிருந்தோ மெலிதாய்க் கமழ்ந்த ரோஜா அத்தரின் மணம் சற்று முன் வரையில் மிகச் சாதாரண பங்களாவாக இருந்த அந்த இடம் வண்ண விளக்குகளாலும் காகிதப் பூக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்த நேர்த்தி...

'மயன் மாளிகை' என்பார்களே அதுபோல.

மீனாக்ஷி கணவரையும் மகனையும் ஒரு சேரப் பார்த்து புன்னகைத்தாள்.

"எல்லாம் ப்ரீதியோட வேலை. நேத்திக்கு உங்களுக்கு அசத்தலா ஏதாவது பரிசு வாங்கிக் கொடுக்கணும்னு ஆசைப்பட்டேன். உங்க பிள்ளை உங்களை மாதிரியே தானே இருப்பான்? என்னை வரச் சொல்லிட்டு யாரையோ வரவேற்க ஏர்போர்ட்டுக்குக் கௌம்பிட்டான். இந்தப் பொண்ணுகிட்டக்க பொறுப்பை ஒப்படைச்சுட்டான். பேச்சுவாக்கில், உங்களுக்கு என்னென்ன பிடிக்கும்னு கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டா. எதற்காக கேட்கிறாள்னு அப்போ தெரியல.

ஈஸ்வரனுக்குள் மகிழ்ச்சி, நுரைப் பூவாய்க் கொப்பளித்தது. இயல்பிலேயே மனிதர் நட்புக்காக உயிரையே கொடுப்பவர். வீட்டுக்கு யாராவது சிநேகிதர் வந்து விட்டால் சுலபத்தில் விடமாட்டார். மீனாட்சிக்கும் தெரியும். அவளும் அந்த ஆத்மார்த்தமான உரையாடலைத் தள்ளி நின்று ரசிப்பாள். காப்பியோ, பலகாரமோ, சாப்பாடோ பரிந்து பரிந்து உபசரிப்பாள்.

கபாலி கோயிலுக்குக் கணவருடன் போகும் போதே மீனாட்சிக்குப் ப்ரீதி ஃபோன் செய்திருந்தாள்.

"ஆண்ட்டி, வீட்டோட சாவிய வாட்ச்மேன்கிட்ட கொடுத்துட்டுப் போங்க. மிஸ்டர் கேதாரின்னு ஒரு

அனுராதா ரமணன்

6



# இனிமேல் ஆரம்பம்

மனுஷர் வெள்ளை வேட்டியும் ஜிப்பாவும் நெத்தியில பட்டையா விபூதியும் குங்குமமு மாய்-பூர்ணம் விஸ்வநாதனோட ஜெராக்ஸ் காப்பி மாதிரி வருவார். அவர்கிட்ட தைரி யமா சாவிய கொடுக்கலாம்னு சொல்லுங்க."

மீனாட்சி தயங்கினாள்.

"எதுக்கும்மா... யார் அந்த கேதாரி?"

''இப்போதைக்கு எதுக்குங்கிறதை சொல்ல முடியாது ஆன்ட்டி. ஸாரி... மிஸ்டர் கேதாரி எங்க அப்பா. இந்த விவரம் போதுமில்லையா?"

கோவிலில் கூட வெளிப்பிரகாரத்தில் கணவருடன் மீனாக்ஷி காத்திருந்தபோது மனசுக்குள் இந்த ப்ரீதி தான் வந்து நின்றாள்.

'அடேங்கப்பா! பொண்ணு பார்க்கவும் மல்கோவா மாம்பழம் மாதிரியிருக்கு. பேச்சும் படு சூட்டிகையா இருக்கு!

ஈஸ்வரன் மீனாட்சியைக் கூர்ந்து பார்த்தார்.

''கோவிலுக்கு வந்துட்டு, சுவாமி தரிசனத்துக்குப் போகாம பிராகாரத்துல எத்தனை நேரம் காத்திருக்கிறதா பிரார்த் தனை? உன் பையன் சொன்ன நேரத் துக்கு வருவான்கிறே?"

''எம் பையனை மட்டும் நம்பி யிருந்தா, நீங்க சொன்ன மாதிரி நானும் சந்தேகம்தான் பட்டிருப்பேன். ஆனா, இப்போ பொறுப்பை அவனோட ரைட் ஹேண்டாயிருக்கிற ப்ரீதின்ற பொண்ணு கிட்ட ஒப்படைச்சிருக்கேன். அவளே அவனை அழைச்சிட்டு வருவா. அத னால நிம்மதியாயிருக்கேன். அந்தப் பொண்ணைப் பார்க்கணும் நீங்க, அழகுன்னா அது அழகு..."

ஈஸ்வரன் மனைவியைப் பார்த்து குறும்புடன் சிரித்தார்.

"டி.ஆர். ராஜகுமாரி, குமாரிகமலா, வசுந்தரா இவுங்களை விட அழகா?"

"ஐயோ! போறுமே. எந்தக் காலத்துல இருக் கேன். இங்கே ஐஸ்வர்யா ராய் போய் சிம்ரன் போய் ஜோதிகா வந்தாச்சு. நீங்க என்னடான்னா இன்னமும் டி.ஆர். ராஜகுமாரியை நெனைச்சிட்டு..."

''மீனாட்சி, யௌவனத் துல எது மனசுல பதியுதோ அதுதான் கடைசிவரைக்கும் நிலைக்கும். அதனாலதான் பொண்டாட்டி எத் தனையோ வகை வகையா சமைச்சுப் போட்டாலும் சின்ன வயசுல அம்மா கையால சாப்பிட்ட பழைய சாதமும் மாவடுவும் அமிர்த மாயிருக்கு. அஞ்சாங்கிளாஸ் டீச்சர் இன்னிக்கும் தேவ






தையா மனசுக்குள்ள நிற்கிறா. இருபது வயசுல அப்பாவுக்குத் தெரியாம குடுமிய கிராப்பா மாத்திண்டு, சந்திரலேகா படத்துக்கு ராத்திரி ஆட்டத்துக்குப் போனதும், நடிகை வசுந்தராவோட பெரிய சமுத்திரம் மாதிரியான கண்ணு வழியா இறங்கி அப்படியே மனசுக்குள்ள போயிட முடியுமான்னு தவிச்சதும் இன்னமும் நெஞ்சில் பசுமையாயிருக்கு...''

மீனாட்சிக்கு சிரிப்பும் பரிவும் ஒருசேர ததும்பின. கணவரின் இந்த வெளிப்படையான குணம்தானே இத்தனை வயசுக்கப்புறமும் அவளை வசீகரிக்கிறது. இருந்தாலும் செல்லமாய்க் கடிந்து கொண்டாள்.

''போதுமே. அசடு வழியறது. கோயில்ல வந்து உட்கார்ந்து பேசறபேச்சா இது?''

அவள் இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அஜய்யும் ப்ரீதியும் ஜோடியாக வந்து விட்டனர். மகனை முந்திக் கொண்டு மீனாட்சியே ப்ரீதியை தன் கணவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

''நான் சொல்லலை ப்ரீதி... இவதான்.''

''நமஸ்காரம் அங்கிள். இந்தப் பிறந்த நாள் உங்க வாழ்க்கையில உங்களுக்குப் பிடிச்சதெல்லாத்தையும் மொத்தமா கொடுக்கட்டும்.''

அப்போது கூட ஈஸ்வரன் கலகலவென சிரித்தபடியே சொன்னார்.

''அதெப்படி? எனக்கு பாதாம்கீரும் பால முரளியும் உசிர். இப்போ இங்கே கெடைக்குமா?''

ஈஸ்வரன் உண்மையிலேயே இன்னமும் திகைப்பிலிருந்து விடுபடவில்லை. கோவிலில் விளையாட்டுக்காக அவர் சொன்னது இதோ இங்கே கண்ணெதிரே...

கையில் பெரிய வெள்ளித் தம்ளரில் பாதாம் கீருடன் முகம் முழுக்க பூத்த சிரிப்புடன் கேதாரி...

''என் பேர் கேதாரிநாத். ப்ரீதியோட அப்பா; முதல்ல இந்த பாதாம்கீரை கையில வைச்சிண்டு, எல்லாருக்கும் ஒரு 'சியர்ஸ்' சொல்லுங்கோ... அப்புறம் அப்படியே மாடிய பார்க்க நகருங்கோ; உங்க ப்ரண்ட்ஸ் எல்லாரும் வர்றாங்க பின்னாடியே.''

''என்னது இது? என்னது இது?'' மேற்கொண்டு ஈஸ்வரன் பேசுவதற்கு முன் மாடியிலிருந்து தம்பூராவின் 'ரும்'மென்ற நாதம்.

சிறு குழந்தை போல. நாலு படிக்கு ஒரு காலாய் தாவி ஏறிய ஈஸ்வரன் அந்த விஸ்தாரமான ஹாலின் மையத்தில் கம்பீரமாக அமர்ந்து தம்பூராவை மீட்டிக் கொண்டிருந்த பாடகரைப் பார்த்து சந்தோஷத்தில் பூரித்து மார்பை இருகைகளாலும் பிடித்து கொண்டார்.

''ஐயோ! பாலமுரளி கிருஷ்ணா...''

''மன்னிக்கணும்... நான் ஐயோ பால முரளி இல்ல... எம்.பாலமுரளி. கேதாரி என்னோட ஆப்த நண்பர். சாதாரணமா கச்சேரிகள்ல பாடறதில்ல. இது மாதிரி, 'உங்களோட தீவிர ரசிகருக்குப் பிறந்த நாள்... சின்னதா ஒரு சந்தோஷ அதிர்ச்சி கொடுக்கணும்'னு ஆசைப்பட்டார் கேதாரி; ஆரம்பிக்கலாமா?''

ஈஸ்வரன், கண்களிலிருந்து தாரை தாரையாய் நீர் பெருக பேச்சிழந்து அமர்ந்திருக்க... கேதாரி அவரது நண்பர்களை உபசரிக்க... மீனாட்சியோ கையில் மந்திரக் கோல் இல்லாத தேவதை போல அங்கும் இங்கும் சுற்றும் ப்ரீதியையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்றிரவு, விருந்தைப் பாராட்டுவதா... இசை விருந்தைப் பாராட்டுவதா என்று அறியாமல் அனைவரும் கூடிக்கூடி பேசிக்

கலைய, கேதாரியின் இரு கரங்களையும் பிடித்து வார்த்தையே வராமல் கண்களில் ஒற்றிக் கொள்கிறார் ஈஸ்வரன்.

கேதாரியோ அவரது கரங்களைப் பிடித்த படி கனிவுடன் சொன்னார்.

"அடடா... இப்ப எதுக்கு இத்தனை நெகிழ்ச்சி? காலத்துக்கும் மறக்கமுடியாத ஒண்ணைச் செய்யணும்னு ஆசைப்பட்டார் உங்க ஒய்ஃப். அப்படி ஒண்ணும் நடத்தவே முடியாத பேராசை இல்லை உங்களோடது... ஏதோ, பாலமுரளியை ஆசைப்பட்டேள்! அந்தப் பெரிய மனுஷருக்கும் குழந்தை மனசு... சொன்னதும் வந்துடார். இந்த க்ஷணம் மஹாராஜபுரத்தைக் கேட்டால் நான் எங்கே போக முடியும்."

பேசிக்கொண்டே மகள் எங்கே என்று பார்வையை ஓடவிட்டவரின் கண்ணில் பளிச்சென அந்தக் காட்சி சிக்கியது.

அஜய், ப்ரீதியின் இரு தோள்களையும் பிடித்துக் குலுக்கி தனது சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டவன் கத்தையாய் அவள் கையில் ஏதோ காகிதங்களைக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

மகளுடன் வீடு திரும்பும்போது யதார்த்த மாய்க் கேட்பது போல கேட்டார் அவர்.

"என்னம்மா, உன் பாஸுக்குத் திருப்தி தானே. என்னமோ கைல நிறைய பேப்பர்ஸ் கொடுத்தாரு.... பாராட்டு பத்திரமா?"

"பேப்பர் கொடுத்ததை மாத்திரம் தான் பார்த்தீங்களா? தோளைப் பிடிச்சி குலுக்கின தையும் ஓரக்கண்ணால பார்த்தீங்கல்ல?"

"சேச்சே! உங்க அம்மா காலமானதுக்கு அப்புறம் ஓரக்கண்ணு, சாய்ச்சக்கண்ணு. இதெல்லாமே மறந்து போச்சும்மா. சொல்லு... சொல்லு... என்ன சொன்னாப் பலே?"

"தான் கிளம்பிட்டேன்னு சொன்னார். நாளைக்கு ஆபீஸுக்கு வரமாட்டாராம். போஸ்ட்லேயும் ஈமெயில்லேயும் சில லெட்டர்ஸ் எல்லாம் அனுப்பணும்னு சொல்லி எங்கிட்ட அதோட குறிப்புகளை மட்டும் கொடுத்தார்."

''பாரு...பாரு... அதுல எங்கேயாவது உனக்கும் லவ் லெட்டர் இருக்கப் போறது..."

வீட்டின் கதவைத்திறந்து விளக்கு சுவிட்சைப் போட்ட கேதாரி கிண்டலுடன் சிரிக்க, ப்ரீதி கையிலிருந்த காகிதங்களுள் ஒன்றின்மேல் பார்வையை நிலைத்திருந்தாள்.

'என் கண்ணம்மாவுக்கு...'

நிஜமாகவே காதல் கடிதம்தான்...

(தொடரும்)

  

# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel & Fax: 237 6129.
E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## புத்தாண்டு-பொங்கல் நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர்! வணக்கம், வரும் புத்தாண்டு, பொங்கல் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும், ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவங்கப்பட்டுள்ளது.

## புத்தாண்டு-பொங்கல் திருநாளில்

★குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

★குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு, கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்தர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை, அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 750/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ. | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 9,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

# உபயம் உலகநாதன்!



''என்னோட மாமனாரை மாதிரி விளம்பரப் பிரியனை நீ பார்த்திருக்கவே முடியாது!''

''கொஞ்சம் விளக்கமாச் சொல்லேன்!''

''ஒரு ஸ்கூட்டரை வாங்கிக்குடுத்திட்டு 'உபயம்–உலகநாதன்'னு சைடுல பெயிண்ட் பண்ணிட்டார்!''



''எழுத்தாளரை மொய் எழுத உட்கார வைத்தது தப்பாப் போச்சு.''

''என்ன நடந்துச்சு?''

''கடைசியில 'இந்த நோட்டில் உள்ள பெயர்களும் தொகைகளும் கற்பனையே'ன்னு குறிப்பு எழுதித் தொலைச்சிருக்கார்!''

— தெ. சுந்தரமகாலிங்கம்



''என்னங்க... சட்டசபைக் காவலர்கள் எல்லோரும் கையில வாளும், கேடயமும் ஏந்தித் திரியறாங்க!''

''போர்க் குணத்தைக் காட்டப்போறதா எதிர்க்கட்சிகள் அறிவிச்சிருக்காங்களே... நீங்க படிக்கலையா..!''

— புளியரை கணேசன்

''குரோர்பதில கஷ்டமான கேள்வி கேட்டாங்களா?''

''ஆமாம் தமிழகத்தில் எத்தனை ஜாதி கட்சிகள் இருக்குனு கேள்வி கேட்டாங்க.''

— வந்தவாசி பா. ஜெயக்குமார்.



**அமெரிக்காவின் பத்து சிறந்த மருத்துவர்களில் ஒருவர் என்ற விருதைப் பெற்றவர், இதயநோய் நிபுணர் டாக்டர் கால்ட்வெல் செலஸ்டின். இதயநோய் குறித்தும், அதற்கு அறுவையற்ற மாற்று மருத்துவம் குறித்தும் ஆசிய நாடுகளில் உரையாற்றி வரும் இவர், கடந்த வாரம் சென்னை மருத்துவக்கல்லூரி மாணவர்களிடையே உரையாற்ற வந்தபோது நமக்களித்த பிரத்யேகப் பேட்டி.**

**உங்கள் மருத்துவப் பயணத்திற்கான அவசியம் அல்லது முக்கியத்துவம் என்ன?**

உலக சுகாதார நிறுவனமும் (WHO), உலக இதயப் பேரவையும் (WHF) இணைந்து மேற்கொண்ட ஆய்வில் ஓர் அதிர்ச்சியான உண்மை வெளி வந்திருக்கிறது. உலக மக்கள் தொகையில், இதய நோயாளிகளின் எண்ணிக்கை, வரும் இரண்டாயிரத்துப் பதினைந்தாம் ஆண்டில் இரண்டு மடங்காகப் பெருகும் என்பதுதான் அது. நாடுகளுக்கு மிகப் பெரிய வரமாக விளங்கிய யோகக் கலையை ஐரோப்பிய நாடுகளுக்கு விட்டுக் கொடுத்து விட்டீர்கள். அவர்களின் வாழ்க்கை முறையை அப்படியே சுவீகரித்துக் கொள்ளத் தொடங்கி விட்டீர்கள். இதுதான் இப்போது இங்கே கண் முன்பாக நடந்துகொண்டிருக்கும் தலைகீழ் ஆபத்து.

ஹார்ட் அட்

# சைவத்துக்கு மாறி வழிகாட்டும் டாக்டர்!

எய்ட்ஸ், கேன்சர் போன்ற நோய்கள் குறித்து அரசுகளும், அரசு சாராத சேவை நிறுவனங்களும் தொடர்ந்து பிரசாரம் செய்கின்றன. ஆனால் இதய நோய் குறித்த விழிப்புணர்வை அடியோடு அலட்சியம் செய்துவிட்டோம். இப்போதைய உடனடி விழிப்புணர்வுப் பட்டியலில் இதயநோய்க்கு அதிக முக்கியத்துவம் தர வேண்டியது அவசியமாகிவிட்டது. இதனால்தான் WHO, WHF ஆகிய இரு அமைப்புகளும் இணைந்து இரண்டாயிரமாண்டின் செப்டெம்பர் இருபத்து நான்காம் தேதியை 'உலக இதய தினமாக' அறிவித்தன. எனது பயணமும் இந்த விழிப்புணர்வின் ஒரு பகுதியே.

**ஆசிய நாடுகளைக் குறி வைத்து ஏன் பிரசாரம் செய்கிறீர்கள்?**

குறி வைத்து என்ற வார்த்தையை நான் விரும்பவில்லை. உலகமயமாதல் மூலம் ஃபாஸ்ட்புட் உணவு முறைக்கு மாறிக் கொண்டிருக்கிற, மூன்றாம் உலக நாடுகளில் உடனடி எச்சரிக்கை மணி அடிக்க வேண்டிய நிலை. வரும் இரண்டாயிரத்து இருபத்தைந்தாம் ஆண்டில் ஐம்பத்தேழு மில்லியன் சர்க்கரை நோயாளிகள் இந்தியாவில் இருப்பார்கள் என்கிறது ஆய்வு. புற்றுநோயும் மூன்று மடங்கு பெருகும் அபாயம் இருக்கிறது. இந்தியர்கள் உலகிலேயே அதிக உப்பு சாப்பிடுபவர்களாக இருக்கிறீர்கள். மாமிசம், முட்டை, பால், பால் பொருட்கள், எண்ணெய் உணவுகள் என வெளுத்துக் கட்டுகிறீர்கள். இதய நோயைத் தடுக்கும் வல்லமை கொண்ட, காய்கறிகள், பருப்பு வகைகள், அரிசி, கோதுமை ரொட்டி போன்ற உங்களது உணவு வகைகளுக்குக் குட்பை சொல்லி வருகிறீர்கள். இதயம் மற்றும் சுவாச உறுப்பு



• கால்ட்வெல் செலஸ்டின்

**டாக் என்பது ஒரு பணக்கார நோயா?**

அந்தக் கருத்து தவறு என்பதற்கு இந்தியாவே உதாரணம். என்னிடம் பல நாடுகளைச் சேர்ந்தவர்களும் மாற்று சிகிச்சைக்காக வருகிறார்கள். அவர்களில் இந்தியர்களுக்குத்தான் இதயம்



அதிக பலவீனமாய் இருக்கிறது. ஹார்ட் அட்டாக்கும் அதிகம் தாக்குகிறது.

**இதற்குக் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய காரணம் உண்டா?**

லைப்போ புரோட்டீன் ஏ (Lipo protein(a)) என்ற புரத வகை, இந்தியரின் இரத்தத்தில் அறுபது மில்லிகிராமுக்கு அதிகமாக இருக்கிறது. அதே போல் ஹோமோலிஸ்டைன் (Homolystine) எனப்படும் ஒரு பொருளும் இந்தியர்களுக்கு அதிகமாக இருப்பது ஆய்வு மூலம் தெரிய வந்திருக்கிறது. மற்ற நாட்டவர்களின் உடலில் இது குறைவு.

**கவலை, மன உளைச்சல் போன்ற காரணங்களும் இந்தியர்களைப் பெரிதும் பாதிக்கிறதே?**

உண்மைதான். ஆனால் ஹார்ட் அட்டாக்கைக் கண்டு ஒரு போதும் பயப்பட வேண்டியதில்லை. மற்ற நோய்களைப் போலவே இதையும் பார்க்க வேண்டும். சர்க்கரை நோய், உயர் ரத்த அழுத்தம் இவற்றால் இதயம் பாதிக்கப் படுவதை, ஒப்பிடும் போது ஹார்ட் அட்டாக்கால் இறப்பவர்களின் எண்ணிக்கை என்பது பத்துசதவிகிதம்தான்.

**இதய நோய்க்கு இப்போது இருக்கும் சிகிச்சை முறைகள் ஏழை, நடுத்தர மக்களுக்கு எட்டாத உயரத்தில் இருப்பதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

அறுவை சிகிச்சைக்கான செலவு அமெரிக்காவிலேயே அதிகம் என்கிற போது, வளரும் நாடுகளில் உள்ள மக்களுக்கு அது ஒரு பிரச்னைதான். பரிசோதனைகளும் மருந்து செலவுகளும்கூட மிக அதிகம். அதனால்தான் மாற்றான ஒரு மருத்துவமுறையைச் சிபாரிசு செய்கிறேன். சிகிச்சையை மேற்கொள்ள வேண்டிய இடம் மருந்து நெடி அடிக்கும் கிளினிக் அல்ல. வீடு. நிரந்தர தீர்வு தரும் மருத்துவம் plant-based nutrition மட்டுமே. சைவ உணவுமுறை சிகிச்சையை நிருபணம் செய்ய முதலில் நானும், எனது மனைவியும் சைவர்களாக மாறினோம். பதினான்கு ஆண்டுகளுக்கு முன் நூற்றுக்கும் அதிகமான இதய நோயாளிகளைக் கொண்டு இந்தச் சோதனை மருத்துவத்தை முயன்று வெற்றி பெற்றிருக்கிறேன். இந்த உணவு சிகிச்சையோடு, கொழுப்பைக் குறைக்கும் மருந்துகளை மட்டுமே நான் பயன்படுத்தி வருகிறேன். இதை ஒரு இயக்கமாக நாங்கள் உருவாக்கி வருகிறோம். கத்தியின்றி ரத்தமின்றி ஒரு நிரந்தரத் தீர்வு என்றால் அதை நாம் கடைபிடித்து, இளைஞர்களையும் கடைபிடிக்க வைப்பதில் என்ன கஷ்டம்?

**ஆனால் மக்கள் கேட்க வேண்டுமே?**

மக்களிடையே செல்வாக்கு படைத்த, தலைவர்களும், நடிகர்களும் இங்கே என்ன செய்கிறார்கள்? அவர்களை வைத்துப் பிரசாரம் செய்யுங்கள். பலன் தானாகக் கிடைக்கும். புகைபிடித்தலையும், மாமிசம் மற்றும் கொழுப்பு உணவுகளையும் தவிர்த்து, உடலின் ரத்த அழுத்தத்தை 110/70க்குள்ளும், கொலஸ்ட்ரால் அளவை 150 மில்லிகிராமுக்குக் கீழேயும் கட்டுப்படுத்தி வைத்திருந்தால், ஹார்ட் அட்டாக் என்ற பேச்சுக்கே இடமில்லை.

சந்திப்பு: **ஜெயன்**

படம்: **ராஜன்**

ஜக்கம்மாவுக்கு எரிச்சல் வந்தது. செங்காட்டில் தரையோடு தரையாகப் படர்ந்திருந்த இலந்தைச் செடிகளில் தேடித் தேடிப் பறித்தும் ஒரு கொட்டான் அளவுக்கு மேல் இலந்தைப் பழங்கள் தேறவில்லை.

முழங்கை வரை முட்கள் கிழித்து இரத்தம் கசிந்ததுதான் மிச்சம். இரத்தம் கசிந்த முழங்கையில் செங்காட்டு மணலைத் தெள்ளி அப்பினாள். தூரத்தே கண்மாய்ச் சரி

# நல்ல தாரி சொல்லு ஜக சேதி



வில் மேய்ச்சலுக்கு வந்த அவள் ஆடுகள் நிழல் பார்த்து ஒதுங்கி உட்கார்ந்து அசை போட்டுக் கொண்டிருந்தன.

பத்து நாட்களுக்கு முன் பிறந்த குட்டியொன்று கால்களை மடக்கி தாய் ஆட்டின் கனத்த மடியிலிருந்து புடைத்துத் தொங்கும் இரு காம்புகளையும் மாறி மாறி கவ்வி பால் குடித்துக் கொண்டிருந்தது.

இக்காட்சியைப் பார்த்ததும் ஜக்கம்மாவுக்குச் செத்துப் போன அம்மாவின் நினைவு நெஞ்சில் முட்டியது.

இது என்னடி கொடுமை, அட்டை மாதிரி கூடவே ஒட்டிக்கிட்டு. நாளைக்கு ஒரு வீட்டுக்குப் போறவ இப்படியா பெத்த தாயைச் சுத்திச் சுத்தி வர்றது. போ... போயி, ஆடுகளை வெளிய கட்டி, அகத்திக் கீரைக் கட்ட பிரிச்சுப் போடு..... போ, ஜக்கம்மா''

"அம்மா, நீயும் வா. நாம ரெண்டு பேரும் சேர்ந்தே செய்வோம்." அம்மாவின் சேலைத் தலைப்பைப் பிடித்து இழுப்பாள்.

''இங்க இரு, நாலு சொம்புத் தண்ணிய தலையில் ஊத்திக் குளிச்சுட்டு வர்றேன்'' என்று அம்மா தட்டி மறைவிற்குள் சென்றால் "நானும் உள்ள வர்றேன்" என்று ஜக்கம்மா கதவைத் தள்ளுவாள்.

"தாய்ப்பால் மறக்காத குழந்தை மாதிரி கூடவே

எட்டயபுரம் ராஜன்

ஒட்டிக்கிட்டு. வெளிய போடி..... போயி அடுப்பைக் கவனி."

அவள் குளித்துவிட்டு ஈரத்தலை முடியைக் கோதி விட்டவாறு வெளியே வந்தால், குளியல் வாசலில் கிடக்கும் கல்லில் ஜக்கம்மா உட்கார்ந்திருப்பாள்.

அம்மாவின் கண்களில் நீர் திரளும். அப்படியே மகளை இழுத்துத் தன்னோடு அணைத்துக் கொள்வாள்.

ஒரு சனிக்கிழமை, சந்தைக்குச் சென்று ஆட்டிற்கு வேண்டிய அகத்திக் கீரைக் கட்டுகளை வாங்கிக் கொண்டு வந்த அம்மா தலைச் சுமையை இறக்குவதற்குள் வாசலிலேயே கொடகொட வென்று வாந்தி எடுத்து அப்படியே திண்ணையில் சாய்ந்து விட்டாள்.

ஜக்கம்மா பதறி, அலறி ஊர் மடத்தில் அரட்டை அடித்துக் கொண்டிருந்த அப்பாவைக் கூட்டி வந்தாள். வண்டிகட்டி அம்மாவை டவுன் ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். மூச்சுத் திணறிக் கொண்டிருந்த அம்மாவின் மூக்கில் குழாய் செருகுவதற்குள் தலை சாய்ந்து விட்டது.

அம்மாவின் காரியம் முடிந்த பத்தாம் நாள், தொழுவத்தைப் பெருக்கி சுத்தம் செய்து, சிதறிக் கிடந்த புழுக்கைகளைத் திரட்டி கூடையில் அள்ளிப் போட்டுக் கொண்டிருக்கும் பொழுது வாசலில் அப்பா. அவர் பக்கத்தில் அப்பாவை விட உயரமாக ஒருத்தி.

"தாயி. ஜக்கம்மா. இவ தான் உன்னோட சின்னம்மா. இனிமே உங்கம்மாவுக்கும் மேல உன்னை அன்பா கவனிச்சுக்கிடுவா உள்ள கூட்டிட்டுப்போ'' என்றார் அப்பா.

ஜக்கம்மா திகைத்துப் போய் நின்றாள்.

"போ... பார்வதி, உள்ள போ. நம்ம ஜக்கம்மா தங்கமான பொண்ணு" என்றவாறு பாயைக் கூடத்தில் விரித்து அவள் கை பிடித்து உட்கார வைத்தார். பின் ஜக்கம்மாவை நோக்கி. "தாயி. சின்னம்மா காதில மூக்கில பித்தளையும், பிளாஸ்டிக்கும் போட்டிருக்கா. பாவம் உனக்கு அம்மா வாங்கி வைச்சிருக்கிற அந்தத் தங்கக் கம்மல, மூக்குத்தியைக் கொண்டு வந்து கொடு. போட்டுக்கிடட்டும். நீ, ஒண்ணும் கவலைப் படாதே. வர்ற சித்திரைக்குள்ள உனக்குக் கல்லுவைச்ச



தோடும், காலுக்குக் கொலுசும், கழுத்து நிறைய சங்கிலியும் அப்பா வாங்கித் தர்றேன்'' என்றார்.

ஜக்கம்மா எதுவும் பேசாமல் பெட்டியைத் திறந்து அவற்றை அப்பா கையில் கொடுத்தாள். நெஞ்சில் துக்கம் பொங்க ஆரம்பித்தது. தெருத் தெருவாக அம்மா ஆட்டுப் பால் விற்றுச் சேர்த்த பணத்தில் ஆசையாக அவளுக்கு வாங்கிக் கொடுத்தவை. ஒரு நொடியில் கைமாறி விட்டன.

அன்றிரவு "தாயி. வெளித் திண்ணையில் நீ படுத்துக்கோ. நானும், சின்னம்மாவும் கூடத்தில் படுத்துக்கிடுறோம்" என்று அப்பா சொல்லும்பொழுது அப்படியே அவள்மீது ஒரு வாளி நிறைய இக்கங்குகள் விழுந்த உணர்வு.

''வெளியே திண்ணையிலேயா?'' பதறியவாறு ஜக்கம்மா கேட்டாள்.

"என்னடி.... குதிர் மாதிரி திமு திமுன்னு நிக்க. விலா வாரியா வௌக்குவாகளோ. உங்க ஆத்தா கூறு கெட்டவளா வளர்த்திருக்காளே" வந்தவள் வார்த்தைகளைக் கொட்டினாள்.

அம்மாவைச் சொன்னதும் ஜக்கமாவால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. "எங்க அம்மாவை யாரும் குறை சொல்ல வேண்டாம். எனக்குக் கெட்ட கோபம் வரும்'' என்றாள்.

"அட சிறுக்கி... கெட்ட கோபம் வருமா! என்ன யாருன்னு நெனச்ச? கெட்ட கோபம் வந்து வெட்டி எறிஞ்சுடுவியோ. யோவ், உம்ம மக சொல்லுறதக் கேட்டுக்கிட்டு படுத்துருக்கியே, எந்திரிச்சு கன்னம் வீங்க ரெண்டு கொடு. இல்ல இப்பவே போறேன்'' என்று ஆவேசமாக ஆடினாள்.

"ஜக்கம்மா, பெரியவங்க கிட்ட இப்படியா பேசுறது. இனி சின்னம்மாட்ட ஏடா கூடமா பேசினே நான் மனுஷனா இருக்க மாட்டேன். போ திண்ணையில் படு."

மறுநாள் காலையில "ஏண்டி இனி நீ தான் ஆட்டைப் பத்திக்கிட்டு செங்காட்டு மேய்ச்சலுக்குப் போவனும். தொரட்டியைக் கையில் எடுத்துக்கோ." என்றார் அப்பா.

அப்பாவையும், சின்னம்மாவையும் எதிர்த்துப் பேச திராணியற்ற அவள் வேறு வழியில்லாமல் தினமும் ஆடு மேய்க்கச் சென்றாள்.

**வீ**ட்டில் இருப்பதை விட செங்காட்டில் ஆடுகளோடு திரிவதை மனம் நாடியது. ஆதாளைச் செடிகளிடையே நடந்து, இலந்தைப் புதர்களைத் தேடுவதும், கண்மாய்க் கரையில் நாவல் மரக்கிளையைத் தொரட்டியால் இழுத்து பழங்களை உதிர்த்துத் தின்பதும், உச்சிவேளையில் உறக்கம் வந்தால் ஏதாவது அடிமரத்தில் சாய்ந்து தூங்குவதும் பழக்கமாகிவிட்டது.

பழைய நினைவுகளைக் கலைத்துவிட்டு எழுந்தவளின் கண்ணில், ஊரணிக்கருகில் அடர்த்தியாகக் கிளை பரப்பி வளர்ந்திருக்கும் புங்க மரத்தடியிலிருந்து புகை எழும்புவது தெரிந்தது.

மர நிழலில் ஒரு வாலிபன் சோறு பொங்கிக் கொண்டிருந்தான். ஆள் நல்ல திடகாத்திரம். பிடரியில் அலை அலையாய்ப் புரளும் தலைமுடி, நெற்றி முனை தொடு மளவிற்கு நீண்ட சந்தனக் கோடு. நடுவில் பளிச்சென்று செந்தூரம். அவனுக்கருகில் ஓர் உடுக்கும், காலில் அணியும் வெண்கலச் சிலம்புமிருந்தன.

"யோவ், யாருய்யா நீ?''

ஏதோ சிந்தனையில் சுள்ளிகளை அடுப்பில் போட்டு எரிய விட்டுக் கொண்டிருந்தவன் குரல் கேட்டுத் திரும்பினான்.

கையில் தொரட்டியுடன் நிற்கும் ஜக்கம்மாவைப் பார்த்து "ஆடு மேய்க்கிறவளா? எதுக்கு வந்தே?'' என்று கேட்டுக் கொண்டே மர அகப்பையால் கொதித்துக் கொண்டிருக்கும் பானையிலிருந்து கொஞ்சம் சாதத்தை எடுத்து விரலால் நசுக்கி வெந்துவிட்டதா என்று பதம் பார்த்தான்.

அடுப்பிலிருந்த பானையை இறக்கிச் சோற்று நீரை ஒரு சட்டியில் வடித்தான். பின் கைகளைக் கழுவி விட்டு ஜக்கம்மாவின் அருகில் வந்து உட்கார்ந்தான்.

## ரஜினி தந்த பரிசு!

**யா**ருக்காவது அன்பளிப்பு தர வேண்டும் என்றால் ராகவேந்திர சுவாமிகளின் படத்தைப் பரிசாகத் தருவது ரஜினியின் வழக்கம். ஆனால் தற்போது சின்ன மாற்றம். 'ஹரி ஓம்' என்று எழுதி, கையெழுத்



நீட்ட புத்தகங்களைப் பரிசாகத் தருகிறார்.

சமீபத்தில் பழ. நெடுமாறனைச் சந்தித்து, ராஜ்குமாரை மீட்டு வந்ததற்குப் பாராட்டு தெரிவித்த ரஜனி, 'லிவ்விங் வித் தி ஹிமாலயன் மாஸ்டர்ஸ்' என்ற புத்தகத்தைப் பரிசாக அளித்திருக்கிறார். சுவாமி ராமா என்பவர் எழுதிய இந்நூலின் விலை 265 ரூபாய்.

''தொலைபேசி அழைப்புகளோ, இன்ன பிற இடையூறுகளோ இல்லாத அமைதியான நேரத்தில்தான் புத்தகம் படிக்க மூடு வரும். அதனால், அந்தப் புத்தகத்தைச் சுற்றுப் பயணத்தின் போது படிப்பதற்காக எடுத்து வைத்திருக்கிறேன்'' என்றார் பழ. நெடுமாறன்.

- அனுராதா

"உன்னோட பேரென்ன?"

"ஜக்கம்மா."

"ஒன்பது கம்பளத்தா உலகாண்ட ஈஸ்வரி பேரு" என்றவன், "நான் ஜாமக் கோடாங்கி" என்றான்.

ஜக்கம்மாவின் முகம் மலர்ந்தது.

"ஜாமக்கோடாங்கியா,.... உன்னோட நாக்குல வர்ற வாக்குப் பலிக்கும்னு சொல்லுவாகளே. நல்ல குறி இந்த ஏழைக்குச் சொல்லு சாமி" என்று அவன் கால்களில் விழுந்தாள்.

அவன் எதுவும் பேசாமல் அவளையே உற்றுப் பார்த்தான். பிறகு அகன்ற பூவரசு இலைகளைப் பறித்துக் கொண்டு வந்தான். காய்ந்த குச்சித் துண்டுகளால் அந்த இலைகளைக் கோத்து அகலமாக்கி அவள் முன் நீட்டி "முதல்ல சாப்பிடு. அப்புறம் குறி சொல்லுறேன்" என்றான்.

"எனக்குச் சாப்பாடு வேண்டாம்."

"முழுப்பட்டினியாக் கிடக்கிறத முகம் காட்டுது. பசிக்கலையாக்கும்'' என்றவன் இலை நிறைய சாதம் போட்டு, குழம்பு ஊற்றி "...ம்ம் சாப்பிடு" என்று மெல்ல அதட்டினான்.

ஜக்கம்மா இலை நிறைய இருந்த சாதத்தைப் பார்த்தாள். வெந்தும், வேகாமலும் கட்டி திரண்டு புளித்த கேப்பைக் கூழையே விழுங்கி ருசி செத்த வாயில் எச்சில் ஊறியது. அள்ளி அள்ளிச் சாப்பிட ஆரம்பித்தாள். பிறகு சொன்னாள்.

"நான் ஒத்தை. அதான் இப்படி செத்துப் பிழைக்கேன். அப்பா சின்னம்மா சொல் கேட்டு இந்த செங்காட்டுல ஆடு மேய்க்க அடிச்சுத் தொறத்திட்டாரு. திசை தெரியாம அலையுறேன். எனக்கு நல்ல சேதி வருமா சாமி" எச்சில் கையென்றும் பாராமல் கரங் குவித்தாள்.

"முதலுல சாப்பிடு. அப்புறம் பேசுவோம்" என்றவன் மறுபடியும் அவள் இலையில் சோறு வைத்து, குழம்பு ஊற்றினான்.

அவள் சாப்பிட்டு முடித்ததும், அவனும் சாப்பிட்டான்.

ஜக்கம்மாவை அழைத்து அவன் முன் அமரச் சொன்னான். பின், "ஜக்கம்மா, நான் சொல்றதக் கவனமா கேளு. நான் தெக்கருத்திக்காரன். தாமிரபரணிக் கரையில எங்க கிராமம் இருக்கு. மூணு போகம் விளையும் நாலு ஏக்கர் வயலுக்கு நான் சொந்தக்காரன். இருந்தாலும் எங்க குல வழக்கப்படி ஒரு பத்து நாள் ராப்பிச்சை எடுக்கணும். அதில கிடைக்கிற காசு தானியங்களை ஏழை எளியவங்ககிட்ட கொடுத்துட்டு ஊருக்குப் போய்டுவேன். விவசாயம், சொந்தவீடு, தொழுவில மாடு எல்லாம் இருக்கு'' என்றான்.

"யோவ், ஜாமக்கோடாங்கி, நான் உன்னோட கதையைக் கேட்டேனா? நீ கும்பிடுற சாமிகிட்ட வலுவா குறி கேட்டு இந்த ஏழைக்கு ஒரு நல்ல செய்தி சொல்லு'' என்றாள் எரிச்சலோடு.

அவன் கடகடவென்று சிரித்தான்.

"ஜக்கம்மா, நீ அப்பாவிப் பொண்ணு. அதனால உண்மையைச் சொல்லுறேன். எங்க வாயில வர்றத ராகமா பாடிட்டுப் போவோம். காக்கா உட்கார்ந்த கதையா சில பலிச்சிடும். அவ்வளவுதான். மனுஷன் பிறக்கும்போது ஆண்டவன் தலையில கிறுக்கிற தலை எழுத்துப்படிதான் எல்லாம் நடக்கும். சாமி வந்து அருள்வாக்கு சொல்லுறது - சும்மா பேத்தல். வயித்துப் பிழைப்புக்கு மக்களை சுலபமா ஏமாத்துறதில, இதுவும் ஒண்ணு, அவ்வளவுதான்'' என்றான்.

ஜக்கம்மா அப்படியே அசந்து போய் விட்டாள்.

"உன்னோட சாமிகிட்ட கேட்டு நல்ல சேதி சொல்லுவேன்னு நெனைச்சா எல்லாம் பொய், பேத்தல்னு சொல்லுற. சோறு போட்டதுக்கு நன்றி சாமி, புறப்படுறேன்" என்று எழுந்தாள்.

"அட, அவசரப்படாதே நான் இன்னும் முடிக்கல" என்றவன் எழுந்து நின்று கரங்களை மார்பில் கட்டிக் கொண்டு "ஜக்கம்மா அது என்னமோ தெரியல. உன்னைப் பார்த்ததி லிருந்து இரக்கமும், பிரியமும் மாறி மாறி உன் மேல் வந்துக்கிட்டிருக்கு. நான் ஒரு

**இந்திரா** : எப்போதுமே மழை என்றால் பயம்தான். பெருமழையில் எத்தனை குடிசைகள் கரையுமோ? பீஹார், வங்காளம் போன்ற மாநிலங்களில் அடிக்கடி ஏற்படும் வெள்ளப் பெருக்கும் விளைவான கொடுமைகளும் ஞாபகத்துக்கு வரும். போன வருடம் மொபெட்டில் போய்க் கொண்டிருந்தபோது பிடித்துக் கொண்டது ஒரு பேய் மழை. இப்போதும் அது ஞாபகம் வந்து அச்சுறுத்துகிறது.



முடிவு எடுத்துருக்கேன் எப்படிச் சொல்லுறதுன்னு தெரியல்'' என்றான்.

"முடிவா! என்ன முடிவு?" ஆச்சரியமாகக் கேட்டாள் ஜக்கம்மா.

"எங்கூட வந்துடு. ராத்திரி ரயிலுக்கே ஊருக்குக் கிளம்பிடலாம். எங்க கிராமமே கூடி நிக்க உன் கழுத்தில தாலி கட்டுறேன். என் உடம்பில மூச்சு இருக்கிற வரைக்கும் உன் முகம் வாடாது. என்னை நம்பு.''

அவன் நிதானமாகவும், அழுத்தமாகவும் சொன்னான்.

ஜக்கம்மா சில நிமிடங்கள் அப்படியே திகைத்து நின்றாள். இடிந்து போய் ஏங்கிக் கிடந்த மனத்திற்கு அவன் சொற்கள் ஒரு வலுவான பற்றுக் கோடாய் உள்ளிறங்கிய போதிலும், பெண்மைக்கேயுரிய அச்சம் மனத்தில் கவிந்தது.

"நீ சொல்லுறத கேட்க நல்லாயிருக்கு. ஆனா, உன்னை எப்படி நம்புறது? ஒரு தடவை சோறு போட்டதை நம்பி ஓடி வந்திடலாமா? உன்னோட ஆசை முடிஞ்சதும் அடிச்சுத் துரத்திட்டா.... எங்க போவேன்? ஆம்பிள கூப்பிட்டா பொம்பிள போயிடுறதான்னு ஊரே கைநீட்டிப் பேசும். வேண்டாம் சாமி ஏங்கிக்கிட்டிருக்கிற இந்தப் பாவி மனசுல ஆசை விதையத் தூவி வேர்விட வச்சிடாதே. இருக்கிற கஷ்டம் போதும்'' என்று அவசரமாகக் கிளம்பினாள்.

"ஜக்கம்மா, நீ, பயப்படறதில நியாயம் இருக்கு. ஆனா நான் அப்படிப்பட்ட ஆள் இல்லை. உன்னை நான் கைவிடமாட்டேன்'' என்றான். அவன் குரலில் உறுதி தெரிந்தது.

ஜக்கம்மாவின் மனசு தனி ஊசலாக ஆட ஆரம்பித்தது. நம்பிக்கை வேர் கிளைவிடத் தவித்தது.

"ஐயா, பெத்தவளை இழந்த பாவி, எரிஞ்ச சருகா கருகிக் கிடக்கேன். கண்ணுக்குள்ள வைச்சுக் காப்பாத்த வேண்டிய அப்பன் திண்ணைக்கும், தெருவுக்கும் விரட்டிட்டான். யாரோ நீ, கல்யாணம் செஞ்சு காப்பாத்தறேன்னு சொல்லுற. ஆனாலும் நான் உங்கூட வரமுடியாது.''

"ஜக்கம்மா, நீ ஏன் என்கூட வரமாட்டேங்குறேன்னு எனக்குத் தெரியும். நான் கெட்டவன், பொய்ச் சத்தியம் செய்யுறவன்னு உன் மனசு சொல்லுது.''

ஜக்கம்மா விரக்தியுடன் சிரித்தாள்.

"ஐயா, இந்த செங்காட்டுல ஆடு மேய்ச்சுக்கிட்டுத் திரிஞ்சாலும், ஒரு மனுஷனைப் பாத்து நல்லவரா கெட்டவரான்னு இனம் கண்டுபிடிக்க இந்த ஏழையால முடியும். நீ நல்லவன் சாமி. புடம் போட்டத் தங்கம். இந்த அத்துவான காட்டுல என்னை வளைச்சுக் கீழ தள்ளி பெண்டாள எம்புட்டு நேரமாகும்? என்னோட முகவாட்டம் பாத்து அள்ளி அள்ளிச் சோறு போட்டயே அப்பவே நெனைச்சேன்; உன்ன ஒரு அன்ன லட்சுமி பெத்துருக்கணும்னு. நீயா, கெட்டவன்?''

"நான் கெட்டவனில்லேன்னா ஏன் எங்கூட வரமாட்டேங்கிற?''

"சொல்லுறன் சாமி சொல்லுறன். பொண்ணாப் பொறந்தவ செய்யக் கூடாத ஒரு காரியம் பெத்தவங்களுக்குத் தெரியாம ஓடிப் போறது. என்ன பெத்த அப்பா வந்தவ பேச்சைக் கேட்டு கொடுமைதான் படுத்துறாரு. ஆனா வீட்டைவிட்டு ஓடிப்போக என் மனசு ஒப்பமாட்டேங்குது. ஒரு பெண்ணுக்குக் கஷ்டம் வரும். புலம்பலாம், அழலாம், ஊரையே கூட்டி நியாயம் கேட்கலாம். சண்டை கூடப் போடலாம். ஆனா யாருக்கும் தெரியாம படி இறங்கி ஓடிப் போகக் கூடாது. இன்னிக்கு இருட்டில் இருக்கேன். நாளைக்கே வெளிச்சம் இந்த ஏழை மேல் விழாமலா போயிடும்.''

கண்களில் நீர் மல்க அவனை வணங்கி விட்டு தொரட்டியை எடுத்துக் கொண்டு ஜக்கம்மா அங்கிருந்து புறப்பட்டாள். ●

# வட்டமேஜை

✉ சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்கள். நம் பிரதமர் சாதுவை (தலையங்கம்) எல்லோரும்தான் மிரட்டிப்பார்க்கிறார்கள். பாவம், மம்தா, உமா பாரதி, சுமா ஸ்வராஜ் 'போதாது' என்று முண்டா 'முண்டா' தட்டுகிறார். தலையங்கம் அருமை.
**விருதுநகர், இரா.சந்திரசேகரன்**

✉ தமிழகத்தில் கல்வி பற்றிய உரையாடலில் காரசாரம் அதிகம். குறிப்பாக எம். அனந்த கிருஷ்ணனின் கருத்துகள் சபாஷ்போட வைத்தன.
**திருச்சி, ராஜி ராதா**

✉ சந்திரசேகரனின் தடய அறிவியல் கட்டுரைப்பகுதி எங்கள் சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு அவர்கள் படிக்கும் குற்றவியல் தத்துவம் சிறப்புப் பாடத்திற்கு மிகவும் பயனுள்ளதாக அமைந்திருக்கிறது. ஒவ்வொரு வாரமும் எப்போது வரும் என்று எதிர்பார்க்கிறார்கள்.
**புதுவை, ஷீலா பாஸ்கரன்**

✉ துல்சிமர், கிதார் எழுப்பிய ஏகோபித்த இசை நாதத்தை 'கிங்குளிங்கு சவுண்டு' எனக் குறிப்பிட்டதன் மூலம் எங்கள் இதய யாழை இதமாக மீட்டிவிட்டார் 'மீட்டருக்கு மேல் கேட்காத' ஆட்டோக்காரர்!
**கு.கழுகாசலபுரம், எஸ்.ஏ.கேசவன்**

# 'முண்டா' தட்டுகிறார்!

✉ ரிஷபனின் 'கண்ணாடி' படித்தேன். அப்பப்பா... உணர்ச்சிகளை எவ்வளவு அழகாக சித்திரித்துள்ளார். தூக்கி எறிந்த கண்ணாடியில் சுமாராய்த் தெரிந்த முகம் இப்போது ஏழெட்டு விதமாய்த் தெரிவதிலாகட்டும்; கண்ணாடிக் கடையில் பெரிய கண்ணாடிகளில் எத்தனை விதமான 'நான்' கள் என்று பெருமிதப்படுவதில் ஆகட்டும், உணர்ச்சிப் பிழம்பு! கடைசியில் பத்து ரூபாய் கண்ணாடிதான் வாங்க முடிந்தது எனும்போது மனத்தில் இரக்கத்தை வரவழைத்துவிட்டார் ரிஷபன்.
**மன்னார்குடி, எம்.எஸ்.சுலோசனா**

✉ காவல்துறையினரின் மன உளைச்சலைக் குறைக்க 'யோகா' கற்றுத் தருவது நல்லதுதான். ஆனால் 'யோகா' மட்டுமே உரிய பலனைத் தராது. கால நேரமற்ற பணியைக் காவலர்களுக்கு வழங்குவதைத் தவிர்த்து, அவர்கள் பணியை மூன்று ஷிப்டாகப் பிரித்து, ஒரு ஷிப்டுக்கு எட்டு மணி நேர பணி மட்டுமே அவர்களிடமிருந்து பெறப்பட வேண்டும்.
**மதுரை,**
**என்.பாலகிருஷ்ணன்**



✉ சித்தார்த்த பாசுவுடன் லூசின் கற்பனைப் பேட்டி படித்தேன். நான் "கௌன் பனேகா குரோர்பதி" பார்த்ததில்லை. ஆனால் "கோடீஸ்வரன்" நிகழ்ச்சியைப்பார்த்த எனக்கு லூசு கண்ட பேட்டி மிகையாகத் தோன்றவில்லை. சாதாரண கேள்விகளுக்குக் கூட நம்மவர்கள் எப்படித் திணறுகிறார்கள்? நான் அந்தக் காலத்து எஸ்.எஸ்.எல்.சி. எனப் பெரியவர்கள் பீற்றிக் கொள்வதில் அர்த்தம் இருக்கத் தான் செய்கிறது.
**பாளையங்கோட்டை,**
**தி.சு. பாலசுப்பிரமணியன்**

✉ பல்வேறு அரசியல் கட்சிகளின் அவல நிலைகளைப் பட்டியலிட்டு "பா.ம.கவை வீழ்த்துவதே முதல் பணி!" என்று கூறும் திருமாவளவனின் பேச்சு வன்முறையைத் தூண்டுவதாகத்தான் அமைகிறது சார்.
**சென்னை, சி.பூங்கோதை**

✉ மீட்டருக்கு மேல் கேட்காத ஆட்டோ செல்வத்தின் 'நகர்வல'த்தில் விறுவிறுப்பு வாரா வாரம் சூடு போட்ட ஆட்டோ மீட்டர் போல் ஏறிக் கொண்டே போகிறது.
**சென்னை, கே.எஸ்.நாராயணன்**

# அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்,



**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

வரசித்தி விநாயகர் உங்கள் எதிர்ப்புகளை எல்லாம் நீக்கி, வாழ்வில் முன்னேற்றம் தருவார். பொறியியல், சட்டம், காவல், இராணுவம், தகவல், சினிமா, சங்கீதம், நாட்டியம்னு எல்லா துறையைச் சார்ந்தவங்களுக்கும் செழிப்பான காலம்தான்.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

அலைச்சல், குழப்பம், சங்கடம்னு தடுமாறுவீங்க; அரசியல், நிர்வாகம், மருத்துவம், இரசாயனம் போன்ற துறையில் உள்ளவங்க ரொம்ப பொறுப்பா பணியாற்றணும். கணவன் மனைவி உறவுல விரிசல் உண்டாகலாம்... அளவா, நிதானமா ஹாண்டில் பண்ணுங்க. எப்பவும் பக்த ஆஞ்சநேயரை கும்பிட்டுட்டு, நேரான ரூட்லயே போங்க; குறுக்குப் பாதை கவுத்துப்புடும்!



**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

புதிய பொறுப்புகளும், புதிய பதவியும் ஏற்க தயாரா இருங்க; தொழில்ல வளர்ச்சி இருக்கும்; ஆனா எஞ்சினியருங்க, இயந்திரத் தொழிலாளிங்க ரொம்ப எச்சரிக்கையா இருக்கணும். புதியவர்கள், வேற்று மொழியாளர்கள்கிட்ட உஷாரா இருங்க; திருத்தணி முருகனை நம்பினா, நோய் நொடி, ஆபத்து விபத்துலருந்து விமோசனம் கிடைக்கும்.



**கடகம்** : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

'அம்மனோ சாமியோ' பாடற காலங்க இது; கருமாரியம்மா நல்ல வாக்கு சொல்றாளே! எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், சிந்தனையாளர்களுக்கெல்லாம் பாராட்டும் பரிசுமா வாரி வழங்கறாளே! அதுக்காக விளையாட்டு, உல்லாசம்னு அலையாதீங்க; பணம் பஸ்மமாயிடும்.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

அட என்னங்க உங்க மூஞ்சி இப்படி ஜொலிக்குது? புதுசா பட்டமும் பதவியும் வருதுன்னா? ஏதோ 'லக்' அடிக்கப் போகுதேன்னா? சுப காரியங்கள் நடக்கப் போகுதேன்னா? ஆனா ரொம்ப துள்ளாதீங்க; ராகவேந்திரரைப் பிடிச்சிங்கன்னா தாய் வழி உறவினர்கள் தொல்லையிலிருந்து தப்ப வழி கிடைக்கும்!



**கன்னி** : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

நீங்க பேச்சாளரா? உங்க வார்த்தையாலேயே எல்லோரையும் கட்டிப் போட்டுடுவீங்க, அரசியல்வாதின்னா செல்வாக்கு உயரும்; கலைத்துறையைச் சேர்ந்தவர்னா வெற்றி வாய்ப்பு அதிகரிக்கும். சந்தோஷத்துல உடம்பைக் கவனிக்காம விட்டுடாதீங்க; வேகத்தை விட்டு விவேகத்தோட செயல்பட ஷீரடி சாயிபாபாவைப் பிடிங்க.



**துலாம்** : (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)

சத்ய சாயிபாபா உங்க

கற்பனைத் திறனை அதிகரிக்கறாருங்க; கலைத்துறை சம்பந்தப்பட்டவங்களுக்கு நல்ல காலம்தான். ஆனா பேச்சல பதற்றமோ கோபமோ கூடாதுங்க; மின்சாரம், நெருப்புகிட்ட போகாதீங்க; சம்சாரத்தோட சண்டை சச்சரவு இல்லைன்னாலும் தங்கச்சி வழியில சஞ்சலந்தாங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

வீட்லயும் வியாபாரத்துலயும் பார்ட்னரால அனுகூலம். லைஃப் பார்ட்னரை வளைக்கவும் இப்ப நல்ல நேரங்க; ஆமாம்... இது காதல் திருமண ஸீஸனுங்க! பொருளாதாரம் கொஞ்சம் அப்படி இப்படித்தான் இருக்கும்; திருப்பதி வேங்கடேசனை மறக்காம கும்பிட்டுக்கங்க.

# நடக்கும்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நீங்க ஸேல்ஸ்ரெப்பா? கமிஷன் ஏஜெண்டா? தரகரா? உங்க வருமானம் ஓகோன்னு கூடப் போகுது! மருத்துவம், நிர்வாகம், அரசியல்ல இருந்தா கவனமா இருங்க; விவசாயி, சமூக சேவகர்களுக்குச் செழிப்பான பாதை தெரியுது. பொதுவா எல்லாருமே எல்லாத்துலயும் நிதானமா இருக்கணும்னு அம்மன் அருள்வாக்கு சொல்றா!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

தந்தையால அனுகூலம் உண்டாகி பிதுர்ராஜித சொத்துக்கள் வந்து சேரும்னு அன்னை அபிராமி சொல்லுறாளே... அரசாங்கத்தாலும் உதவி கிடைக்குமாம்! அப்புறமென்ன... புதுசா வியாபாரம் தொடங்க வேண்டியதுதானே? கொஞ்சம் பக்தி சைடுலயும் ஒரு கண் வச்சீங்கன்னா, வேண்டாத குழப்பமெல்லாம் ஓடிடும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

காமாட்சியம்மன்



மிதுன ராசிக்காரரான கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளிக்கு இந்த வாரம் தொழில்ல வளர்ச்சி இருக்காம்!

கருணையால நீங்க செயற்கரிய காரியங்களைச் சுலபமாகச் செய்து சாதனை படைப்பீங்க; பரிசு, விருதுன்னு ஜோர்தான்; ஆனா உடம்புதான் பேஜார் படுத்தும். ஒரு பக்கம் ட்ரான்ஸ்ஃபர், ப்ரமோஷன்னும் இன்னொரு பக்கம் சின்னச் சின்ன விபத்துகள் தொல்லைகள்னு மாறி மாறி ஜாலம் காட்டும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்களுக்கு நல்ல செய்தி வரப் போகுது! உங்க உடன்பிறப்புகளால உங்களுக்கும்; உங்களால உங்க உடன்பிறப்புங்களுக்கும் நல்லது நடக்கப் போகுது! ஆனா எதுலயும் அவசரப்படாம, கோபப்படாம, நிதானமா நடந்துக்கங்க. மாதா புவனேஸ்வரி மாணவர்களை எல்லாம் பாஸ் பண்ண வெச்சிடுவா!

மோதிரத்தைப் பெற்ற சீதா பிராட்டியின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? அதிலும் ராமநாமம் பதிக்கப்பட்ட கணையாழி அல்லவா?

வாங்கிக் கொண்டவள், ஆஞ்சநேயனை வாயார, மனதார வாழ்த்துகிறாள்.

"ஹே, வானரோத்தமா! நீ ஒருவன் மட்டுமே செய்யக்கூடிய அருஞ்செயல் இது! ஒருவரும் புகமுடியாத இந்த இலங்கையிலே புகுந்திருக்கிறாய். உனது பராக்கிரமத்தை எத்தனை

# ஸ்ரீராம பக்த ஹனுமான்

பாராட்டினாலும் போதாது. நூறு யோசனை அகலம் அந்த சமுத்திரம். அதை எப்படிக் கடந்து வந்தாய்! வல்லமையுடன் புத்தியும் நிறைந்தவன் நீ. இந்த அரிய செயலைச் செய்த உன்னைப் பார்த்தால் நீ சாமானியமான வானரம் அல்ல என்பது புரிகிறது."

கம்பர் பாடலில் இந்தப் பாராட்டு எவ்வாறு பின்னி வருகிறது என்று பார்ப்போமா...?

*பாழிய பணைத்தோள் வீர!*
*துணையிலேன் பரிவு தீர்த்த*
*வாழிய வள்ளலே! யான் மறுவிலா*
*மனத்தேனென்னின்*
*ஊழியோர் பகலாயேதும் யாண்டு*
*எலாம் உலகம் ஏழும்*
*ஏழும் வீவுற்று ஞான்றும், இன்று என*
*இருத்தி என்றாள்.*

- "ஏழும் ஏழுமாகிய பதினான்கு லோகங்களும் அழிந்து போனாலும் நீ இன்றுபோல் என்றும் சிரஞ்சீவியாக இருப்பாய்" என்று ஹனுமானை சீதாபிராட்டி வாழ்த்துகிறாள் கம்பராமாயணத்தில்.

அவள் திருவாக்கு எத்தனை அழகாய் பலித்திருக்கிறது! ஆராதனைக்கும் உபாஸனைக்குமுரிய தெய்வ நிலையில் அல்லவா இன்று ஆஞ்சநேயனை வைத்துக் கொண்டாடுகிறோம்.

மோதிரத்தைக் கொடுத்தாயிற்று. சீதையும் ஹனுமான் ராமதாஸன்தான் என உணர்ந்து நம்பிக்கையும் மகிழ்ச்சியும் கொண்டு அவனை வாழ்த்திவிட்டாள். அதைத் தொடர்ந்து இருவருக்கும் நடக்கும் உரையாடல் மிகச் சுவையானது!

சீதை ஹனுமானைப் பார்த்துக் கேட்டாளாம்- "என்னைப் பிரிந்திருந்த நாட்களில் ஸ்ரீ ராமபிரானுக்கு என் ஞாபகம் வந்ததா?" என்று!

உடனே தலைக்குமேலே கைகளைக் கூப்பிக் கொண்டு விட்டாராம் ஹனுமான்.

"தேவி! இந்தக் கேள்விக்கே அவசியம் இல்லை. தாங்கள் இவ்விடத்தில் இருப்பது இதுவரை ஸ்ரீராமனுக்குத் தெரியாமல் போய்விட்டது. ஆதலால்தான் உங்களை இன்னமும் மீட்க வரவில்லை. இவ்விடத்திலிருந்து நான் திரும்பிச் சென்றதுமே அவர் வானர சேனையுடன் புறப்பட்டு வந்து ராவண சம்ஹாரம் செய்து உங்களை மீட்டுச் செல்வார். உங்களைப் பிரிந்த நாளாக அவர் உணவு உண்பதில்லை; உறக்கம் கொள்ளவில்லை. மனம் முழுதும் உங்கள் நினைவாகவே இருப்பதால் அவர் உடலில் அமரும் ஜந்துக்களைக்கூட அவர்

## திருவரங்கத்தில் திருவடி ஆஞ்சனேயர்

ரங்கவிலாஸ், கடைகளுக்கு இடையில் திருப்பாணாழ்வார் ஸந்நிதியில் ஆஜானுபாஹுவாகக் காணப்படும் வீர ஆஞ்சனேயர் மிகவும் வரப்ரஸாதி. உள்ளே நுழைந்து த்வஜஸ்தம்பத்துக்கு முன்பாக வலதுபுறம் பார்த்தால் குன்றின் மேல் அமர்ந்தது போலே உயரத்தில் வீற்றிருக்கும் ஹனுமான். விசேஷ திருமஞ்சனம், வடைமாலை- இவற்றை ஏற்று அருள்பாலிக்கும் ஆஞ்சனேயர் இவர்.



ஓட்டிவிடுவதில்லை. நல்ல மலர்களையோ கனிகளையோ கண்டால் உங்களைப் பற்றிய நினைவு மிகுந்தெழ அரற்றுகிறார். அல்லும் பகலும் உங்கள் நினைவில்தான் கழிகின்றன...'' என்று சீதையின் மனத்துக்கு ஆறுதல் கூறுகிறான் ஹனுமான்.

ஆதுரம் ததும்ப ஆறுதல் சொற்கள் பேசினால் கேட்போர் மனம் என்ன விசித்திரமான பிரதிபலிப்பை அடைகிறது பாருங்கள்–சீதை சொல்கிறாளாம்:

''ஆஞ்சனேயா! நீ சொல்வதைக் கேட்டால் எனக்கு ஒரே சமயத்தில்

18

**கல்யாணபுரம்**
**ஆராவமுதன்**

அமுதம், விஷம் இரண்டையும் அருந்தியது போலிருக்கிறது. என்னைப் பிரிந்தும் அவர் என்னை மறவாதிருக்கிறார் என்ற செய்தி அமுதமாக இனிக்கிறது. ஆனால் அந்தப் பிரிவினால் அவர் உடலும் மனமும் வாடி வருத்துவதை அறியும் போது கொடிய நஞ்சை அருந்தியது போலிருக்கிறது.''

சீதையின் துயரப் பெருக்கைக் காணச் சகியாத ஹனுமான் அவசரமாக அவளிடம் கூறுகிறான்:

''அம்மா! இந்த க்ஷணமே என் முதுகில் ஏறி உட்காருங்கள். உங்களை விரைந்து ராமனிடம் அழைத்துச் சென்று விடுகிறேன்.''

அப்போதுதான் சீதாபிராட்டி ஹனுமானைப் பார்த்துக் கேட்டாளாம்:

''இத்தனை சிறிய உருவத்துடன் கூடிய நீ என்னை எப்படியப்பா தூக்கிச் செல்வாய்? மேலும், நீ என்னை அழைத்துச் செல்வதைப் பார்த்துக் கொண்டு அரக்கர்கள் பேசாமலிருப்பார்களா? உன்னையும் என்னையும் சேர்த்தல்லவா காப்பாற்றிக் கொள்ள வேண்டியிருக்கும்!''

இதைக் கேட்டதும் ஹனுமானுக்கு மனம் குறுகிப்போய்விட்டதாம்! பரிபவப்பட்டுப் போயிற்றாம்!

''சித்தயாமாஸ லக்ஷ்மிவான் நவம் பரிபவம் க்ருதம்''

என்கிறார் வால்மீகி.

இத்தகைய அவமானம் ஹனுமான் இது வரை அறியாத ஒன்றாம். ஹனுமானை 'லக்ஷ்மீவான்' என்று இங்கே குறிப்பிடுகிறார் வால்மீகி.

அதாவது, அவன் சாதாரண வானரம் அல்ல. சகல சௌபாக்யங்களும் தர வல்லவன் என்று பொருள். ராமனுக்கு வெற்றியைத் தேடித் தந்தவன் அவன்தானே.

ஸ்ரீ ராமனின் ஸ்தய்ம், பராக்கிரமம்; அதே போல் சீதையினுடைய கற்பின் உயர்வு– ஆகியவற்றை உலகுக்குக் காட்டியவனாதலால் அவன் லக்ஷ்மீவான் ஆகிறான். அவ்விருவரும் இணைவதற்குக் காரணமாயிருப்பதால் அவன் லக்ஷ்மீவான் ஆகிறான்.

சீதையின் சந்தேகத்தைப் போக்குவதற்காக அந்த லக்ஷ்மீவான் ஒரு காரியம் செய்தான். தனது சிறு உடலைப் பெரிதாக்கி விச்வரூபி போல நின்றான்.

அதைக் கண்டு சீதை வியந்து போனாள் என்று சொல்லத் தேவையில்லை. ஹனுமானின் தெய்வாம்சம் உணர்ந்தவளாகப் பேசுகிறாள்:

''ஆஞ்சநேயா நீ மிகவும் பராக்கிரமசாலி என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதற்காக நான் உன்னுடன் வருவேனாகில், அது ஸ்ரீ ராமனுக்குப் பெருமை சேர்க்கும் காரியமாக இராது. அவர் தமது புஜ பல பராக்கிரமத்தைக் காண்பித்து ராக்ஷஸர்களை வென்று என்னை அழைத்துப் போகட்டும்'' என்று முடிவு செய்து விடுகிறாள்.

அந்த தருணத்தில் ஹனுமான் சீதா தேவியிடம் அவளது அடையாளமாக ஒரு பொருளைத் தரும்படி கேட்கிறான். ஸ்ரீ ராமனிடமிருந்து கணையாழியைக் கொண்டு வந்து சேர்த்ததுபோல் அவளிடமிருந்து ஓர் அடையாளப் பொருள் எடுத்துப் போகவேண்டும் என்கிறான்.

இந்த வேண்டுகோள் சீதையினுள் ஞாபக அலைகளை எழச் செய்து மனக்காட்சிகளை விரிக்கிறது.

அன்பின் இலக்கணமான அவர்களுடைய இல்லறத்தில்தான் எத்தனையெத்தனை ஞாபக மடல்கள் விரிந்து கொண்டே போகின்றன!

அவற்றுள் ஒன்றை ஹனுமானிடம் விவரிக்கிறாள் சீதா தேவி. லக்ஷ்மணனுக்குக் கூட தெரியாத வரலாறு அது. மிக அந்தரங்கமான காட்சிதான். ஆனால் செவிமடுக்கும் நபர் அன்னியனல்ல; வாத்ஸல்ய பக்தியின் வடிவமான ஹனுமான். அவன் கேட்க அவள் சொன்ன சம்பவத்தைப் பாருங்கள்

---

**''நம்ம பையன்கிட்டே கிரிக்கெட்டைப் பத்தி பேசாதீங்கன்னு அடிச்சுக்கிட்டேனே... கேட்டீங்களா!''**

**''ஏன்... என்னாச்சு?''**

**''ஏன்டா எல்லா பாடத்திலேயும் ஃபெயில் ஆகியிருக்கேன்னு கேட்டதுக்கு விடும்மா... அதை நான் மறக்க விரும்பறேன்கிறான்!''**

**– புளியரை கணேசன்**



## அருள்வாக்கு



ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதற்கு வைத்தியம் செய்வதுதான் மதம். ஒரு நோயாளிக்கு இன்ன வியாதி வந்திருக்கிறது, அது இன்ன மருந்தைத் தந்தால் சௌஸ்தமாகும் என்பது வைத்தியனுக்குத்தான் தெரியும். தங்களுக்கென்று ஒரு பொருளையும் தேடிக் கொள்ளாமல், பரமத்தியாகத்துடன் லோகக்ஷேமத்தையே நினைத்த ரிஷிகள், தர்ம சாஸ்திரக்காரர்கள் அப்படித் தந்திருக்கிற மருந்துதான் நமது சநாதன தர்மம். மற்ற தேசங்களில் வேறு வைத்தியர்கள் வேறு மதங்களை மருந்தாகத் தந்திருக்கிறார்கள். நம் உடம்புக்கு மருந்து தருகிற டாக்டரிடம் அந்த டாக்டர் அப்படி டிரீட்மெண்ட் செய்கிறார், நீங்கள் இப்படிச் செய்கிறீர்களே!' என்றால் அவர் கேட்டுக் கொண்டிருப்பாரா? வைத்திய சாஸ்திரத்தில் பல தினுசுகள் உண்டு. ஒன்றில் கடும்பத்தியம் இருக்கும்; ஒன்று லகுவாக இருக்கும். ஒன்றில் மருந்து கசக்கும்; இன்னொன்றில் தித்திக்கும். இதையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று சொல்லாமல் அவரவரும் எந்த வைத்திய முறையை மேற்கொள்கிறார்களோ அதையே விடாமல் பின்பற்றினால், எந்த முறையிலும் சௌஸ்தம் அடையலாம்.

அஹிம்ஸை, சத்தியம், தூய்மை, புலனடக்கம், தேவைக்கு அதிகமாக ஒரு துரும்பைக் கூடத் தனக்கென வைத்துக் கொள்ளாமலிருப்பது, தெய்வ பக்தி, மாதா பிதாவிடம் விசுவாசம், சகல ஜீவராசிகளிடத்திலும் சமமான அன்பு- இவை எல்லாம் எல்லாருக்கும் நம் மதத்தில் விதிக்கப்பட்ட 'ஸாமான்ய தர்மங்கள்'.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

சித்திரக்கூடத்தில் சீதையின் மடியிலே தலைவைத்து ஸ்ரீராமன் படுத்திருக்க, ஜயந்தன் என்ற காகம் தேவியைத் துன்புறுத்தியது. அவள் சகித்திருந்தபோதும் ஸ்ரீ ராமனின் துயில் கலைந்தது. ஸ்ரீராமன் தனது ஆசனத்தின் கீழிருந்த தர்ப்பையை எடுத்து பிரும்மாஸ்திரமாகப் பிரயோகித்தான். அது காகத்தை மூவுலகங்களிலும் துரத்திச் சென்று இறுதியில் ஸ்ரீ ராமனிடமே சரணாகதி அடையச் செய்தது. ஸ்ரீ ராமபிரான் கருணையுடன் காகாசுரனுக்கு உயிர்ப்பிச்சையளித்து ஒரு கண்ணை மட்டும் பறித்துக் கொண்டார்.

இந்த வரலாறை ஸ்ரீ ராமனிடம் நினைவூட்ட வேண்டும் என்று ஹனுமானைக் கேட்டுக் கொள்கிறாள் சீதாபிராட்டி. "நினைவூட்டி, ஒரு மாதத்துக்கு மேல் என்னால் உயிர்வாழ முடியாது என்று சொல்லிவிடு'' என்கிறாள். ஹனுமானும் இந்தச் செய்தியுடன் சீதையின் சூடாமணியையும் பெற்றுக் கொண்டு புறப்படுகிறான். புறப்படுமுன் தேவியை வணங்கிவிட்டுக் கிளம்புகிறான்.

ராமாயணத்தின் இதே கட்டத்தை பெரியாழ்வார் அனுபவமாகப் பார்க்கையில் வேறொரு அழகான கதை கிடைக்கிறது. ஸ்ரீராமன், ஹனுமானிடம் சொல்லியனுப்ப, அதை அவன் சீதையிடம் கூறுவதாக வரும் கதை. பாலகாண்டம் தொடங்கி பல நிகழ்ச்சிகளைச் சொல்லிக் கொண்டே வந்த ஹனுமான், ஸ்ரீ ராமன் அளித்த மோதிரத்தைக் கொடுத்துவிட்டுச் சொன்ன அக்காட்சி இதோ:

ராமனும் சீதையும் பஞ்சணையில் அமர்ந்திருக்க, ராமபிரான் தன்னைவிட்டுப் பிரிந்துவிடாமலிருக்க வேண்டும் என்று சீதாபிராட்டி மல்லிகை மாலைகளால் அவனைக் கட்டிலோடு சேர்த்துக் கட்டிப் போட்டாளாம்!

*அல்லியம்பூ மலர்க்கோதாய்!*
*அடி பணிந்தேன் விண்ணப்பம்*
*சொல்லுகேன் கேட்டருளாய்*
*துணைமலர்க்கண் மடமானே!*
*எல்லியம்போதினி திருந்தல்*
*இருந்ததோரிடவகையில்*
*மல்லிகைமாமாலை கொண்டாங்*
*கார்த்ததும் ஓர் அடையாளம்*

- பெரியாழ்வார் பாசுரமாய் அமைந்த ஆஞ்சனேயன் வாக்கு இது!

(வளரும்)



# அன்புடன்

அம்மாவின் பிரெயின்ட்யூமர் ஆபரேஷனுக்குத் தேவைப்படும் இரண்டு லட்ச ரூபாயைத் திரட்ட, தன் ஓவியங்களை பிளாட்ஃபாரமில் போட்டு விற்க வருகிறான் சத்யா. மோனாலிசாவின் மர்மப் புன்னகைபோல, அவன் வாழ்க்கைக்குள் நுழைகிறாள் திலோத்தி.

மரணப்படுக்கையில் இருக்கும் அம்மாவையே மறந்துவிடும் அளவிற்குத் திலோத்தியை இதயத்தில் வரைந்து கொள்ளும் ஓவியனுக்கு, நவீன ஓவியம் போல புலப்பட மறுக்கிறாள் அவள்.

காரணம் தெரிய வருகிறபோது ஓவியனுக்குமட்டுமல்ல, ரசிகர்களுக்கும் இதயம் உடைந்து நொறுங்குகிறது. புதிய இயக்குனர் இந்திரகுமாருக்கு நல்ல பிள்ளையார் சுழி!

ரவுடிகள், சத்யாவைப் புரட்டியெடுக்க, "எங்க அண்ணனை ஏண்டா அடிக்கிறீங்க" என்று கதறும் தங்கையிடம் "அவன் இனிமே திலோத்தியைத் திரும்பி கூட பார்க்கக் கூடாது" என்று எச்சரிக்க, ரத்தவெள்ளத்தில் கிடக்கும் சத்யா திடீரென எழுந்து, தன்னை அடித்துத் துவைத்தவர்களிடமே 'உனக்குத் திலோத்தியை தெரியுமா? அவ எங்க இருக்கா... ப்ளீஸ் சொல்லுடா?' என கெஞ்சுகிறபோது சபாஷ் போட வைக்கிறார்.

ஓவியனாக வரும் அருண்குமார், அஜித், விஜய் வரிசையில் இடம் பிடிக்க, கைகொடுத்திருக்கிறது படம்.

தன் அரசவை ஓவியனிடம் தாஜ்மஹாலின் மாடலை வரைந்துவரச் சொன்ன ஷாஜஹானை நினைவுபடுத்தும் வில்லியம்ஸ் பாத்திரம் நறுக்.

மாடல்தான் என்றாலும் ரம்பாவை குட்டைப் பாவாடையில் உலவவிட்டிருப்பதை இயக்குனர் தவிர்த்திருக்கலாம்.

காலையில் வருவதாகச் சொன்ன திலோத்தியை சந்திக்க, நடுராத்திரியில் கோவிலைத் திறக்கச் சொல்வது சினிமேட்டிக்.

'அந்தச் சூரியனை' பாடலில் மட்டும்தான் அறிமுக இசையமைப்பாளர் ஜெய் தெரிகிறார்.

ஆர்.டி. அண்ணாதுரையின் படத்தொகுப்பு தேமே என்று சோம்பல் முறிப்பதால், இழுவையாகத் தெரியும் சில காட்சிகளை நீக்கிவிட்டுப் பார்த்தால், அன்புடன் ரசிகர்கள் இதயத்தில் இடம் பிடிக்கும்.

**— விஷ்வல்தாசன்**

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

